## பாடப்பகுதி (Unit) 1. தமிழ் எழுத்துக்களும் எழுத்துப் பழக்கங்களும்

### படிப்பு நோக்கம்

★ இப்பாடத்தின் வழியாகத் தமிழ் நெடுங்கணக்கிலுள்ள எழுத்துக்களை ஒரு வகைதொகையாக நினைவுபடுத்திக் கொள்ளலாம்.
★ எழுத்துக்களின் காலஅளவு, பிறப்பு, வரிசைமுறை, ஒலிப்பு முறைகளைத் தெளிவுபடுத்திக் கொள்ளலாம்.
★ தனியே நிற்கும் எழுத்து, சொல்லிடையே நிற்கும் எழுத்து இவற்றினிடையே தோன்றும் வேறுபாடுகளைத் தெரிந்து கொள்ளலாம்.
★ தமிழில் மொழி முதல் இடை இறுதியில் வரும் எழுத்துக்கள் பற்றிய வரன்முறைகளை அறியலாம்.
★ பிறமொழிச் சொற்கலப்பும் ஒலிக்கலப்பும் பற்றிய மரபுகளை விளங்கிக் கொள்ளலாம்.

### பாடக்கருத்தலகுகள்

## 1.0 பாடமுன்னுரை

தமிழ்மொழியிலுள்ள எழுத்துக்களையும் அவற்றைக் கையாளும் பழக்கங்களையும் இம் முதல்பாடத்தின் மூலம் உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறோம். ஒரு மொழியை நாம் எதற்காகக் கற்கிறோம்? நாம் சொல்வதையும் எழுதுவதையும் திறமையோடு, ஆற்றலோடு, நன்கு பழகிய பழக்கத்தோடு சொன்னால்தான் அவற்றைப் பிறர் ஏற்குமாறு சொல்லமுடியும். அதைப்போலப் பிறர் சொல்வதையும் எழுதுவதையும் நாம் நன்கு விளங்கிக்கொள்ளவும் இப் பயிற்சி உதவும்.

மொழியைக் கற்பதென்பது, அதனோடு பழகிக்கொள்வது பற்றியதே. ஒரு மொழியின் இயல்புகளையும் நன்கு பழகிக் கொண்டால், அதன்வழி உணர்த்தப்படும் கருத்தைப் புரிந்து கொள்வது எளியதாகும்.

நீங்கள் தொடர்ந்து படிக்கப் போகும் இப்பாடங்கள், உங்களுக்குத் தமிழ்மொழியுடன் நல்ல பழக்கத்தை ஏற்படுத்தும். ஒரு நல்ல நண்பரை அறிமுகப்படுத்துவது போலவே இவை உங்களுக்கு என எழுதப்படுகின்றன. இம் முதல்பாடம் உங்களுக்கு முன்பு தெரிந்தவைகளையே மீண்டும் நினைவூட்டுகிறது. முன்பு பார்த்துப் பழகிய ஒருவரைப் புதுமுறையில் — புதிய சூழலில் கண்டு நினைவு படுத்திப் பழகுவதுபோல் இது காணப்படும்.

## 1.1 தமிழ் நெடுங்கணக்கு

திண்ணைப் பள்ளிக்கூடத்தில் 'அரிச்சுவடி' என்பார்கள். முன்பு பனை ஓலைகளாலாகிய ஏட்டில் அ, ஆ எனத் தமிழ் எழுத்துக்கள் எழுதியிருக்கும். அதனை மனப்பாடம் செய்யும் பள்ளிப் பிள்ளைகள் மணலில் ஆனா, ஆவன்னா, ஈனா, ஈயன்னா எனப் பாடுவது போல் சொல்லிக் கொண்டே அ, ஆ, இ, ஈ என்ற எழுத்துக்களை வரிவரியாக எழுதிக் கொண்டிருப்பர். இதற்கு **'முறைவைத்தல்'** என்று பெயர். ஒவ்வொரு நாளும் காலையில் பள்ளி தொடங்கியதும் முதல்வேலை முறைவைப்பதுதான்.

தொடக்கப்பள்ளிக்கு மேல் படிக்கப் போகும் போது இவற்றை அகர வரிசை, நெடுங்கணக்கு என்பர். முன்பு கணக்கு என்றால் நூல், இலக்கியம் என்று பொருள். அவை எல்லாவற்றுக்கும் அடிப்படை எழுத்துக்களே ஆதலால், அந்த 'அகரவரிசை'யை **நெடுங்கணக்கு** என்றனர்.

நெடுங்கணக்கிலுள்ள அகரவரிசைகள் ஒலிகளாகும். அவை பொருள்தரவல்ல ஒலிகளாகும். பொருட் தொடர்புள்ள சொற்கள், தொடர்கள், வாக்கியங்கள் போன்ற நிலையில்தான் நாம் ஒரு மொழியை இயற்கையாகப் பேசுகிறோம். நம் வசதிக்காகத்தான் மொழியைச் சொற்களாகவும் சொற்களை ஒலிகளாகவும் பிரித்துப் பார்க்கிறோம். அவ்வாறு பார்க்கும் பொழுது மொழியிலுள்ள மிகச்சிறிய உறுப்பாக அமைவன ஒலிகளே. ஓர் ஒலி ஒரு பொருளைத்தர உதவ வேண்டும்.

மனம்-மணம், கல்-கள், கரை-கறை

ன், ண், ல், ள், ர், ற் என்பன வெவ்வேறு ஒலியன்கள் — எழுத்துக்கள் ஆகும். ஏன்? இவை பொருள் வேறுபடுத்தும் ஒலிகளாக உள்ளன. மனம் என்பதிலுள்ள 'ன' வை மாற்றி 'ண' ஆக்கி விட்டால் பொருள் மாறிவிடுகிறது. எனவே தமிழில் ன வேறு எழுத்து, ண வேறு எழுத்து என்பதில் ஐயமில்லை. இவை வெவ்வேறு **ஒலியன்கள்** எனப்படும்.

மனிதனால் எழுப்ப இயலும் எல்லா ஒலிகளும் ஒரு மொழியில் இடம் பெறுவதில்லை. ஒவ்வொரு மொழிக்கென்று சிறப்பாகவும் சில ஒலிகள் உள்ளன. மொழியில் உள்ள ஒலிகளையே வரிவடிவில் எழுதிக்காட்டுகிறோம். மொழியிலுள்ள எல்லா ஒலிகளுக்கும் நாம் எழுத்து வடிவம் அமைப்பதில்லை பொருளை வேறுபடுத்தும் ஒலிகளுக்கு மட்டும் எழுத்துக்கள் அமைப்பதே சிக்கலான முறை. இவ்வாறு பொருளை வேறுபடுத்தும் ஒலிகளை ஒலியன்கள் என்பர். தமிழ் எழுத்து என்பது தமிழ் மொழியிலுள்ள பொருளை வேறுபடுத்தும் ஒலிகளை அதாவது ஒலியன்களை மட்டும் குறிக்கும்.

### *1.1.1 முதல் எழுத்துக்கள்*

தமிழில் அடிப்படையானவை உயிரும் மெய்யும் ஆகிய 30 எழுத்துக்கள் மட்டும். தமிழில் தனி எழுத்தும், சொல்எழுத்தும் உச்சரிப்பதில் வேறுபடுவதில்லை. க-ட-லை. இவை தனியே சொன்னாலும் சொல்லில் வைத்துச் சொன்னாலும் ஒலி வேறுபடுவதில்லை. சொல்லில் வைத்துச் சொல்லும் போது வேறுபடும் ஒலிகள் மிகச் சிலவே.

| | |
|---|---|
| உயிரெழுத்துக்கள் இரண்டு வகைப்படும் | அ இ உ எ ஒ — குறில் 5<br>ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ — நெடில் 7 |
| மெய்யெழுத்துக்கள் மூன்று வகைப்படும் | க ச ட த ப ற — வல்லெழுத்து, வல்லினம், வலி — 6<br>ங ஞ ண ந ம ன — மெல்லெழுத்து, மெல்லினம், மெலி—6<br>ய ர ல வ ழ ள — இடையெழுத்து, இடையினம், இடை—6 |

### *1.1.2 சார்பெழுத்துக்கள்*

உயிரும் மெய்யும் ஆகிய முதல் எழுத்துக்களைச் சொல்லில் வைத்து ஒலிக்கும் போது ஒலிப்பும் புணர்ச்சியும் வேறுபடுவனவற்றைச் சார்பெழுத்துக்கள் என்றனர். ஆய்த எழுத்தும் வல்லோசையை மென்மைப்படுத்தவே பெரிதும் பயன்பட்டுள்ளது.

தொல்காப்பியர் குறிப்பிடும் சார்பெழுத்துக்கள் மூன்று; குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்பன அவை.

பிற்காலத்தார் குறிப்பிடும் சார்பெழுத்துக்கள் பத்து: உயிர்மெய், ஆய்தம், குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக்குறுக்கம், உயிரளபெடை, ஒற்றளபெடை என்பன அவை.

**நினைவுபடுத்திக் கொள்ளுங்கள்**

1. மொழி என்று நாம் பேசுவதைப் பல ஒலிகளாகப் பிரித்துப் பார்க்கலாம்.
2. மனிதனால் எழுப்ப இயலும் எல்லா ஒலிகளும் ஒரு மொழியில் இடம் பெறுவதில்லை.
3. ஒவ்வொரு மொழிக்கென்றும் சிறப்பான சில ஒலிகள் உள்ளன.
4. மொழியிலுள்ள ஒலிகளை வரிவடிவில் எழுதிக் காட்டுகிறோம்.
5. மொழியிலுள்ள எல்லா ஒலிகளுக்கும் நாம் எழுத்து வடிவம் அமைப்பதில்லே. பொருளை வேறுபடுத்தும் ஒலிகளுக்கு மட்டும் எழுத்துக்கள் அமைப்பதே சிக்கனமான முறை.
6. பொருளை வேறுபடுத்தும் ஒலிகளை ஒலியன்கள் என்பர்.
7. தமிழில் சார்பெழுத்துக்கள் என்பன பொருளை வேறுபடுத்துவன அல்ல; சொல்லில் இடம்பெறும்போது ஏற்படும் ஒலிமாற்றங்கள் அல்லது ஒலித்திரிபுகளேயாகும். அவை பணர்ச்சி வேறுபடுமிடங்கள் உள.

8. தமிழில் முதல் எழுத்து தமிழ்மொழியிலுள்ள பொருளை வேறுபடுத்தும் ஒலிகளை அதாவது ஒலியன்களை மட்டும் குறிக்கும்.
9. சார்பெழுத்துக்களில் உயிர்மெய், ஆய்தம் இரண்டும் தனியெழுத்து வடிவம் உடையன; அளபெடைக்கு அடையாள எழுத்து உண்டு; பிறவற்றிற்கு இப்போது வரிவடிவ வேறுபாடு இல்லை.

**தன்மதிப்பீடு: 1. வினாக்கள்**

1. பொருளை வேறுபடுத்தும் ஒலிகளுக்குப் பெயர் யாது?
2. தமிழிலுள்ள முதலெழுத்துக்கள் யாவை? அவை ஏன் முதலெழுத்துக்கள் எனப்பட்டன?
3. தமிழிலுள்ள சார்பெழுத்துக்கள் யாவை? அவை ஏன் சார்பெழுத்துக்கள் எனப்பட்டன?

### 1.1.3 சுட்டெழுத்து, வினாவெழுத்து, போலி எழுத்து, இன எழுத்து

அ, இ, உ என்பன சுட்டெழுத்துக்கள் எனப்படுகின்றன. எ, ஏ, ஆ, ஓ, யா என்பன வினா எழுத்துக்கள்.

தமிழில் பூ, கா, ஈ, ஆ என ஓரெழுத்தொருமொழிகள் உள. அவைபோல அ, இ, உ, என்பன தனித்து நின்றே சுட்டுப்பொருளை உணர்த்திய காலம் உண்டு. இன்றும் திராவிட மொழிகளில் அ, இ, உ என்ற சுட்டெழுத்துக்களும் எ என்ற வினாவெழுத்தும் தனித்து நின்றே சுட்டுப்பொருளையும் வினாப்பொருளையும் உணர்த்துமிடங்கள் உள. தமிழில் இவை சுட்டு, வினா அடிப்படையில் பல்வேறு சொற்களாக வழங்குகின்றன.

**சுட்டுச்சொற்கள்**

அவன் இவன் (உவன்)
அது இது (உது)
அவர் இவர்
அந்த இந்த
அங்கே இங்கே (உங்கே, ஊங்கு)
அப்படி இப்படி

இவை இவ்வாறு ஒரு பொருளை உணர்த்தவே பயன்படுவதால் சுட்டெழுத்து, வினாவெழுத்து எனப்பட்டன. அ, இ, உ, எ, ஏ என்பன உயிர்களே. ஆயினும் அடிக்கடி பயன்படும் தன்மைநோக்கி இவை பெயரிடப்பட்டுள்ளன. அ, இ, உ, தனித்து நின்றே சுட்டுப்பொருள் உணர்த்தும்போது, சுட்டுச்சொல் ஆகிவிடுகின்றன ; ஆனால் தமிழில் அவை அவ்வாறு வழங்காமல் சுட்டுச் சொற்களுடன் சேர்ந்து நின்றே வழங்குகின்றன.

**வினாச்சொற்கள்**

வந்தானா (ஆ)
வந்தானோ (ஓ)
வந்தானே (ஏ)
என், எவன், எது, எவர், எந்த, எங்கே, எப்படி (எ)
ஏது, ஏவன்(ஏ)
யாவை, யாவின், யாது, யாங்ஙனம் (யா)

இவ்வாறு வினாஎழுத்துக்கள் இடம்பெறுகின்றன. 'யா' என்று வினவும் பொழுது அஃது ஓரெழுத்து ஒருமொழியாகிவிடுகிறது.

**போலி எழுத்து**

ஒரு சொல்லில் ஓரெழுத்து நிற்க வேண்டிய இடத்தில் பிறிதோர்

எழுத்து வந்தாலும் பொருள் வேறுபடாதிருப்பது. சில சொற்கள் தொன்றுதொட்டு இவ்வாறு வழங்கிவருகின்றன.

அறம் — அறன்
மரம் — மரன் } ம் எழுத்துக்கு ன் போலி.

**இன எழுத்து**

பிறப்பாலும் ஒலிப்பாலும் புணர்ச்சிவிதியாலும் ஒன்றற்கொன்று இனம் என்று கருதப்படும் எழுத்து இன எழுத்து எனப்படும்.

உயிர்: குறிலுக்கு நெடில் இனம்
மெய் : வல்லினம் ஆறுக்கும் முறையே மெல்லினம் ஆறும் இனம், இடையினம் ஆறும் ஓரினம்.
அவுக்கு ஆ இனம்; க் எழுத்துக்கு ங் இனம் என இவ்வாறு காண்க.

## 1.2 ஒலிமயக்கம் தரும் எழுத்துக்கள்

தமிழில் ஒலி மயக்கம் தரும் எழுத்துக்கள் சிலவுள. அவை வருமாறு:

ர ற
ந ன ண
ல ள ழ

இவை பிறக்குமிடத்தை அறிந்து உச்சரிக்க வேண்டும். தமிழ் நன்றாகப் பேசவராதவனை 'என்ன இவன் ? ரகர றகரம் தெரியாதவன்' என்று கேலி செய்வார்கள்; 'ல, ழ வரவில்லையே' என்று வருத்தப்படுவார்கள்.

இவற்றைத் தமிழ்நாட்டிலுள்ள எல்லாப் பகுதி மக்களும் ஒரே மாதிரியாக உச்சரிப்பதில்லை. 'வாழைப்பழம்' என்பதைச் சரியாக, அழுத்தமாக உச்சரிப்பவர்களும் உண்டு; 'வாளப்பழம்' என்பவர்களும் உண்டு; 'வாயப்பயம்' என்று பயமுறுத்துபவர்களும் உண்டு.

என்றாலும் மேடையிலும் வானொலியிலும் தொலைக்காட்சியிலும் இசை, நாடகம் போன்ற கலைத்துறைகளிலும் பயன்படுத்தும் பொதுத்தமிழில் இவ்வொலிகளைத் தெளிவாக உச்சரிக்கின்றனர். அதனால் எழுதும் பொழுதும் பிழை நேராமல் எழுதுகின்றனர்.

இவற்றைத் தெளிவாக உச்சரிக்கவில்லையென்றால் பொருள் தெளிவின்மை, நேர்த்தியின்மை போன்ற குறைகள் ஏற்படுவதுடன் பிறர் ஏளனத்திற்கும் ஆளாக நேரிடும். எழுதும் போது, எழுத்துப்பிழைகள் நேர்வதற்கும் இதுவே காரணமாகும். எனவே இந்த ஒலிகளைச் சரியாக உச்சரிக்கும் முறைகளை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்; உச்சரித்துப் பழகிக் கொள்ள வேண்டும்.

சில ஒலிப்புப் பயிற்சிகள் கீழே தரப்பட்டுள்ளன. இவை நாட்டுப்புறத் திண்ணைப் பள்ளிக்கூடங்களில் விளையாட்டுப்போல் ஒலிப்புப் பயிற்சி செய்யப்பயன்பட்டனவாகும்.

கடலிலே மரவுரல் உருளுது பிறழுது

வாழைப் பழம் அழுகிக் கொழகொழத்து
நழுவிக் கீழே விழுந்தது

தேர் உருளத் தேங்காய் உருளத்
தேரடி மணி நுனி உருள

ஓடும் நரிகளில் ஒரு நரி கிழநரி
கிழநரி முதுகினில் ஒருபிடி நரைமயிர்

அடடா கடலாடி வெள்ளைக்கோழி
கிழடல்ல மலடல்லவே

இவை நா பிறழ் பயிற்சியாகும். சொல்லிச் சொல்லிப் பிறழும் நா பிறகு தனியெழுத்துக்களை நன்கு உச்சரிக்கும். இதனால்தான் 'செந்தமிழ் நாப் பழக்கம்' என்றார் ஔவையார்.

### 1.2.1. ர,ற

ர

இதை இடையின ஒலி என்பர். இதன் உச்சரிப்பை விளக்குகிற முறையில் வருடொலி (Flap) என்றும் கூறுவர்.

நுனிநாஅண்ணத்தை ஒரு நொடியில் வருடி ஒரு தட்டோடு (Flap) நின்றுவிடுவதால் ர பிறக்கிறது.

இது பேச்சுத்தமிழில் மொழிமுதலில் வருகிறது; மற்றபடி மொழியிடையிலும் இறுதியிலும் நிற்கிறது.

| | | | |
|---|---|---|---|
| ராணி | மரம் | ஆர்ப்பு | ஏர் |
| ராகம் | கரி | மார்த்தல் | பார் |
| ரூபம் | வரகு | சர்க்கரை | வேர் |
| ரேவதி | கரை | நேர்த்தி | போர் |
| ரோகினி | நரை | தீர்ப்பு | |

ற

இதை வல்லின ஒலி என்பர். இதன் உச்சரிப்பை விளக்குகிற முறையில் ஆடொலி (Trill) என்றும் கூறுவர்.

நுனிநா அண்ணத்தின் நடுப்பகுதியை நோக்கி உயர்ந்து வேகமாக அதிர்கிறது. இந்த அதிர்வால் நுனிநா ஆடுகிறது. அதனால்தான் ஆடொலி என்ற பெயர் வந்தது.

இது மொழிஇடையில் வரும்; மொழியிறுதியில் உயிர் எழுத்துடன் சேர்ந்து வரும்.

| | | | | |
|---|---|---|---|---|
| அறம் | கறி | சேறு | சூறாவளி | கன்று |
| மறம் | சுறா | சோறு | கறவை | பன்றி |
| புறவு | பாறை | ஊற்று | உறவு | நன்று |

இவற்றை ஒலித்துப் பாருங்கள். இனி 'ற' கரம் இரட்டித்து வரும் இடங்களையும் ஒலித்துப் பாருங்கள். நுனிநா அண்பல்லைப் பொருந்தி, அழுந்தி நின்று, சட்டென்று விடுபடுவதால் 'ற்ற' ஓசை பிறக்கும்.

கற்றை
காற்று
குற்றம்
சுற்றி
நாற்றம்
புற்று
மாற்று
குற்று

இவற்றை முறையே கத்தை, காத்து, குத்தம், சுத்தி, நாத்தம், புத்து, மாத்து, குத்து எனப் பேச்சு வழக்கில் ஒலிக்கக் காரணம், இவ்வழுத்தமான உச்சரிப்பின் விளைவேயாகும்.

ரகர, றகரங்கள் உச்சரிப்பு வேறுபாடும் பொருள் வேறுபாடும் உடையன என்பதைக் கீழ்வரும் உதாரணங்களைப் படித்துத் தெளிவு பெறுங்கள்.

| ர | ற |
|---|---|
| அரம் | அறம் |
| அரை | அறை |
| எரி | எறி |
| கரி | கறி |
| கரை | கறை |
| குரு | குறு |
| பொருத்து | பொறுத்து |
| பொருப்பு | பொறுப்பு |
| மரம் | மறம் |
| விரல் | விறல் |

இந்த ஒலிவேறுபாடு பற்றிய சிறுகதை ஒன்று கேரளத்தில் வழங்கிவருகிறது.

வெளிநாட்டுப் பாதிரியார் ஒருவர் புதிதாக மலையாள மொழி படித்தவர்; சமையலுக்காக அவர் மீன் வாங்கி வந்தார். வேலைக்காரியிடம் மீன் குழம்பு வைக்கத் தெரியுமா எனக் கேட்க எண்ணி, ''நீங்கள் மீன் குழம்பு வைக்க அறிவீர்களா?'' என்றாராம். அப்பாதிரியார் 'அரிவீர்களா?' என உச்சரிக்கத் தெரியாமல் கூறியதைக் கேட்டுத் தவறாகப் புரிந்து கொண்டு ''மீனை அரியாமல் எப்படிக் குழம்பு வைப்பது?'' என்றாளாம் வேலைக்காரி. பாதிரியார் விளங்காமல் விழித்தாராம். காரணம் அவருக்கு ர, ற, வேறுபாடு தெரியாததால் வந்த வினை இது. இந்தக் கதை, பொருள் வேறுபாடுடைய ஒலிகளை வேறுபடுத்தி ஒலிக்காவிட்டால் நிகழும் பொருள் விளக்கங்களை விளக்குகிறது அல்லவா?

***தன்மதிப்பீடு: 2***

*செய்முறைப்பயிற்சி*

கோடிட்ட இடத்தில், எதிரிலுள்ள பொருளுக்குப் பொருத்தமான ர அல்லது ற எழுத்தை எழுதி நிரப்புங்கள்:

1) அக்க— — ஆற்றின் மறுகரை
2) அக்க — — கவனம்
3) கு — — நாயின் ஒலி
4) கு — — நிறையின் எதிர்ச்சொல்
5) பொ — ப்பு மலை
6) பொ — ப்பு கடமை

உங்கள் கவனத்திற்கு

* மழையைப் பொறுத்து விளைச்சல் இருக்கும்.
  - இது போன்ற இடங்களில் பொறுத்து என்பதற்குப் பதிலாக பொருத்து என எழுதுவது தவறு.
* ர, ற வேறுபாடுகளை உணர்ந்து இலங்கைத் தமிழரும் கன்னியாகுமரி மாவட்டத்தினரும் நன்கு வேறுபடுத்தி ஒலிக்கின்றனர். இந்த இரண்டு இடங்களிலுமிருந்து வருபவர்கள் எப்படி வேறுபடுத்தி இவற்றை ஒலிக்கின்றனர் என்பதைக் கவனித்துக் கேளுங்கள்.
* இடையின 'ர'வும் வல்லின 'ற'வுமாகிய இவற்றை, எழுத்தை வைத்துச் சின்ன 'ர' பெரிய 'ற' என்று குறிப்பிடுவதைவிட சரியாக உச்சரித்துப் படிப்பது சிறந்தது.

### 1.2.2 ந, ன, ண,

இம்மூன்று ஒலிகளும் மெல்லினம் எனப்படும். இவற்றை மூக்கொலி என்றும் குறிப்பிடுவர்.

வல்லினம் பிறக்குமிடத்தில்தான் அவற்றுக்கு இனமான மெல்லினம் பிறக்கிறது.

த் பிறக்குமிடத்தில்தான் ந் பிறக்கிறது.
ற் பிறக்குமிடத்தில்தான் ன் பிறக்கிறது.
ட் பிறக்குமிடத்தில்தான் ண் பிறக்கிறது.

வல்லினத்திற்கும் மெல்லினத்திற்கும் காற்று வெளியேறுவதில் மட்டுமே வேறுபாடு; மூக்குவழி அடைத்திருக்க வாய் வழியே வரும் காற்று தடைப்பட்டு ஒலிப்பதனால் வல்லினம் பிறக்கிறது; வாய்வழி அடைத்திருக்க மூக்குவழியே வெளியேறும் காற்று தடைப்பட்டு ஒலிப்பதனால் மெல்லினம் பிறக்கிறது.

'ந்' என்பது எப்போதும் 'த'கரத்திற்கு முன் வரும்.

கந்தன் சந்தி பந்து பொந்து வந்தனை

கன்தன், பன்து என வருவதில்லை. தனியே ஒலிக்கும் பொழுது ன, ந என்பன வேறுபாடின்றியே உச்சரிக்கப்படுகின்றன. ஆனால் பந்து எனும்பொழுது 'த'வுடன் இயைபுடைய ஒலிப்பைக் கேட்கலாம்.

மொழி முதல் வருவது என்ற முறையிலும் 'ந' மட்டுமே இடம் பெறுகிறது. ன, ண மொழி முதலில் வருவதில்லை. ஆனால் மொழியிடையே ஒலிக்கும் 'ந்' எழுத்துக்கும் மொழி முதலில் வரும் 'ந்' ஒலிக்கும் வேறுபாடுள்ளது. பின்னது 'ன' போலவே ஒலிக்கிறது.

நாடு - னாடு
நாம் - னாம்

இரண்டையும் சொல்லிப் பாருங்கள். ஒன்று போலத்தான் ஒலிக்கிறோம். ஆயினும் மொழி முதலில் 'ந' எழுத்தையே பயன்படுத்துகிறோம். மலையாள மொழியில் னகரம், நகரம் என்ற இரண்டும் வரிவடிவில் ஒரே எழுத்தாக எழுதப்படினும் ஒலிப்பு நிலையில் வேறுபடுத்தப்படுகின்றன. தமிழில் னகரம் மொழியிடையிலும் மொழியிறுதியிலும் வரும்.

| | | | |
|---|---|---|---|
| கனி | நன்மை | அன்னை | ஏன் |
| இனம் | தன்மை | நன்னன் | கூன் |
| பனி | | | |
| மனம் | புன்செய் | மன்னன் | நான் |
| வானம் | நன்மணி | கன்னி | பேன் |
| வேனில் | | பொன்னி | பொன் |

நகரம், னகரம் இடம் பெறுவதால் பொருள் வேறுபடுமிடங்கள் பலவுள. அவற்றையும் நீங்கள் தெரிந்து கொள்வது நலம்.

இந்நாடு (இ + நாடு) - இன்னாடு (இன் + நாடு) இனிய நாடு
எந்நாடு (எ + நாடு) - என்னாடு (என் + நாடு) அல்லது
(என் + ஆடு)

முந்நாள் (மூன்று + நாள்) - முன்னாள் (முன் + நாள்)
தந்நலம் (தம் + நலம்) - தன்னலம் (தன் + நலம்)
பன்மை குறித்தது ஒருமை சுட்டியது

இம்மூன்று எழுத்துக்களையும் முறையே தந்நகரம் (த் அடுத்த ந்), றன்னகரம் (ற் அடுத்த ன்), டண்ணகரம் (ட் அடுத்த ண்) என்று குறிப்பதும் உண்டு. அது மிகவும் பொருத்தம். பெரும்பாலும் இவை ந்த, ன்ற, ண்ட எனச் சேர்ந்து வரும் சொற்களே மிகுதி.

ஒன்று தம்முடன் தாம் சேர்ந்து வரும்; அல்லது இவ்வாறு மெல்லினமும் வல்லினமுமாய்ச் சேர்ந்து வரும்.

| | | |
|---|---|---|
| பந்து | மூன்று | சுண்டு |
| சந்து | என்று | முண்டு |
| வந்தேன் | நின்றனன் | பண்டைக்காலம் |
| கந்தை | கன்று | வண்டு |
| விந்தை | தின்றேன் | கண்டேன் |
| தந்நலம் | என்னை | கண்ணன் |
| முந்நாள் | கன்னி | வண்ணம் |

ன, ண இடம் பெறும் சொற்கள் சில கீழே தரப்பட்டுள்ளன. பொருள் வேறுபாட்டையும் உச்சரிப்பு வேறுபாட்டையும் நினைவுபடுத்திக் கொள்ளுங்கள்.

| | | |
|---|---|---|
| நான்-நாண் | கானம்-காணம் | கனி-கணி |
| கான்-காண் | தினை-திணை | கன்னி-கண்ணி |
| என்-எண் | மனை-மணை | குன்று-குண்டு |
| ஊன்-ஊண் | கனை-கணை | நன்று-நண்டு |
| மான்-மாண் | கானல்-காணல் | மனம்-மணம் |
| மன்-மண் | தன்மை-தண்மை | கொன்று-கொண்டு |

**தன்மதிப்பீடு: 3**

பயிற்சி

அ. பொருத்தமானதை அடையாளமிட்டுக் குறிக்கவும்.

1) தன் + நலம் - தந்நலம்
தன்னலம்

2) முந்நீர் - மு + நீர்
முன் + நீர்

ஆ. பிரித்து எழுதுக:

பொன்னாடு, பன்னாட்டு வருகை, தென்னாடு, முந்நாள்

### 1.2.3 ல, ள, ழ

இவை மூன்றும் இடையின எழுத்துக்கள் எனப்படும். இவற்றை ஒலிப்பதில் சிலர் வேறுபாடின்றி உச்சரித்து இடர்ப்படுவர். நன்கு பழகினால் இவை தெளிவாக உச்சரிக்க வரும். 'ழகரம்' தமிழுக்குச் சிறப்பெழுத்து எனப்படும். அஃது ஒன்றே சில மாவட்டங்களில் பிறழ உச்சரிக்கப்படுகிறது. ஆயினும் இன்று வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் போன்றவற்றில் நன்கு உச்சரிக்கப்பட்டுப் பலரும் ஒழுங்காகவே ஒலிக்கின்றனர்.

அன்பல்லை நுனிநா வீங்கிப் பொருந்த ல வும் நுனிநா சிறிது வளைந்து அண்ண நடுவைப் பொருந்த ள வும் நாநுனி நன்கு வளைந்து நடு அண்ணத்தின் மிக அருகே வந்து, தொடாமல் உராய்ந்து வருட ழ வும் பிறக்கின்றன.

லகரம் மொழியிடையிலும் இறுதியிலும் வரும். மொழியிடையே தன்முன்தான் என இரட்டித்தும் பிற மெய்களுடன் சேர்ந்தும் வரும். பேச்சுத்தமிழில் மொழி முதலிலும் ஆள்கின்ற பழக்கம் காணப்படுகிறது.

| | | | | |
|---|---|---|---|---|
| உலகம் | சிலை | எல்லை | சால்வை | கல் |
| காலம் | மலை | மல்லல் | சால்பு | குயில் |
| பலகை | வலை | வல்லமை | செல்வம் | சொல் |
| கால் | | | | |
| ஏற்றல் | | தொல்லை | சொல்வான் | பல் |

லட்சுமி, லட்டு, லாடம், லூட்டி, லொட்டு, லொசுக்கு, லோட்டா என இவ்வாறு பேச்சினிடையே மொழி முதலில் லகரம் இடம் பெறும் சொற்கள் பல வழங்குகின்றன.

ளகரம் பேச்சிலும் மொழி முதலாவதில்லை; மொழியிடையே இரட்டித்தும் பிற மெய்களுடனும் வழங்குகிறது; மொழியிறுதியில் இடம் பெறுகிறது.

| | | | |
|---|---|---|---|
| உளி | உள் | உள்ளம் | கள்வன் |
| நாளை | கள் | கள்ளம் | கேள்வன் |
| வெளி | முள் | எள்ளினான் | கேள்வி |
| வேளை | ஆள் | தள்ளுக | வேள்வி |

ழகரம் மொழிமுதலாவதில்லை; மொழியிடையே இரட்டிப்பதும் இல்லை. மொழியிடையிலும் இறுதியிலும் வரும்.

| | | | | |
|---|---|---|---|---|
| ஆழ்வார் | இழைபு | இழை | இகழ் | முழவு |
| காழ்ப்பு | எழில் | வாழை | குமிழ் | யாழ் |
| புகழ்ச்சி | பழம் | விழா | தமிழ் | குழல் |
| மகிழ்ச்சி | வேழம் | ஏழு | புகழ் | மழலை |
| | வழக்கு | | வீழ் | |

'ழ' தமிழிலும் மலையாளத்திலும் காணப்படுகிறது. தமிழில் சிறப்பாக மிகுதியாக வழங்குவதால் இதைச் சிறப்பு ழகரம் என்று கூறிச் சிறப்பிப்பர்.

கீழ்வரும் சொற்களைப் பலமுறை படித்து ஒலி வேறுபாடு, பொருள் வேறுபாடுகளை மனத்தில் பதிய வைத்துக் கொள்ளுங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வால் | வாள் | வாழ் | கூலம் | கூளம் | கூழை |
| கிலி | கிளி | கிழி | தவலை | தவளை | தவழ்தல் |
| விலை | விளை | விழை | கோலம் | கோளம் | |
| கலை | களை | கழை | காலை | காளை | |
| தலை | தளை | தழை | வேலை | வேளை | வேழம் |
| வலி | வளி | வழி | கவலை | கவளம் | கமழும் |
| அலி | அளி | அழி | | பவளம் | பவழம் |
| ஆல் | ஆள் | ஆழ் | | | |
| வலை | வளை | வழை | | | |

சொல்லிப் பழகுங்கள்

நல்ல பிள்ளை மெல்லத் தவழும்
பிள்ளைச் செல்வம் கொள்ளை இன்பம்
பள்ளிப்பிள்ளை சொல்லிப் பழகும்
பழகப் பழகப் பாலும் புளிக்கும்
அழகும் எழிலும் வலுவும் பொலிவும்

**தன்மதிப்பீடு: 4**

அ. ல, ள இரட்டித்து இடையில் வரும் சொற்கள் ஐந்து எழுதுக.

ஆ. ழகரம் இறுதியில் வரும் சொற்கள் ஐந்து எழுதுக.

இ. ல, ள, ழ பிற மெய்களுடன் கலந்து வரும் சொற்கள் பத்து எழுதுக.

ஈ. ல, ள, ழ மூன்றும் பொருள் வேறுபடும் ஒரு மாதிரியான சொற்கள் ஐந்து எழுதுக.

## 1.3 தமிழை எழுதும் போது கடைப்பிடிக்க வேண்டிய மரபுகள்

இன்ன எழுத்துக்குப்பின் இன்ன எழுத்து வரவேண்டுமெனவும் சில மரபுகள் பல காலமாகப் பின்பற்றப்பட்டு வருகின்றன. அவற்றைக் காண்பது மொழியின் தன்மையை அறிய உதவும்.

### 1.3.1. மொழிமுதலில் வரும் எழுத்து மரபுகள்

'ணங்' என்ற ஒலியுடன் வெண்கலப் பாத்திரம் கீழே விழுந்தது
'டாண் டாண்' என மணி ஒலித்தது.
'பட் பட்' என்று பதில் சொன்னான்.

மேலே கண்ட வாக்கியங்களிலுள்ள 'ணங்', 'டாண் டாண்', 'பட் பட்' போன்ற சொற்கள் ஒலி முதலிய குறிப்புகளைத் தெரிவிப்பன ஆகும். இவை போன்றவற்றை **ஒலிக்குறிப்புச் சொற்கள்** என்பர். ஆனால் இத்தகைய சொற்கள் மொழியில் அதிகம் இல்லை.

'ணங்' என்ற ஒலிக்குறிப்புச் சொல்லில் ணகரம் சொல்லின் முதலில் வருவது போன்ற வேறு தமிழ்ச் சொற்களே இல்லை. இதிலிருந்து என்ன தெரிகிறது?

பேசும் போதும் ஆகட்டும், எழுதும் போதும் ஆகட்டும் நாம் எல்லா ஒலிகளையும் எழுத்துக்களையும் எல்லா இடத்திலும் வரையறையில்லாமல் பயன்படுத்துவதில்லை; சில சில எழுத்துக்கள் சில சில இடத்தில்தான் வரும்.

அது போன்றே ட்யூப் (tube) என்ற ஆங்கிலச் சொல்லில் போன்று ட்-இல் தொட்ங்கி ப்-இல் முடியும் சொற்கள் தமிழில் இல்லை.

ஒவ்வொரு மொழிக்கும் சொற்களை ஒலிப்பதிலும் எழுதுவதிலும் தனித்தனியான முறைகள் உள்ளன என்பதை இதிலிருந்து அறியலாம்.

தமிழுக்கும் இதுபோன்று சில தனியான முறைகள் உள்ளன; அவற்றைப் பழகிக் கொள்ள வேண்டும்.

டாக்சி, டாக்டர், டமாரம், கிளாஸ்
வுங்க வூரு யெது?

மேலே முதல் வரிசையில் உள்ளது போன்ற சொற்கள் தமிழில் அதிகம் இல்லை. ஏனென்றால் தமிழ்ச்சொற்களில் மொழிமுதலில் டகரம் வருவதில்லை. பிறமொழிச் சொற்களில்தான் வரும்.

இரண்டாவது வரிசையில் உள்ள சொற்கள் தமிழ் தான்; என்றாலும் பேச்சுமொழி என்று கண்டுபிடித்து விடுகிறோம். ஏனென்றால் வு,வூ,யெ ஆகிய எழுத்துக்களை மொழிமுதலாகக் கொண்ட சொற்கள் எழுத்துத் தமிழில் இல்லை.

தமிழிலே மொழிமுதலில் வரும் எழுத்து மரபுகளில் சிறப்பான சிலவற்றை விளக்கலாம்:

1. மொழிமுதலில் பனிரண்டு உயிர் எழுத்துக்களும் வரும்.
   அ - அணி; ஆ - ஆடை; இ - இல்லை; ஈ - ஈரல்;
   உ - உரல்; ஊ - ஊர்தி; எ - எழு; ஏ - ஏரி;
   ஐ - ஐயம்; ஒ - ஒளி; ஓ - ஓடு; ஔ - ஔவை;
2. மொழிமுதலில் கீழே கண்ட மெய்யெழுத்துக்கள் உயிர் எழுத்துக்களுடன் சேர்ந்து மொழிமுதலாக வரும்:
   க-கண்; ச-சட்டி; த-தம்பி; ந-நண்பன்; ப-பல்; ம-மண்;
   ஞ-ஞாயிறு; ங-ஙனம்; யா-யானை; வ-வண்டு;

இவற்றில் சில மெய்கள் சில உயிர்களுடன் வாரா. எ-டு: யெ,

ஞோ, யி. ஆனால் அவை பற்றியெல்லாம் இங்கு விரிவாகச் சொல்லவில்லை.

3. ங்,ண்,ழ்,ள்,ற்,ன் - இவற்றை மொழிமுதலாகத் தொடங்கும் சொற்கள் தமிழில் இல்லை. (ஙங் போன்றவை ஒலிக்குறிப்பாக வரும்).

4. ட்,ர்,ல் ஆகிய எழுத்துக்களை மொழிமுதலாகக் கொண்ட சொற்கள் தமிழில் இல்லை; ஆனால் பிற மொழிகளிலிருந்து வந்து வழங்குகிற சொற்கள் உள்ளன.

(எ-டு) டமாரம், டப்பா
ரசம், ராகம்
லட்டு, லாடம்

இவற்றில்

ரசம்
லாபம்

முதலியவற்றுடன் இகரம் சேர்த்து எழுதுவது உண்டு.
இரசம், இலாபம்.

மேலும் பாருங்கள்.

ராகு - இராகு
ராமன் - இராமன்
ரத்தினம் - இரத்தினம்
லட்சுமணன் - இலட்சுமணன்
லட்சுமி - இலட்சுமி

5. வுட், வோட்டு, வோல்கா போன்ற பிறமொழிச் சொற்களை எழுதுவதைப் போல

வுடு, வூடு, யிப்பவும், யிங்கே என்று பேச்சுத் தமிழ்ச் சொற்களை எழுதுவதில்லை. அதற்கு மாறாக,

விடு, வீடு, இப்பவும், இங்கே என்று எழுத்துத் தமிழ்ச்சொற்களையே எழுதுகிறோம்.

6. கை, தை எனத்தொடங்கும் ஒலிகளை கய், தய் என எழுவதில்லை. கை, தை (தையல்) என்றே எழுதுவர்.

**மயிலாப்பூர்** என்பதைச் சிலர் மைலாப்பூர் என எழுதுவர். மயிலாப்பூர் என எழுதுவதே சிறப்பு.

7. இரண்டு மெயயெழுத்துக்கள் மொழிமுதலில் வாரா.

க்ளாஸ்- க்ள்ஆஸ் - என்பதில் க்ள் - என ஆங்கிலத்தில் மொழி முதலில் மெய்கள் இரண்டு சேர்ந்து வருவது போன்று, தமிழில் சொற்கள் இல்லை. இவ்வாறு வரும் பிறமொழிச் சொற்களில் நாம் ஓர் உயிரைச் சேர்த்து எழுதுவது உண்டு.

க்ளாஸ் — கிளாசு

மேலும் பாருங்கள்:

க்ளாஸ் — கிளப்(பு)
ட்யூப் — டியூப்(பு).

8. தனிமெய்கள் தமிழில் மொழி முதலில் வருவதே இல்லை. உயிருடன் கூடிய மெய்களே — உயிர்மெய்களே மொழி முதலில் வரும்.

ட்ரைவர் — Driver இதில் D, R, என இரு மெய்கள் மொழிமுதலில் உள. தமிழில் இது டிரைவர் ஆகிவிடும். வேறுவிதமாகச் சொன்னால் இருமெய்களோ மூன்று மெய்களோ கூடித் தமிழில் மொழி முதலாவதில்லை.

**பயன்:**

மொழிமுதல் எழுத்துக்களைத் தெரிந்து கொள்ளுவதால் என்ன பயன்? என்ற கேள்வியை நீங்கள் கேட்கலாம். அதற்கு விடை இதோ:

| |
|---|
| மொழி முதல் எழுத்துக்களைப் பற்றித் தெரிந்து கொள்வது சொற்கள் புணரும்போது எளிதில் பிரித்துப் படிப்பதற்கு ஏற்ற சரியான சொல்லுணர்ச்சியைத் தரும். |

கீழே உள்ள சொற்களைப் பாருங்கள்:

கற்றூண்
நற்றவம்
வாட்டடங்கண்
மடவாடன்னோடு
பொன்னகர்

போன்ற இலக்கியச் சொற்களைப் பாடங்களில் படித்திருப்பீர்கள். இவைகளைப் பிரித்துப் படிக்கப் பலரும் தடுமாறுவார்கள். சிலர்,

கற் + றூண்
நற் + றவம்
வாட் + டடங்கண்
மடவா + டன்னோடு
பொன் + நகர்

என்றெல்லாம் பிரித்துப் படித்துத் துன்புறுவார்கள்.

னகர்
றூண்
றவம்
டடங்கண்
டன்னோடு

என்று **மொழிமுதலில் தமிழில் சொற்கள் வாரா** என்ற அறிவு இருந்தால் சரியான சொல்லுணர்ச்சி ஏற்படும்.

அவற்றை

றூண்
றவம்
டடங்கண்
டன்னோடு
னகர்

என்று படிப்பது எளிதாகும்.

**நினைவு படுத்திக் கொள்ளுங்கள்:**

1. தமிழில் எல்லா ஒலிகளும் எழுத்துக்களும் மொழிமுதலில் வருவதில்லை. அவை மொழிமுதலில் வருவது பற்றிச் சில முறைகள் உள்ளன.
2. மொழிமுதலில் வரும் எழுத்துக்களைப் பற்றித் தெரிந்துகொள்வது சொற்களைப் பிரித்துப் படிப்பதற்கு உதவியான சொல்லுணர்ச்சியைத் தரும்.

**தன்மதிப்பீடு பயிற்சி : 5**

அ. கீழ்க்கண்ட சொற்களைப் பிரித்துக் கூறுக/எழுதுக :

| | |
|---|---|
| அ) மக்கட்டொகை | அ) |
| ஆ) ஆண்டகை | ஆ) |
| இ) கற்றோர் | இ) |
| ஈ) காற்றூசு | ஈ) |
| உ) பொற்றாள் | உ) |

ஆ. கீழே கண்டவற்றை வேறெவ்வாறு எழுதலாம்?

அ) ரகுமான் -------------
ஆ) ராபர்ட் -------------
இ) ராகவன் -------------
ஈ) லட்சுமி -------------
உ) ராத்தல் -------------
ஊ) ராமசாமி -------------
எ) ராட்டினம் -------------

இ. கீழே கண்டவற்றின் சரியான வடிவம் தருக.

அ) நாயிறு ---------''கிழமை''
ஆ) னாடு ---------''இராச்சியம்.''

**1.3.2. மொழியிடையில் வரும் எழுத்து மரபுகள்**

1. மொழியிடையில் வரும் உயிரொலிகளில் ஐ பற்றிய ஒன்றைக் குறிப்பிடலாம்.

மொழியிடையில் ஐ முழுமையாக ஒலிக்கப்படுவதில்லை. எனவே சிலர் பேசுவது போல,

பழய
வலயர்
பாளயம்

என்றே எழுதுவர். ஆனால் எழுத்துமொழியில்

பழைய
வலையர்
பாளையம்

என்பதே விரும்பப்படும்.

2. க், ச் ட், த், ப், ற் முதலிய வல்லெழுத்துக்கள் இரட்டித்து வரும்.

காக்கை, பச்சை, அட்டை, அத்தை, அப்பா, காற்று.

கீழே வருவனவற்றைச் சொல்லிப் பாருங்கள்.

நாக்லே நரம்பில்லை
பேச்லே தெளிவில்லை
வீட்லே ஆளில்லை
பத்லே ஒன்று
தோப்ல மரம்
இட்லி ஒன்று

இவ்வாறு நாம் பேசினாலும் எழுதுவதில்லை.

நாக்கிலே, பேச்சிலே, வீட்டிலே, பத்திலே, தோப்பிலே, இட்டலி என்றே எழுதுகிறோம்.

3. ட், ற் என்ற வல்லெழுத்துக்களுக்குப் பின் க், ச், ப் என்ற வல்லெழுத்துக்கள் வரும்.

வெட்கம், வெட்சி, நட்பு
கற்க, முயற்சி, கற்பு

இவ்வாறு எழுதும்போது கீழே கண்டவற்றைக் கவனியுங்கள்:

| முறை மாறியது | முறையானது |
|---|---|
| வெட்க்கம் | வெட்கம் |
| கற்ப்பு | கற்பு |
| காட்ச்சி | காட்சி |
| சாட்ச்சி | சாட்சி |
| வயற்ப்பரப்பு | வயற்பரப்பு |
| கடற்க்கரை | கடற்கரை. |

வேறுபாடு அறிக:

அதர்க்கு —(அதர் + கு); அதற்கு — (அதன் + கு).
கவர்ச்சி — 'தன்பால் இழுத்தல்'; கவற்சி (கவல் + சி) கவலை.

4. கீழே கண்டவற்றைப் பாருங்கள்:

முள்ச்செடி
கல்ச்சுவர்
புல்த்தரை

நாம் பேசுவதுபோல எழுதியுள்ளோம். ஆனால் எழுத்துத் தமிழில் சிலர் அவ்வாறு எழுதுவதை ஊக்குவிப்பதில்லை.

முள்செடி
கல்சுவர்
புல்தரை

என்று எழுதவேண்டும் என்பர். அல்லது சந்திவிதிப்படி முட்செடி கற்சுவர், புற்றரை என்று எழுதவேண்டும்.

5. ங், ஞ், ண், ந், ம், ன் ஆகியவை

அ) இரட்டித்து வரும்.
அங்ஙனம், அஞ்ஞானம், எண்ணம், அந்நாள், அம்மா, அன்னை.

ஆ) தன் இன வல்லெழுத்துக்கு முன்வரும்.
பங்கு, பஞ்சு, நண்டு, பந்து, கம்பு, கன்று.

| பிழை | சரி |
| --- | --- |
| பன்து | பந்து |
| வன்டு | வண்டு |
| சென்ரான் | சென்றான் |
| பன்பாடு | பண்பாடு |

**தன்மதிப்பீடு: 6**
**பயிற்சி**

சரியான வடிவம் தருக:

| | சரியான வடிவம் |
| --- | --- |
| 1. கொன்ரான் | 1.------------ |
| 2. கடசி | 2. ----------- |
| 3. முயற்ச்சி | 3. ----------- |
| 4. முயர்க்கொம்பு | 4. ----------- |

### 1.3.3. மொழியிறுதியில் வரும் எழுத்து மரபுகள்

1. பனிரண்டு உயிரும் மொழியிறுதியில் வரலாம். ஆயினும் எ, ஒ மொழியிறுதியில் சொல்லில் வைத்து வாரா.
ஓரெழுத்தொருமொழி, தம் பெயர் கூறுமிடம் போன்றவற்றில் மட்டும் வரும். எனவே

எங்கெ, ஊரிலெ
அங்கெ, நாட்டிலெ
எங்கொ

யென்று எழுதுவதை ஏற்றுக்கொள்வதில்லை. இவற்றை

எங்கே, ஊரிலே
அங்கே, நாட்டிலே
எங்கோ

என்றுதான் எழுதவேண்டும். ஔவும் மொழியிறுதியில் வராது. கௌ, வௌ என்ற ஓரெழுத்தொரு மொழிகளில் மட்டும் வரும்.

ஏனைய உயிர்கள் மொழிக்கு இறுதியில் வரும்: பல (அ), பலா (ஆ), பலி (இ), பாட்டீ (ஈ), கொலு (உ), மலை, கலை

(ஐ), வந்ததோ (ஓ). ஊ, ஏ என்பன ஓரெழுத்தொரு மொழிகளாய் இறைச்சியையும் அம்பையும் குறிக்க வழங்குகின்றன. இவற்றில் மொழிமுதலும் இறுதியும் அவையேதான்.

2. க், ச், ட், த், ப், ற் என்ற ஆறு வல்லெழுத்துக்களும் மொழியிறுதியில் தமிழ்ச்சொற்களில் வாரா. அவை பிறமொழிச் சொற்களில் வரும்போது ஏற்ற இடங்களில் உகரம் பெற்றுவரும்.

மார்க் - மார்க்கு
பாங்க் - பாங்கு
ராக்கெட் - இராக்கெட்டு
கப் - கப்பு

3. யகர இறுதிச் சொற்களில் இறுதியில் இகரம் கொடுத்து உச்சரிப்பதுண்டு. ஆனால் அவ்விகரத்தை எழுதுவது இல்லை.

| பேசுவது | எழுதுவது |
|---|---|
| வாயி | வாய் |
| மெய்யி | மெய் |
| பொய்யி | பொய் |

4. ண், ர், ல், ள், ன் போன்ற மொழியிறுதிச் சொற்களில் உகரம் சேர்த்து எழுதுதல் உண்டு.

கல் — கல்லு
நெல் — நெல்லு
எள் — எள்ளு
கள் — கள்ளு
கண் — கண்ணு
பொன் — பொன்னு
பார் — பாரு

நினைவுபடுத்திக் கொள்க.

1. எ, ஒ மொழியிறுதியில் சொல்லில் வைத்து வாரா.
2. வல்லெழுத்துக்கள் ஆறும் மொழியிறுதியில் வாரா.
3. ண், ர், ல், ள், ன் ஆகியவை உகரம் பெற்று வருதலும் உண்டு.
4. தனிமெய்கள் மொழிக்கு முதலில் வாரா. அங்கு உயிருடன் கூடியே மொழி முதலில் வரும்.
5. இரண்டு மெய்கள் கூடியும் மொழிமுதலாக வாரா. ஒரே மெய் உயிருடன் கூடி வரப் பிற மெய்கள் தொடர்ந்து வரும்.
6. பேச்சுத்தமிழில் இன்று சிற்சில வேறுபாடுகள் உள.

**தன் மதிப்பீடு : 7**

**பயிற்சி**

தமிழுக்கேற்ற சரியான சொல்வடிவங்களை எழுதுக. மொழி முதல், இடை, இறுதி எழுத்துக்களைத் திருத்துவதன் மூலம், இவ்வடிவங்களை அமைக்க வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| கல்லு | பாங்க் | எங்கெ | க்ளாசு |
| வாயி | கப் | ஊர்லெ | ட்யூப் |
| பொய்யி | நாட்லெ | கடசி | ப்யூட்டி |
| பாக்யம் | நித்யம் | பத்யம் | வீட்லே |

## 1.4 இன்றைய மொழிப் பயன்பாடுகள்

இன்று வழக்கிலுள்ள மொழிப் பயன்பாடுகளை நாம் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் எல்லையற்ற புதிய பொருள்களை, வெளிநாட்டுப் பொருள்களை நாம் இன்று பயன்படுத்துகிறோம். வெளிநாட்டுப் பெயர்களை - ஊர்ப்பெயர், மக்கட் பெயர்களை நாம் நாள்தோறும் பயன்படுத்த வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். அறிவியல், தொழிலியல் கலைச்சொற்கள் பல உலகளாவிய நிலையில் பயன்படுத்தப்படுகின்றன. அவற்றைத் தமிழிலும் அவ்வாறே எடுத்தாள வேண்டியதிருக்கிறது. அதனால் தமிழில் தவிர்க்க இயலாத பல புதிய சொல்லாட்சிகள், நடையாக்கங்கள் பல்கி வருகின்றன. அவற்றையும் பழைய மரபையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டியதிருக்கிறது. ஏன்? நாம் பழைய இலக்கியங்களையும் படிக்க வேண்டியுள்ளது; இன்றைய உலக அறிவியல், தொழில் வளர்ச்சியோடும் போட்டி போட வேண்டியிருக்கிறது. இதைத் தமிழுக்கேற்பட்ட சங்கடமான நிலை என்று வருந்தக்கூடாது. வாழும் மொழிகளுக்கெல்லாம் இஃது ஒரு முயற்சிக்குரிய உந்துதலேயன்றி வேறன்று. தமிழ் பழமைக்கு உரிய செவ்வியல் மொழியாகவும், புதுமைக்குரிய புத்தம் புதிய மொழியாகவும் நடை பயில்வது அதற்குப் பெருமையே. அதற்காகச் சில விதிமுறைகளைத் தளர்த்த வேண்டும்; சிலவற்றைச் செறிவாக்க வேண்டும். முயற்சியுடைமையால் மொழி தழைக்கும். மொழியைப் பயன்படுத்தப் பழகினால் போதும்.

### 1.4.1 கிரந்த எழுத்துக்கள்

இடைக்காலத்தில் தமிழ்மொழி வழங்கிய பகுதியில் பிறமொழிகளும் வந்து உறவாடும் சூழ்நிலைகள் ஏற்பட்டன. அப்போது அப்பிறமொழிச் சொற்களைத் தமிழில் எழுதுவதற்கென்று ஐந்து கிரந்த எழுத்துக்கள் தமிழில் கலந்து எழுதப்பட்டன.

ஜ, ஸ, ஷ, ஹ, க்ஷ என்பவை அவை. அவற்றுடன் ஸ்ரீ என்ற அடைமொழி எழுத்தையும் பயன்படுத்த முற்பட்டனர். ஜலம், ஸர்ப்பம், இஷ்டம், ஹாரம், பக்ஷம் என இவ்வாறு சொற்கள் சில வழங்கினாலும் அவற்றைத் தமிழ்ப்படுத்தி சலம், சருப்பம், இட்டம், ஆரம், பக்கம் என வழங்கும் முறையே நெடுநாள் வழக்கிலிருந்தது. எனினும் இன்றியமையாப் பெயர்ச்சொற்கள், கலைச்சொற்கள், துறைச்சொற்கள் போன்றவற்றில் இவை தவிர்க்க இயலாதனவாயின.

இராஜராஜன், இராசராசன்
வஸுமதி, வசுமதி
அஷ்டமம், அட்டமம்
ஹரித்வார், அரித்துவார்
லக்ஷ்மி, லட்சுமி

என இவ்வாறு இருவிதமாக எழுதும் வழக்கங்களைக் காண்கிறோம்.

இன்று ஜலந்தர், சேக்ஷ்பியர், ஜபல்பூர், இஞ்செக்ஷன் என இவ்வாறு பல பெயர்க்குறியீடு - கலைச்சொற்களில் இக்கிரந்த எழுத்துக்கள் சேர்க்கப்படுகின்றன.

### 1.4.2. எழுத்துச்சீர்திருத்தம்

தமிழ் எழுத்துக்கள் காலம் காலமாகப் பயன்படுத்தப்பட்டு இன்று திருந்திய வடிவத்திலேயே வழங்குகின்றன. எனினும் இன்றைய தட்டச்சு, அச்சு யந்திரங்கட்கேற்ப எழுத்துச்சுருக்கம் கருதி ணு, று, னு போல்வன ணா, றா, னா எனவும், ணை, றை, னை அவற்றின் நெடில் போல்வன ணொ, ணோ, றொ, றோ, னொ, னோ எனவும் எழுதப்படுகின்றன. ஐ, ஔ என்பன முற்றிலும் நீக்கப்படவில்லை. அரசு ஏற்றுக்கொண்டுள்ள இம்மாற்றங்கள் பெரிதும் இப்போது பலராலும் ஏற்கப்பட்டு நடைமுறைப்படுத்தப் பட்டு வருகின்றன. பெரியார் இராமசாமி அவர்கள் இம்முறையை இடைவிடாது பின்பற்றி வந்தார். இப்போது அரசு இம்மாற்றத்தை ஏற்றுக்கொண்டுள்ளது.

### 1.4.3 பிறமொழிச் சொற்களை எழுதும் மரபுகள்

பழங்காலத்திலிருந்து வடமொழி போன்ற மொழிகளிலிருந்து பல சொற்கள் தமிழில் வந்து வழங்கி வருகின்றன. இன்று ஆங்கிலம் முதலிய பிறமொழிச் சொற்களை நாம் நம் மொழியில் பயன்படுத்தி வருகிறோம்.

**தற்சமம்**

பிற மொழிகளிலிருந்து நம்மொழிக்கு வந்து வழங்கும் சொற்களைப் பிறமொழியில் எப்படி உச்சரிக்கிறார்களோ அவ்வாறு உச்சரிக்கத்தக்க விதத்தில் தமிழ் எழுத்தில் எழுதிக்கொள்வது ஒரு முறை. அவை இருமொழிக்கும் பொது எழுத்துக்களால் ஆனவை. (தத் = அதற்கு; சமம் = நேரானது) என்பர்.

எ-டு; கமலம், பூமி

இவ்வடமொழிச் சொற்கள் தமிழ் போலவே இருப்பதால் அப்படியே எடுத்துக் கொள்ளப்பெறுவன இவை. அலுமினியம், எடின்பரோ என மாற்றமின்றி, இரண்டு மொழிக்கும் பொதுவான, முதலியமைப்புடன் வந்து வழங்கும் ஆங்கிலச் சொற்களையும் இதில் அடக்கிக் கொள்ளலாம்.

**தற்பவம்**

ஆனால் சில சமயங்களில் பிறமொழிகளில் உள்ள ஒலிகளுக்கேற்ற எழுத்துக்கள் தமிழில் இல்லாமல் இருக்கும்; அல்லது பிறமொழியில் வரும் எழுத்து முறைகள் தமிழில் காணப்படா. அப்போது தமிழ் முறைக்கேற்பச் சிறிது மாற்றி ஒலிக்கிறோம், எழுதுகிறோம். இவ்வாறு நம் மொழிக்கேற்ற முறையில் மாற்றி எழுதுவதைத் **தற்பவம்** (அதிலிருந்து உருவானது) என அழைப்பர்.

எ-டு: ஸுர்யன் - சூரியன்; கார்யம் - காரியம்;
ஸ்வப்னம் - சொப்பனம்.

கிளாசு, பியூன், போன் என்பன ஆங்கில மொழியிலிருந்து சற்றே மாறி வழங்கப்படுவன. இவை 'தற்பவம்' எனலாம்.

**இன்றைய நிலை**

பிறமொழிச் சொற்களைத் தற்சமம், தற்பவம் என்ற இரண்டு முறையில் தமிழில் எழுதலாம் என்றாலும் இன்று பிறமொழி எழுத்துக்களிலேயே எழுதிக்காட்டுவது, தற்கால நூல்களிலும் கடிதம், குறிப்புகள் முதலிய சொந்த ஆவணங்களிலும் காணப்படுகிறது.

கீழேயுள்ள வாக்கியங்களைப் பாருங்கள்:

1. அவள் என்னைப் பார்த்து smile பண்ணினாள்.
2. Train வர delay ஆயிடுத்து.

3. Ramaswamy nut -ஐயும் bolt ஐயும் எடுத்துக்கொண்டு Screw driver ஐத் தேடினார்.
4. இன்னிக்கும் exams postpone ஆயிடுத்து.
5. என் wife milk boil பண்ணும்போது Gas stove -இல் இருந்து Saree - இல் தீ பிடிச்சுட்டுது.

இவ்வாறு தமிழுடன் ஆங்கில எழுத்தில் சொற்களை எழுதுவதைத் தவிர்க்க வேண்டும். முற்றிலும் தமிழாக எழுத முயல வேண்டும்.

நினைவு படுத்திக்கொள்க:

1. பிறமொழிச் சொற்களைத் தற்சமம், தற்பவம் என்ற இரண்டு முறையில் தமிழில் வழங்குகிறோம்.
2. தமிழில் இயன்றவரை பிறமொழிச் சொற்களைக் கலக்காது பேசுவதும், எழுதுவதும் மொழித்திறனை வளர்க்கும்.

**தன்மதிப்பீடு: 8**

வினாக்களுக்கு விடை தருக:

அ. ஒலிக்குறிப்புச் சொற்கள் என்றால் என்ன?
ஆ. தமிழில் தனிமெய் மொழிமுதலில் வருமா?
இ. இரண்டு மெய்யெழுத்துக்கள் மொழிமுதலில் வரும் பிறமொழிச் சொற்களைத் தமிழில் எழுதும் முறைக்கு ஒரு எடுத்துக்காட்டு தருக.
ஈ. மொழி முதல் எழுத்துக்களைத் தெரிந்து கொள்வதால் என்ன பயன்?
உ. பிற மொழிச் சொற்கள் தமிழில் வந்து வழங்கும் முறைகள் யாவை? சிறு விளக்கமும் எடுத்துக்காட்டும் தருக.

---

## 1.5 பாடத்தொகுப்புரை

தமிழ் மொழியைச் சீருற எழுதும் பழக்கங்களை இப்பாடத்தின் வழி அறிந்து கொண்டோம். தமிழின் அடிப்படையான முதல் எழுத்துக்கள் மற்றும் அவற்றைச் சார்ந்து வரும் எழுத்துக்கள், ஒலிப்புக்கள் போன்றவற்றைத் தெரிந்து கொண்டோம். தமிழ் நெடுங்கணக்கு அகர வரிசையை பழகிக்கொள்ள முயன்றோம். தமிழில் உச்சரிப்பு மயக்கம் ஏற்படுத்தும் எழுத்துக்கள் இவையெனக் கண்டு, அவற்றை மாறாமல் ஒலிப்பதற்கான வழிமுறைகளை நினைவு படுத்திக் கொண்டோம். தமிழில் மொழிமுதலில் வரும் எழுத்துக்கள், மொழியிடையில் மயங்கும் மெய்ம்மயக்க விதிகள், மொழியிறுதியில் வரும் எழுத்துக்கள் போல்வன ஒரு சிறிது, பயன்படுமளவு விளக்கப்பட்டன. தமிழில் பிறமொழிக் கலப்பு ஏற்பட்டதும், கிரந்த எழுத்துக்களைக் கடன் பெற்றதும், தமிழாக மாற்றும் நெறிமுறைகளும் பழக்கப்படுத்தப்பட்டன. தமிழ் எழுத்துக்களும் அவற்றைக் கொண்டு எழுதும் பழக்கங்களும் பற்றி அடிப்படையான செய்திகளை நாம் பலவாறு படித்து நினைவு கொள்வது கல்வி வளர்ச்சிக்குப் பெருந்துணை செய்வதாகும்.

## 1.6 மேலும் படித்தற்குரிய நூல்கள்

1. பவணந்தி முனிவர், 'நன்னூல்', ஆறுமுக நாவலர் காண்டிகையுரை, சைவ சித்தாந்தக் கழகம், பிரகாசம் சாலை. சென்னை-600 108.
2. அ. சண்முகதாஸ், 'தமிழ்மொழி இலக்கண இயல்புகள்', முத்தமிழ் வெளியீட்டுக் கழகம், திருநெல்வேலி, யாழ்ப்பாணம்.
3. அ.கி. பரந்தாமனார், 'நல்லதமிழ் எழுத வேண்டுமா?' பாரி நிலையம், பிரகாசம் சாலை, சென்னை-600 108.
4. தி. முத்துக்கண்ணப்பன், 'தமிழில் தவறுகளைத் தவிர்ப்போம்', பாரி நிலையம், பிரகாசம் சாலை, சென்னை-600 108.
5. மயிலை சின்னதுரை சண்முகம், 'தமிழில் பிழையின்றி எழுதுவோம்', திருமதி ச. மோகன சுந்தரி, 30/15, பாத்திரோ. சாலை, சென்னை-78.
6. தமிழண்ணல், 'இனிய தமிழ் மொழியின் இயல்புகள்' I, II, III, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை-1
7. புலவர் செந்துறைமுத்து , 'பிழையின்றித் தமிழ் எழுத வழிகள்' சிறுவர் நூற்பதிப்புக் கழகம், 20, ஜானிஜான்கான் தெரு, சென்னை-14.

### 1.7 தன்மதிப்பீடு: விடைகள்

1) அ. ஒலியன்கள் அல்லது எழுத்துக்கள் என்று பெயர்.

ஆ. உயிர் 12ம் மெய் 18ம் முதல் எழுத்துக்களாகும். அவை அடிப்படையானவையாதலால் முதலெழுத்துக்கள் எனப்பட்டன.

இ. தொல்காப்பியர் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் மூன்றும் சார்பெழுத்துக்கள் என்றார். பிற்காலத்தார் 'பத்து' என்றனர். உயிர் மெய், ஆய்தம், குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக்குறுக்கம், உயிரளபெடை, ஒற்றளபெடை. இவை அடிப்படை ஒலிகள் அல்ல; பொருளை இவை வேறுபடுத்துவதில்லை. சொல்லில் இடம் பெறும் போது ஏற்படும் ஒலிமாற்றங்கள் அல்லது ஒலித்திரிபுகளே இவை.

2) அக்கரை, அக்கறை. குரை, குறை. பொருப்பு, பொறுப்பு.

3) அ. தன்னலம், மு+நீர்,

ஆ. பொன்+நாடு, பல்+நாட்டு வருகை, தென்+நாடு, மு+நாள்.

4) அ. நல்ல, வெல்லம் எனவும் பிள்ளை, வெள்ளம் எனவும வரும் சொற்களைக்கண்டு எழுதுக.

ஆ. வாழ், தாழ் என்பன போல்வன.

இ. தோல்வி, கல்வி, வெள்கினான், கொள்கை, வாழ்வு, தாழ்ச்சி எனத் தேடுக.

ஈ. வால், வாள், வாழ்; வலை, வளை, வாழை; இலை, இளை, இழை; தலை, தளை, தழை என இவ்வாறு காண்க.

5) அ. மக்கள்+தொகை, ஆண்+தகை, கல்+தேர், கால்+தூசு, பொன்+தாள்.

ஆ. 'இ' சேர்த்து 'இரகுமான்' என இதுபோல் எல்லாவற்றையும் எழுதலாம்.

இ. ஞாயிறு, நாடு.

6) கொன்றான், கடைசி, முயற்சி, முயற்கொம்பு

7) கல், பாங்கு, எங்கு, கிளாசு, வாய், கப்பு, ஊரில், டியூபு, பொய், நாட்டில், கடைசி, பியூட்டி, பாக்கியம், நித்தியம், பத்தியம், வீட்டில்.

8) அ. 'ஒலி'யைக் குறிப்பவை ஒலிக்குறிப்புச் சொற்கள். வண்டு 'தடால்' என்று விழுந்தது. 'டணார்' என்று கயிறு அறுந்தது.

ஆ. தமிழில் தனிமெய் மொழிமுதலில் வராது.

இ. Thrill -இதில் TH என்ற இரண்டு மெய்கள் மொழிமுதலில் உள்ளன. இதைத் தமிழில் 'த்ரில்' என்று எழுதாமல் 'திரில்' எனவே எழுதுக.

ஈ. 'கற்றூண்' போலப் புணர்ந்து வரும் சொற்களைப் பிரித்துப் படிக்கவும். (கல்+தூண்), சொற்களின் முழுவடிவத்தை அறியவும் உதவும்.

உ. பிறமொழிச்சொற்களை, அவை இரண்டு மொழிக்கும் பொதுவான ஒலியுடன் வரும்போது, அவ்வாறே எடுத்து வழங்குவது 'தற்சமம்' எனப்படும். எ-டு கமலம், பாதம், கார் சார் பிறமொழிச் சொற்களின் ஒலிகள் தமிழில் காணப்படாதவையாயின், அவ்வொலிகளையும் அமைப்பையும் தமிழுக்கேற்ப மாற்றி ஏற்பது 'தற்பவம்' எனப்படும். எ-டு இடபம் (ரிஷபம்), சுருதி (ஸ்ருதி), கிறித்து (Christ), விவிலியம் (Bible).

## பாடப்பகுதி (Unit) 2 — தமிழ்ச்சொற்களின் அமைப்பும் வகையும்

### படிப்பு நோக்கம்

* தமிழில் உள்ள சொற்களின் வகைகளைத் தெரிந்து கொள்ளுதல் — அவற்றின் இயைபுகளை அறிந்துகொள்ளுதல்
* திணை பால் எண் இடஇயைபுகளை விளங்கிக்கொள்வது.
* வினைச்சொல்லின் உள்வகைகளை நன்கு அறிந்துகொள்ளுதல்.
* பெயர்கள் வேற்றுமையேற்கும் மரபுகளைக் காணுதல்.
* சொற்களின் கட்டமைப்பு, பகுபத இலக்கணம் போன்றவற்றைப் படித்துப் பழகிக் கொள்ளுதல்.

### பாடக் கருத்தலகுகள்

## 2.0 தமிழ்ச்சொற்கள்

தமிழ் எழுத்துக்களைப்பற்றியும் அவை எவ்வாறெல்லாம் உச்சரிக்கப்படுகின்றன என்பது பற்றியும் அவற்றின் பயன்பாடுகள் பற்றியும் தெரிந்து கொண்டோம்.

'பல்லுப் போனால் சொல்லுப் போகும்' என்ற பழமொழியை நீங்கள் கேட்டிருப்பீர்கள். 'எல்லாம் என் தலையெழுத்து' என்று சிலர் சொல்வதையும் கேட்டிருப்பீர்கள். இந்தச் சொல், எழுத்து என்பனவற்றை இலக்கணத்திலும் பேசுகிறோம் அல்லவா? இங்கு அவற்றின் பொருள் என்ன என்பதைக் கொஞ்சம் விளக்கலாம்.

**எழுத்தும் சொல்லும்**

பேசும் ஒலியை எழுதும் போது எழுத்து என்கிறோம். வ,ள்,ளி - இந்த மூன்றும் எழுத்துக்கள். இவற்றையே கூட்டி வள்ளி என்று சொல்லி எழுதிக்காட்டினால் **சொல்** என்கிறோம்.

ளிள்வ - இவ்வாறு எழுதினால் இதைச் சொல் என்று நாம் சொல்வதில்லை. ஏன்? ளிள்வ என்று கூட்டிச் சொல்லி எழுதினாலும் **பொருள்** இல்லை. எனவே பொருள் இல்லாமல் எழுத்துக்களைக் கூட்டிச் சொன்னால் அவற்றைச் சொல் என்று சொல்ல மாட்டோம்.

இவற்றைப் பாருங்கள்:

பூ, ஈ, பை

இங்கே ஓர் எழுத்தே நின்று சொல்லாக வருகிறது. இவை மொழியில் குறைவு; ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துக்கள் சேர்ந்து நின்று சொல்லாக வருவதே பெரும்பான்மை.

மேலே பார்த்ததிலிருந்து நாம் என்ன முடிவு செய்யலாம்?

எழுத்துக்கள் தனியாகவும், ஒன்றுக்கு மேற்பட்டவை தொடர்ந்து நின்றும் பொருள் தந்தால் அவற்றைச் **சொல்** என்கிறோம்.

| | |
|---|---|
| சொல் = | எழுத்து / எழுத்துக்கள் |
| | பொருள் |

*நினைவிற் கொள்க:*

சொல் என்பது எழுத்தால் அமைந்து பொருளை உணர்த்துவதாகும். சொல்லைக் குறிக்க மொழி, கிளவி, பதம் போன்ற ஒரு பொருட் பன்மொழிகள் (ஒரே பொருள் தரும் பல சொற்கள்) உள.

***தன்மதிப்பீடு: 1. பயிற்சி***

1. சில சொற்களின் எழுத்துக்களை முதலும் முடிவும் மாற்றி எழுதினாலும் அதே சொல் கிடைக்கும்.

   தாத்தா, மாமா, பாப்பா, தித்தி இத்தகைய சொற்கள் சிலவற்றை நீங்கள் கண்டுபிடித்துத் தரமுடியுமா?

2. ஓரெழுத்து ஒரு மொழிகள் பத்துக் கூறுக.

## 2.1 சொல்வகை

சொல்வகைகள் நான்கு வகைப்படும். அவற்றுள் பெயரும் வினையும் தலைமை வாய்ந்தவை; இடையும் உரியும் அவற்றைச் சார்ந்து விளங்குபவை.

### 2.1.1. பெயரும் வினையும்

சொல் என்றால் என்ன என்று பார்த்தோம்; நாம் பேசுவது எல்லாம் சொல் சொல்லாகத்தான்; என்றாலும் தனித்தனிச் சொற்களைச் சொல்லி நிறுத்துவதில்லை.

முருகன்... என்று சொல்லி நிறுத்திப் பாருங்கள். அதைக் கேட்டுக் கொண்டிருப்பவர், அவன் என்ன செய்தான் - அவனுக்கு என்ன என்றெல்லாம் கேள்வி கேட்பார்.

எனவே நாம்,

முருகன் படிக்கிறான்
இந்தப் பூ கொள்ளை அழகு
வெள்ளைப் பசு தோட்டத்தில் மேய்கிறது
கன்றுக்குட்டி துள்ளிக் குதிக்கிறது

என்று பொருள் முடிவுள்ள தொடர்களாகத்தான் பேசுகிறோம். மேலே நாம் எழுதியுள்ள முறையிலிருந்து முதல் தொடர்,

| 1 | 2 |
|---|---|
| முருகன் | படிக்கிறான் |

என்ற இரண்டு சொற்களாக இருப்பதை உணர்ந்து கொள்ளுகிறோம்.

கீழே சில சொற்களை வரிசையாக எழுதியுள்ளோம்:

| தொகுதி: 1 | தொகுதி: 2 |
|---|---|
| படிக்கிறாள் | அழகி |
| எழுதுகிறாள் | ஆண்டாள் |
| பாடுகிறாள் | கண்ணகி |
| குதிக்கிறாள் | செல்வி |
| செல்வி | பார்க்கிறாள் |

இந்த இரண்டு வரிசையிலும் இனத்திலிருந்து மாறுபட்டு நிற்கும் சொல் எது?

முதல் தொகுதியில் செல்வி

இரண்டாம் தொகுதியில் பார்க்கிறாள்

முதல் தொகுதியில் உள்ள சொற்கள் எல்லாம் ஏதாவது ஒரு செயலைக் குறிக்கின்றன - செல்வி என்பது தவிர. அஃது ஒரு பெயரைக் குறிக்கிறது.

இரண்டாம் தொகுதியில் உள்ள சொற்கள் எல்லாம் ஆட்களின் பெயரைக் குறிக்கின்றன - பார்க்கிறாள் என்ற சொல் தவிர.இஃது ஒரு செயலைக் குறிக்கிறது.

எனவே சொற்களை அடிப்படையில்,

1. பெயரைக் குறிக்கும் சொற்கள் பெயர்ச்சொற்கள்
2. செயலைக் குறிக்கம் சொற்கள் வினைச்சொற்கள் என்று பிரிக்கலாம்.

### 2.1.2. இடைச்சொற்கள்

கீழே கண்ட வாக்கியங்களைப் பாருங்கள்:

1. கோவலன் கண்ணகியை மணந்தான்.
2. கோவலனும் கண்ணகியும் மதுரைக்குப் போனார்கள்.
3. அவ்விடத்தில் கோவலன் கொலையுண்டான்.
4. கோவலனைக் கொன்றது நீதியா? என்று கண்ணகி பாண்டினைக் கேட்டாள்.
5. நான் தவறு செய்து விட்டேனே என்று பாண்டியன் பதறினான்.

மேலே வாக்கியங்களில் தடித்த எழுத்திலுள்ள

**ஐ** - என்பது இரண்டாம வேற்றுமை உருபு - பெயரை ஒட்டி வந்தது.
**உம்** - என்பது எண்ணுவதற்குப் பயன்படும் சொல் - பெயரை ஒட்டி வந்தது.
**அ** - சுட்டுச்சொல் - பெயரை ஒட்டி வந்தது.
**இல்** - என்பது ஏழாம் வேற்றுமை உருபு - பெயரை ஒட்டி வந்தது.
**ஆ** - வினாவை உணர்த்தும் சொல் - பெயரை ஒட்டி வந்தது
**ஏ** - தேற்றத்தை உணர்த்தும் சொல் - வினையை ஒட்டி வந்தது.

இவைகள் எல்லாம் ஏதாவது பெயர் அல்லது வினையைச் சார்ந்து வருவதைப் பார்க்கிறோம். இவ்வாறு பெயர் அல்லது வினையை இடமாகக் கொண்டு வருபவை **இடைச்சொற்கள்** எனப்படும். இவ்விடைச்சொற்கள் பெயர், வினையைப் போல் முழுச் சொற்களாகத் தனியாக வராமல் பெயர் வினையைச் சார்ந்துதான்வரும்.

இன்று மதுரையிலே மாநாடு
இன்று மதுரையில் மாநாடு

**இல்** — ஏழாம் வேற்றுமை உருபு
**ஏ** — அசைநிலை

அசைநிலை பெரும்பாலும் பொருளின்றிச் சொல்லை எளிதாகச் சொல்வதற்காக வரும். இதுவும் **இடைச்சொல்**தான். மேலும் பாருங்கள்.

செய்தான் என்பதைச் செய்-த்-ஆன் என்றும் பாகுபடுத்திப் பார்க்கலாம். இங்கு-த்-இறந்த காலம் காட்டும், - ஆன் - ஆண்பால், படர்க்கை இடத்தை உணர்த்தும். இவையும் இடைச்சொற்கள் தான். கீழேவரும் உவமைவருபு, மற்று என்ற சொல் முதலியனவும் இடைச்சொற்களே.

இறைவன் அகரம் **போல** முதல்வன்
**மற்று** இதனால் பயன்என்ன?

எனவே கீழே கண்டவை இடைச்சொற்களாக வரும்.

1. வேற்றுமை உருபுகள் — 2 முதல் 7 வரை (இதன் விளக்கம் பின்னால் பார்க்கலாம்).
2. சுட்டுச்சொற்கள் (அ, இ)
3. உம் போன்ற எண்ணிடைச் சொற்கள்.
4. வினாவை உணர்த்தும் வினாவிடைச் சொற்கள் (ஆ, ஓ முதலியவை).

5. தேற்றச்சொற்கள் (ஏ முதலியவை), குறிப்பை வேறுபடுத்துபவை (மற்று)
6. அசை நிலை (ஏ முதலியவை)
7. கால இடைநிலை, விகுதிகள் (த், ஆன் போன்றவை)
8. உவம உருபுகள் (போல)

### 2.1.3 உரிச்சொற்கள்

ஆலயம் தொழுவது சாலவும் நன்று.

இந்த முதுரையைப் படித்திருப்பீர்கள். இங்கு வரும் சால என்பது மிகவும் என்ற பொருளைத்தரும். இவ்வாறு ஒரு சொல்லுக்கு அடையாக வரும் சொற்கள் அடைச்சொற்களாகும். இவை பெரும்பாலும் பழைய இலக்கியத்தில் வரும். இங்ஙனம் அடையாக, பண்பை உணர்த்துவனவாய், செய்யுளுள் பயின்று வருபவை உரிச் சொல் எனப்படும்.

நினைவிற் கொள்க:




தன் மதிப்பீடு: 2

பயிற்சியும் வினாக்களும்

(1) கீழ்க்காணும் வாக்கியங்களிலுள்ள பெயர், வினை, இடை உரிச்சொற்களைப் பிரித்தறிக. கீழே அடைப்புள் அவைகளை எழுதிக்காட்டுக.

1. எறும்பு ஊர்ந்து நனி விரைவாய்ச் செல்கிறது.
2. அன்பரசன் காலையில் எழுந்து படிக்கிறான்.
3. பூங்கொடி இரவும் பகலும் உழைக்கிறாள்.
4. செய்யும் தொழிலே தெய்வம்.
5. உறுபசி இல்லாததே நாடு.

| பெயர் | வினை | இடை | உரி |
|---|---|---|---|
| | | | |

(2) இடைச்சொற்கள் என்பன யாவை?
(3) உரிச்சொல்லின் இலக்கணம் யாது?

## 2.2 இலக்கியவகைப் பாகுபாடு

இலக்கியத்தில் வரும் சொற்களைக் கீழ் வருமாறு நான்காகப் பாகுபடுத்துவதும் உண்டு. முன் கூறியது பொதுவானது; இது நூல்களில் இடம் பெறும் சொற்களைப் பற்றியது.

1. **இயற்சொல்:-** எளிதில் பொருளுணரும் வழக்குச் சொற்கள் (எ-டு) எருது, வீடு, ஆள்.
2. **திரிசொல்** — எளிதில் பொருளுணராத சொற்கள் (எ-டு) மாலை-ஆரம், காலம்; குவளை-கோப்பை, மலர் போன்று இருபொருள் தருவன.

3. ***திசைச் சொல்* — வட்டார வழக்குச் சொற்கள்.**
(எ-டு) பள்ளம் என்றால் நீரோடை என்ற பொருளில் கொங்கு நாட்டில் பயன்படுத்துவர்; பள்ளம் என்றால் தாழ்வான பகுதி என்பது பொதுவான பொருள்.

4. ***வடசொல்* — சமஸ்கிருதத்திலிருந்து வரும் சொற்கள்**
(எ-டு) பங்கஜம், அரி

---

## 2.3 திணை, பால், எண், இடம்

வினைச் சொற்கள் திணை, பால், எண், இடம் என்ற உட்பிரிவுகளை உணர்த்துவனவாகும். ஒரு வாக்கியத்தில் இவற்றிடையே இயைபு இருந்தால்தான் தெளிவுதரும். அதற்கு இவை ஒவ்வொன்றும் என்ன என்பதை விளங்கிக் கொள்ளல் பயனுடையதாகும்.

### 2.3.1 திணை

நாய் ஓடினான்
ஆசிரியர் வந்தது

இந்த வாக்கியங்களைப் படித்ததும் நாம் சிரிக்கிறோம். ஏனென்றால் இவற்றில் பிழை உள்ளது என்று நமக்குத் தெரியும்.

நாய் ஓடியது
ஆசிரியர் வந்தார்

என்று சொல்லும் போது சரி என்று தலையாட்டுகிறோம். இந்த இரண்டு வித வாக்கியங்களுக்கிடையே உள்ள வேறுபாடு என்ன? நாய் என்ற பெயர்ச்சொல் ஓடினான் என்ற வினைச்சொல்லுடன் வந்து முடிவடையாது. ஏனென்றால் நாய் வாய் பேசாத விலங்கு; மனிதனிலிருந்து வேறு பட்டது; மனிதனைப் போன்ற பகுத்தறிவு அதற்கில்லை. எனவே நாயை மனிதனைப் போலச் சமமாக நினைத்துத் தமிழில் பேச இயலாது. அது போன்றே ஆசிரியர் — மனித இனத்தைச் சார்ந்தவர்; நாயைக் கூறுவது போல ஆசிரியரைத் தமிழில் கூற இயலாது. அதாவது நாய்க்கும் மனிதனுக்கும் அதன் வேறுபாட்டு அடிப்படையில் வேறுவேறு முறையில் மொழியில் அவற்றையும் அவற்றைப் பற்றியும் கூறுகிறோம். இந்த வேறுபாட்டை இலக்கணத்தில் **உயர்திணை, அஃறிணை** என்ற சொற்களால் குறிப்பிடுவார்கள்.

திணை என்றால் வகை, இனம், ஒழுக்கம் என்றெல்லாம் பொருள்கள் உண்டு. இங்கு **உயர்திணை** என்றால் உயர்ந்த வகை, இனம், ஒழுக்கமுடையது என்று பொருள். **அஃறிணை** என்றால் **உயர்திணை** அல்லாத திணை ஆகும் (அல்+திணை=அஃறிணை).

| | |
|---|---|
| உழவன், தொழிலாளி, மகள் - | இவை போன்றவை எல்லாம் உயர்திணை |
| மாடு, மரம், பாம்பு, வண்டி - | இவை போன்றவை அஃறிணை |

இந்தப் பாகுபாடு மொழியைப் பயன்படுத்துபவர்களுக்கு இயற்கையாகத் தெரியும். இது பெயர்ச்சொல்லுக்கும் வினைச்சொல்லுக்கும் பொருந்தும்.

### 2.3.2 பால்

1. செல்வி வந்தான்
2. அழகன் வந்தாள்

இந்த வாக்கியங்கள் தவறுடையன என்று நாம் உடனே தெரிந்து கொள்கிறோம். ஏன்? செல்வி பெண்ணைக் குறிப்பது. எனவே செல்வி வந்தாள் என்றிருக்க வேண்டும். அழகன் வந்தான் - என வரவேண்டும். அமகன் என்ற சொல் ஆணைக் குறிக்கும்.

இவ்வாறு ஆணையும் பெண்ணையும் பாகுபடுத்துகிற பாகுபாட்டையும் பால் என்று கூறுகிறோம். **பால் என்றால் பாகுபாடு, பிரிவு என்பது** பொருள். மேலே செல்வி வந்தாள் - **பெண்பால்**. அழகன் வந்தான் - **ஆண்பால்** ஆகும். இங்கு ள் - பெண்பாலையும் - ன் - ஆண்பாலையும் உணர்த்துகிற **விகுதிகள்** ஆகும். விகுதி என்றால் ஈறு என்று பொருள்.

1. முருகன் ஆடினான்
2. வள்ளி ஆடினாள்.
3. முருகனும் வள்ளியும் / ஆடினார்கள். (அவர்கள்)
4. வள்ளியும் தெய்வயானையும்/பாடினார்கள் (அவர்கள்)
5. ஆசிரியரும் மாணவரும்/வந்தார்கள் (அவர்கள்)

இவ்வாறு 3,4,5 வாக்கியங்களில் ஆண் பெண் பால்கள் கலந்து வரும்போது **பலர்பால்** என்கிறோம். இங்கு-ர்கள் என்பது பலர்பாலை உணர்த்தும் விகுதி. இவ்வாறு வரும் ஆண், பெண், பலர்பால் மூன்றும் உயர்திணையில் வரும்.

**ஒன்றன் பாலும் பலவின் பாலும்**

1. நாய் குரைத்தது.
2. காக்கைகள் கத்தின.

முதல் வாக்கியத்தில் குரைத்த நாய் ஒன்றுதான். இரண்டாம் வாக்கியத்தில் கத்தியவை ஒன்றல்ல பலகாக்கைகள்; ஒன்றை மட்டும் குறிப்பது **ஒன்றன் பால்**. ஒன்றுக்கு மேற்பட்டவை **பலவின்பால்** ஆகும்.

| | | |
|---|---|---|
| நாய் | | |
| குரைத்தது | - து | ஒன்றன்பால் விகுதி |
| காக்கைகள் | - கள் | இவை இரண்டும் பலவின்பாலை உணர்த்துகின்றன. |
| கத்தின | - அ | |

ஒன்றன் பாலும் பலவின்பாலும் அஃறிணையில் வரும்.




### 2.3.3 எண்

| | |
|---|---|
| மாணவன் படித்தான் | மாணவர்கள் படித்தார்கள் |
| மாணவி படித்தாள் | |
| குதிரை ஓடியது | குதிரைகள் ஓடின. |

முதல் வரிசையில் உள்ள தொடர்களுக்கும் இரண்டாம் வரிசையில் உள்ள தொடர்களுக்கும் உள்ள வேறுபாடு என்ன? முதல் வரிசையில் உள்ள பெயர்களும் வினைகளும் ஒரு பெயரை/ வினையை மட்டும் குறிக்கின்றன; இரண்டாம் வரிசையில் அவையெல்லாம் பல. இந்த எண்ணிக்கை வேறுபாட்டையே **எண்** என்கிறோம். ஒரு பெயர் வருவது **ஒருமை எண்**. பல பெயர் வருவது **பன்மை எண்**.



**உயர்வுப்பன்மை / மரியாதைப் பன்மை**

தாயார் வந்தார்
தகப்பனார் வந்தார்

இங்கு தாய், தந்தை ஒருவர் ஆயினும் மரியாதைக்காகப் பன்மையில் கூறுகிறோம். ஆனால் குறிக்கும் பொருள் ஒருமைதான். இவற்றை **உயர்வுப்பன்மை** என்பர்.

**பால் உணர்த்தும் விகுதிகள்**

1. பெயர்ச்சொற்களில் அவற்றின் விகுதியை வைத்துப் பால் கண்டுபிடிக்கலாம்.

செல்வன் - ஆண்பால்
செல்வி - பெண்பால்
அக்காள் - பெண்பால்

ஆனால் எப்பொழுதும் இவ்வாறு கண்டிபிடிக்க இயலாது. மிகச் சில இடங்களில் இவ்வாறு வரும்.

அம்மன் - இது ஆண்பாலன்று - பெண்பால்
ஆள் - இது பெண்பாலன்று - ஆண்பால்

**2.3.4 இடம்**

நான் படிக்கிறேன்
நீ எழுதுகிறாய்
அவன் கேட்கிறான்

இந்த வாக்கியங்களில் நான், நீ, அவன் என்ற பெயர்ச்சொற்கள் வருகின்றன.

நான் - பேசுபனைக் குறிக்கிறது - **தன்னிடம்**
நீ - கேட்பவனைக் குறிக்கிறது - **முன்னிடம்**
அவன் - பேசப்படும் மூன்றாவது ஆளைக்குறிக்கிறது-**படர்க்கை**

எனவே நாம் பேசும் போது மூன்று இடங்கள் அமைகின்றன.

**தன் மதிப்பீடு : 3**

**பயிற்சி:**

1. கீழே கண்ட சொற்களின் திணை, பால், எண், இடம் கூறுக. அவற்றின் விகுதிகளையும் எடுத்துக்காட்டுக.

| சொற்கள் | திணை | பால் | எண் | இடம் | விகுதி |
|---|---|---|---|---|---|
| வளவன்<br>நிலம்<br>நான்<br>நீர்<br>தின்றான்<br>எழுந்தது<br>ஆடின | | | | | |

கீழே உள்ள வாக்கிய மாற்றங்களைப் பார்க்கவும். இடப்பெயரும் வினையும் மாறுவதைக் கவனிக்கவும்:

'நான் நாளை வந்து உங்களைப் பார்க்கிறேன்' என்றாள் ஆண்டாள்.
ஆண்டாள் நாளை வந்து தான் அவரைப் பார்ப்பதாகக்கூறினாள்.

'இனிமேல் குடிக்க மாட்டேன்' என்றான் சொக்கன்.
சொக்கன் இனிமேல் தான் குடிப்பதில்லை என்றான்.

***நினைவிற் கொள்க:***

| | | | | |
|---|---|---|---|---|
| நான் + நீ - | நாம் | | நீ + நான் - | நாம் |
| நான் + அவன் / அவள் / அது / அவை | நாங்கள் | | நீ + அவன் / அவள் / அது / அவை | நீங்கள் |

## 2.4. பெயர்ச்சொற்கள்

பெயர்ச்சொற்கள் இன்றியமையாதவை. அவை மனிதர், பொருள்கள் இவை போன்றவற்றின் குறியீடுகளாக வழங்குகின்றன.

### 2.4.1 பெயர்ச்சொற்களின் பாகுபாடு

பெயரை உணர்த்தும் சொற்கள் பெயர்ச்சொற்கள் என்று முன்பு பார்த்தோம். பெயர்ச்சொற்களை நாம் பலவாறாகப் பிரிக்கலாம். கீழேயுள்ள படம் அதை விளக்கும்.




இவற்றை எடுத்துக்காட்டுகளுடன் தரலாம்:

1. பொருட்பெயர் - பொருளைக் குறிப்பவை
   முருகன், மாடு, கிளி
2. இடப்பெயர் - இடத்தைக் குறிப்பவை
   வீடு, பள்ளி, சென்னை
3. காலப்பெயர் - காலத்தைக் குறிப்பவை
   காலை, நிமிடம், மணி, புதன், சித்திரை
4. சினைப்பெயர் - உறுப்புக்களைக் குறிப்பவை
   கண், கால், தலை, வால், கிளை, பூ, வேர்
5. பண்புப்பெயர் - பண்பைக் குறிப்பவை
   சிவப்பு, நீளம், நன்மை, அன்பு, பெருமை, வட்டம்
   இவற்றில் 'மை'-இறுதியைப் பெற்ற பெயர்கள் பல உண்டு.
6. தொழிற்பெயர் - தொழிலைக் குறிப்பவை
   இத் தொழிற் பெயர்கள் எல்லாம் ஒரு வினைச்சொல்லிலிருந்து பலவித ஈறுகள் சேர்ந்து வருபவையாம்.

ஓடு + அம் = ஓட்டம்
படி + பு = படிப்பு
நட + ஐ = நடை
வா + கை = வருகை

இச்சொற்களில் வரும் அம், ஐ, பு, கை முதலியவற்றைத் **தொழிற்பெயர்** விகுதிகள் என்பர்.

சில இடங்களில் வினைச்சொல்லின் அடியே நின்று பெயராக வரும்.

எ-டு: சோறு கொதி வந்தது.

கொதி = கொதிப்பு என்று பெயராக வருகிறது.
இது முதல்நிலைத் தொழிற்பெயராகும்.

#### எதிர்மறைத் தொழிற்பெயர்

உண்ணாமை, கேளாமை, கொல்லாமை - போன்ற சொற்கள் எதிர்மறைப் பொருளில் வரும் தொழிற்பெயர்களாகும்.

இரவில் மழை பெய்ததா? **பெய்ததே** எனக்குத் தெரியாது - இங்குப் '**பெய்தது**' மழை பெய்த செயலைக் கூறுகிறது. இதுவும் தொழிற்பெயரே. '**ஓதுவது ஒழியேல்**'. ஓதுவது என்பது தொழிற்பெயர்.

**வினையாலணையும் பெயர்**

ஒரு வினைச்சொல் பெயராக நின்று தொழில் முதலியவற்றைக் குறிப்பது தொழிற்பெயர்; வினைச்சொல் தொழில் செய்கிறவனைச் சுட்டுவது **வினையாலணையும் பெயராகும்**. அங்கே **நிற்பது** கூடாது. இதில் நிற்பது தொழிற்பெயர். அங்கே நிற்பது நம் வீட்டுப்பசு. இதில் நிற்பது **வினையாலணையும்** பெயர். முதலிலுள்ளது நிற்றலாகிய செயலையே குறிக்கும். பின்வரும் நிற்பது என்பது பசுவைச் சுட்டலால் **வினையாலணையும்** பெயர்.

படித்தவன்
படிக்காதவன்
பாடுபவர்
கேட்டவர்
படைத்தவன்

தொழிற்பெயர் - **வினைச்சொல்லின்** முதற்பகுதியுடன் விகுதிகள் சேர்ந்தமையும், **வினையாலணையும்** பெயர் வினைமுற்றிலிருந்து தோன்றுவதாகும். அதனால் அதை **வினைமுற்றுப்பெயர்** என்றும் கூறுவர்.

| **தொழிற்பெயர்** | **வினையாலணையும் பெயர்** |
|---|---|
| 1. தொழில், செயப்படு பொருள் முதலியவற்றைக் குறிக்கும். | 1. தொழில் செய்கிற முதலைக் குறிக்கும். |
| 2. வினைச்சொல்லின் முதல் பகுதியுடன் விகுதிகள் சேர்ந்து அமையும். (செய்தது போன்றவை விலக்கு) | 2. வினைமுற்றுக்களிலிருந்து தோன்றும். |
| 3. பெரும்பாலும் காலம் காட்டாது. (செய்தது போன்றவை விலக்கு) | 3. காலம் காட்டும். |

**தன் மதிப்பீடு : 4**

**பயிற்சி**

கீழே உள்ள வினைச்சொற்களில். தொழிற்பெயர், வினையாலணையும் பெயர்கள் தருக (எடுத்துக்காட்டு நோக்கிச் செய்க:)

| **வினைச்சொல்** | **தொழிற்பெயர்** | **வினையாலணையும் பெயர்** |
|---|---|---|
| வா | வரவு | வந்தவன் |
| போ | | |
| நடு | | |
| குழம்பு | | |
| கிளர் | | |
| அள | | |
| வளர் | | |

**எண்ணுப்பெயர்கள்**

ஒன்று, இரண்டு முதலிய எண்களைச் சுட்டும் பெயர்கள் எண்ணுப்பெயர்கள் ஆகும்.

### 2.4.2 பெயர்ச்சொற்களின் அமைப்பு

கூனன் - கூன் + அன்
கூனி - கூன் + இ
மண்வெட்டி - மண்வெட்டு + இ

இப்பெயர்ச்சொற்களைப் பிரிக்கும் போது - கூன், மண்வெட்டு என்ற இரண்டு சொற்களுடன் அன், இ ஈறுகள் அமைந்துள்ளது தெரிகிறது. முதலில் உள்ள சொற்களைப் பகுதி என்றும் சேரும் ஈறுகளை **விகுதி** என்றும் சொல்வர்.

கீழே உள்ள சொல்லைப் பாருங்கள்

அறிஞன் - அறி+ஞ்+அன்
இதில் இடையில் உள்ள 'ஞ்' பெயரிடை நிலை எனப்படும்.

பயிற்சி:

கீழே உள்ள சொற்களைப் பிரித்துப் பார்க்கவும்:

கலைஞர், அனுப்புநர், தொழிலாளி, வாக்காளர், உறுப்பினர்.

### 2.4.3. பெயர்ச்சொற்களின் இயல்பு

**பெயர்ச்சொல் காலம் காட்டாது.**

வேலன் வந்தான்

என்று கூறும் போது வந்தான் என்பது நேற்று வந்த செயலைக் குறிக்கிறது. ஆனால் வேலன் என்ற பெயரில் இது போன்று காலம் இல்லை.அவன் எப்போதும் வேலன்தான். எனவே பெயர்ச்சொல் காலம் காட்டாது என முடிவு செய்யலாம்.

**பெயர்ச்சொல் வேற்றுமை உருபு ஏற்கும்.**

மாலவன் வேலவனைப் பார்த்தான்.

வேலவன் என்ற சொல்லுடன் 'ஐ' என்ற வேற்றுமை உருபு சேர்ந்துள்ளது. பார்த்தான் என்ற வினைச்சொல்லுடன் 'ஐ' உருபு சேர்ந்து வராது. எனவே பெயர்கள் **வேற்றுமை உருபை ஏற்கும்** என்று முடிவு செய்யலாம்.

ஆகுபெயர்

1. சிவனப்பன் நல்ல வெள்ளைச் சட்டை உடுத்திருக்கிறான்.
2. சிவனப்பன் நல்ல வெள்ளை உடுத்திருக்கிறான்.

முதல் வாக்கியத்தில் 'வெள்ளை' நிறத்தைக் குறிக்கிறது. இரண்டாம் வாக்கியத்தில் 'வெள்ளை' சட்டையைக் குறிக்கிறது. இங்கு வெள்ளை என்பது சட்டையை உணர்த்துகிறது என்பதை உடுத்திருக்கிறான் என்ற வினைச்சொல்லால் உணருகிறோம்.

மங்கை சுவருக்கு வெள்ளை அடித்தாள் - என்ற வாக்கியத்தில் 'அடித்தாள்' என்ற வினையை வைத்து 'வெள்ளை' - சுண்ணாம்பு என்ற அறிகிறோம். இவ்வாறு சில சமயம் விரைவு, சிக்கனம் (வெள்ளைச் சட்டைக்குப் பதில் வெள்ளை), பொருள்களுக்கிடையே உள்ள தொடர்பு (வெள்ளை - சுண்ணாம்பு) கருதி ஒரு பெயர், தொடர்புடைய வேறொரு பெயருக்கு ஆகிவரும். **இதுவே ஆகுபெயர்.** ஆன சொல்லுக்கும் ஆகிவந்த சொல்லுக்கும் உள்ள தொடர்பு கருதி அவற்றைப் பலவாறாகப் பிரிப்பர்.. இங்கு வெள்ளை பண்பாகுபெயர். 'இதோ, புலி வருகிறான்' என்னும்போது புலிபோன்ற வீரன் எனப் பொருள்படுவதால் அதனை **உவமையாகு** பெயர் என்பர்.

நாம் நாள்தோறும் பல ஆகுபெயர்களைப் பயன்படுத்தி வருகிறோம். ஆனால் அவை ஆகுபெயர் என நமக்குத் தெரியாமலே உள்ளன.

கீழே சிலவற்றைப் பாருங்கள்:

1. அவர் லாட்டரிக்கடையில் **ஹரியானா** வாங்கினார் - லாட்டரி டிக்கெட்டு - இடப்பெயர் பொருளுக்கு ஆகிவந்தது - இடவாகுபெயர்.
2. அதோ **ஏழு** வருகிறது - பஸ், பேருந்து - எண்ணுப்பெயர் பொருளுக்கு ஆகிவந்தது - எண்ணாகுபெயர்
3. நெற்றியில் **சிவப்பு** வைத்துக் கொண்டாள் - குங்குமம் - பண்பாகுபெயர்.

### 2.4.4 பதிற்பெயர்கள் (விளியேலாப் பெயர்கள்)

பாண்டியன் மதுரைக்கு வந்தான்; **அவன் அங்கு** ஒரு புத்தகம் வாங்கினான். இங்கு **அவன்** - பாண்டியனுக்குப் பதிலாகவும், **அங்கு** - மதுரைக்குப் பதிலாகவும் வருகின்றன அல்லவா? ஒரு பெயர் தனக்கு முன்வரும் இயற்பெயருக்குப் பதிலாக வருவது பதிற்பெயராகும். இவைகளை 'பாண்டியா' என்று விளிப்பது போன்று விளிக்க இயலாது; எனவே இவை **விளியேலாப் பெயர்கள்** எனவும் கூறப்படும்.

**பதிற்பெயர்கள்:**

1. **மூவிடப்பெயர்கள் - நான், நீ, அவன்**
2. **வினாப்பெயர்கள் - யார், எவன், எது**
3. **சுட்டுப்பெயர்கள் - அ, இ, அது, இது**
4. **எண்ணுப்பெயர்கள் - ஒன்று, இரண்டு**

**எனப்பலவகைப்படும்.**

## 2.5 வினைச்சொற்கள்

வினை என்பது செயல் அல்லது தொழில். ஒரு பெயர் அல்லது பொருளின் இயக்கத்தைக் குறிக்க வரும் சொல் வினைச்சொல்லாகும்

### 2.5.1 வினைச்சொல்லின் இயல்பு

தொழிலைக் குறிக்கும் சொல் வின்னச்சொல் எனப் பார்த்தோம்.

பாடினாள்-

என்ற வினைச் சொல்லைக் கேட்டதும் பாடுவது என்ற **தொழிலை** உணர்கிறோம். அது மட்டுமா? பாடின**காலம்** நேற்று என்பதும் தெரிகிறது.

எனவே வினைச்சொல்

1. தொழிலைக் குறிப்பதோடு
2. காலத்தையும் காட்டும்

என்பதை உணரலாம். அது மட்டுமன்று - பாடி<u>னாள்</u> - என்பதால் அந்தச் செயலைச் செய்தவர் ஒரு பெண் என்று அவ்வினையின் வினைமுதலையும் (எழுவாயையும்) உணருகிறோம். காலம் - இறந்த காலம் (சென்று போன காலம்), நிகழ்காலம் (நடக்கும் காலம்), எதிர்காலம் (வரும்காலம்) என மூவகைப்படும்.

பாடினாள் - பாடுகிறாள் - பாடுவாள்

### 2.5.2 வினைகளின் வகைகள்

***நீ பாடு!***
***நீ பாடாதே!***
***நீ பாடுக!***
***அவள் பாடுகிறாள்***
***அவள் பாடிய பாட்டு***
***அவள் பாடி நிறுத்தினாள்***

பாடு, பாடாதே - ஒருவரை ஏவுவதாக அமைகிறது - வினை, முற்றுப்பெற்றது.
பாடுக - ஒருவரை வேண்டுவதாக அமைகிறது - வினை, முற்றுப்பெற்றது.
பாடுகிறாள் - ஒருவர் செய்த செயலை எடுத்துரைக்கிறது - வினை, முற்றுப்பெற்றது.
பாடிய - பாட்டை விளக்கும் அடையாக வருகிறது. ஏனெனில் பாடாத பாட்டும் உண்டல்லவா?
பாடி - செயல் முற்றுப்பெறவில்லை.

மேலே கண்டவற்றிலிருந்து வினைகளை 1. தொழில் முற்றுப்பெற்ற வினைகள் 2. தொழில் முற்றுப்பெறாமல் எஞ்சி நிற்கும் எச்சவினைகள் எனப் பிரிக்கலாம் என்று பார்க்கிறோம். முற்று வினைகளை **வினைமுற்று** என்பர். எச்சவினைகளைப் **பெயரெச்சம், வினையெச்சம்** என்பர்.

வினைகள்

வினைமுற்று | எச்ச வினைகள்

**வினைமுற்று**

மேலே கண்ட சொற்களில்

பாடு
பாடாதே
பாடுக
பாடுகிறாள்

இவை எல்லாம் வினைமுற்றுக்களாகும்.

பாடு என்று உடன்படுவதால் இது **உடன்பாட்டு முற்று**. ஏவுவதால் ஏவல் வினைமுற்று.
பாடாதே என்று உடன்படாமல் எதிர்ப்புக் காட்டுவதால் **எதிர்மறை ஏவல் வினைமுற்று**.
பாடுக - வேண்டுவதால் **வியங்கோள் வினைமுற்று**.
பாடுகிறாள் என்பது **செப்பு வினைமுற்று** (செய்தி நடந்ததைச் செப்புவதால் செப்பு ஆகிறது).

**எச்சவினைகள்**

எச்சவினைகளை அவை கொண்டுமுடியும் சொற்களை வைத்து 1. பெயரெச்சம் 2. வினையெச்சம் என இரண்டாகப் பிரிக்கலாம்.

**பெயரெச்சம்**

ஒரு வினைச்சொல் பெயரைக் கொண்டு முடிந்தால் பெயரெச்சமாகும்.

| 1 | 2 | 3 |
|---|---|---|
| பாடின பெண் | பாடுகிற பெண் | பாடும் பெண் |
| பாடின பாட்டு | பாடுகிற பாட்டு | பாடும் பாட்டு |
| பாடின மெட்டு | பாடுகிற மெட்டு | பாடும் மெட்டு |

முதலில் உள்ளதை இறந்தகாலப்பெயரெச்சம் என்றும் இரண்டாவது உள்ளதை நிகழ்காலப் பெயரெச்சம் என்றும் மூன்றாவது உள்ளதை எதிர்காலப் பெயரெச்சம் என்றும் கூறுவர்.

பெயரெச்சத்தைக் கண்டுபிடிக்கும் வழி

1. பெயரெச்சம் ஒரு வினையைக் குறிக்கும்.
2. அது குறிக்கும் வினையின் நிகழ்ச்சி ஒரு பெயரைக் கொண்டு முடியும்
3. அ, உம் (செய்த, செய்கிற, செய்யும்) என்ற அமைப்பில் இருக்கும்.

பெயரெச்சம் எதிர்மறையாக வரும்போது அஃது **எதிர்மறைப் பெயரெச்சம்.**

பாடாத பாட்டு

இது சில வேளைகளில் 'பாடாப்பாட்டு' என 'த' ஈறுகெட்டு வரும்.

இதை **ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்** என்பர்.

**வினையெச்சம்**

இந்தப் பாடத்தைப் படித்து முடி.

இதைப் **படித்துப்பார்த்து** உன் கருத்தைச் **சொல்லுவாய்.**

இங்கே படித்து, பார்த்து என்ற சொற்கள் செயல்முடிவு பெறாமல் இருப்பதைக் காட்டுகின்றன.

படித்து முடி — என மீண்டும் முடி என்ற வினைச்சொல் வந்துதான் பொருள் முடிவு பெறுகிறது.

அதுபோன்றே

படித்துப் பார்த்து .......... சொல்லுவாய்

**படித்து** என முடிவு பெறாத சொல் **பார்த்து** என்ற வினையைக் கொண்டு முடிய, **பார்த்து என்று முடியாமல் நிற்கும் சொல்லும் சொல்லுவாய்** என்ற வினைச்சொல்லைக் கொண்டு பொருள் முடிவு பெறுகிறது. பார்த்து **உன்** என்று இதற்குப்பின் பெயர்ச்சொல் இருந்தாலும் பொருள் முடிவது சொல்லுவாய் என்ற வினை கொண்டுதான். இவ்வாறு வினையைக் கொண்டு முடியும் வினைச்சொல் **வினையெச்சம்** ஆகும்.

இவ்வாறு வரும் வினையெச்சம் பலவகைப்படும்.

1. செய வாய்பாட்டு வினையெச்சம்
   மாதவி **ஆட** வந்தாள்.
2. செய்து வாய்பாட்டு வினையெச்சம்
   மாதவி **ஆடி** மகிழ்ந்தாள்.

   கோவலன் **கண்டு** மகிழ்ந்தான்.

   அவன் **உண்ணாமல்/உண்ணாது** இருந்தான் — எதிர்மறை

ஆடி — என்பது இ என முடிந்தாலும் அது செய்து என்பதன்கீழ் அமையும்.

3. செய்தால் வாய்பாட்டு வினையெச்சம்
   நன்கு **படித்தால்** வெற்றி -பெறுவாய் — உடன்பாடு
   நன்கு **படிக்காவிட்டால்** வெற்றிபெறமாட்டாய் — எதிர்மறை
4. செய்வதற்கு வாய்பாட்டு வினையெச்சம்
   கோவலன் சிலம்பை **விற்பதற்குப் புறப்பட்டான்.**
5. செய்தபின் வாய்பாட்டு வினையெச்சம்
   அவர் ஜெபம் **செய்தபின்** உறங்கினார்.
   நீ **படித்தபின்** விளக்கை நிறுத்து.

### 2.5.3. வினைச்சொற்களின் அமைப்பு (பகுபத இலக்கணம்)

***செய்கிறான்***
***செய்தான்***
***செய்வான்***

இந்த மூன்று வினைச்சொற்களையும் ஒப்பிடும்போது இவற்றை இன்னும் சிறுசிறு பகுதிகளாகப் பிரிக்கலாம் என்று தோன்றுகிறது.

***செய் — கிறு — ஆன்***
***செய் — த் — ஆன்***
***செய் — வ் — ஆன்***

இவ்வாறு சொற்களைப் பிரித்து எத்தனை உறுப்புகள் உள்ளன, அவை என்ன பொருளைத் தருகின்றன என்று பார்க்கலாம். இவ்வாறு பகுத்துப் பார்ப்பதை **பகுபத இலக்கணம்** என்று கூறுவர்.

பகுபத உறுப்புகள் — பகுக்கப்படும் சொல் என்று பொருள்.

பகுக்கப்படும் வினைச்சொற்களின் உறுப்புக்களாகக் கீழ்க்கண்ட **ஆறினைக்** குறிப்பிடுவர்.

| 1<br>பகுதி | (விகாரம்) 2<br>— சந்தி | 3<br>— இடைநிலை | 4<br>— சாரியை | 5<br>— விகுதி |
|---|---|---|---|---|
| நட<br>வா (வ) | — த்(ந்)<br>—த் (ந்) | — த்<br>— (த்) | — அன்<br>— அன் | |

1. பகுதி **(முதனிலை)**

வினைச்சொல்லை ஏவலாகக் கூறும்போது அமையும் வடிவமே வினைப்பகுதியாக வரும்.

செய் — த் — ஆன்

எனவே வினைப்பகுதி கண்டுபிடிக்க அதன் ஏவல் வடிவத்தைக் கண்டுபிடித்தால் போதும்

| | | பகுதி |
|---|---|---|
| எ-டு: நின்றான் | — | நில் |
| கொண்டான் | — | கொள் |
| சொன்னான் | — | சொல் |

**வினைப்பகுதிகளின் பாகுபாடு**

வினைப்பகுதிகளின் கால இடைநிலைகள் ஏற்று திரிந்து வருவதை ஒட்டி கீழ்க்கண்ட 13 ஆகப் பாகுபடுத்துவண்டு:

1. செய் 2. ஆள் (ஆளு) 3. கொல் (கொல்லு) 4. அறி 5. ஆக்கு 6. நடு 7. உண் (உண்ணு) 8. தின் (தின்னு) 9. கேள் 10. கல் 11. தீர் 12. நட 13. தா, சா, காண் போன்று திரிந்து வேறுபடுபவை.

**2. விகுதி**

பகுபதத்தின் இறுதியில் நிற்பது விகுதி.

| | | |
|---|---|---|
| செய் — த் — **ஆன்** | — | படர்க்கை ஆண்பால் விகுதி |
| செய் — த் — **அ** | - | பெயரெச்ச விகுதி |
| செய் — த் — **உ** | — | வினையெச்ச விகுதி |
| செய் — **அ** | — | வினையெச்ச விகுதி |
| செல் — **க** | — | வியங்கோள் விகுதி |

**3. இடைநிலை**

பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் நிற்பது. வினைச்சொற்களில் இடைநிலைகள் காலம் காட்டும்.

| | | |
|---|---|---|
| அழு — **த்** — ஆன் | த் | இறந்தகால இடைநிலை |
| **உண்** — **ட்** — ஆள் | ட் | |
| சென் — **ற்** — அது | ற் | |
| ஆடு — **இன்** — ஆள் | இ(ன்) | |
| வரு — **கின்று** — ஆன் | கின்று | நிகழ்கால இடைநிலை |
| போ — **கிறு** — ஆன் | கிறு | |
| எழுது — **வ்** — ஆர் | வ் | எதிர்கால இடைநிலை |
| காண் — **ப்** — ஆர் | ப் | |

**4. சாரியை**

**வினைச் சொற்களில் வரும் சாரியை இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையில் வரும் இணைப்புக் கூறுவதாகும்.**

**நட + ந் + த் + அன் + அன் — அன் — சாரியை**

**(பெயரில் வரும் சாரியை பெயர்ச்சொல்லுக்கும் வேற்றுமை உருபுக்கும் இடையில் வரும்: பாட்டினுடைய — 'இன்' சாரியை. இது பற்றி வேற்றுமை உருபுகள் பகுதியில் காண்க).**

**5. சந்தி**

**பகுதிக்கும் இடைநிலைக்கும் இடையில் வருவது.**

**படி + த் + த் + அன் + அன் — 'த்' சந்தி**

**6. விகாரம்**

**விகாரம்** என்றால் வேறுபாடு என்று பொருள். பொதுவாக பகுபத உறுப்புகளில் ஏற்படும் மாற்றங்கள் விகாரம் எனப்படும். அவை புணர்ச்சி விகாரம் போல்பவையே. பகுதி, சந்தி முதலியவற்றில் ஏற்படும் விகாரத்திற்கு இங்கு எடுத்துக்காட்டுக் காண்க:

வந்தனன் என்பதில்

**வா(வ) + த்(ந்)** + த் + அன் + அன் உள. வா—வ; த்—ந் இரண்டும் விகாரமாகும். உண்மையில் பகுபத உறுப்புகள் ஐந்துதான். அவை சேரும் போது ஏற்படும் புணர்ச்சி தொடர்பான மாற்றங்கள் சந்திகள் — விகாரம் எனப்பட்டன.

**தன் மதிப்பீடு: 5**

**பயிற்சி**

கீழே கொடுத்துள்ள வினைகளுக்குப் பகுபத இலக்கணம் கூறுக. (மாதிரிக்கு ஒன்று காட்டப்பட்டுள்ளது).

1. கண்டான் 2. செத்தது 3. கொடுத்தேன் 4. ஆட்டினேன் 5. நட்டான் 6. பெய்த 7. கொய்ய 8. ஓடி 9. வீசினான் 10. ஓங்குக.

| சொல் | விகாரம் பகுதி | விகாரம் விகுதி | இடைநிலை | சாரியை | விகுதி |
|---|---|---|---|---|---|
| கண்டான் | காண்(கண்) | ட் | | | ஆன் |

**2.5.4 ஏனைய வினை வகைகள்**

**தன்வினை — பிறவினை**

**நான் கடவுளைக் கண்டேன்; உனக்கும் காண்பிக்கிறேன்.**
**கண்டேன் என்பது தன்வினை**
**காண்பிக்கிறேன் — என்பது இன்னொருவரைக் காணச்செய்வதால் பிறவினை.**

மேலும் காண்க.

தமிழ்ப் பாடத்தை நானே **கற்கிறேன்; எனக்கு** யாரும் **கற்பிப்பதில்லை.**

பி — பிறவினையை உணர்த்துகிறது. நான் செய்தியை இப்பொழுது தான் **அறிந்தேன்.** உனக்கு யார் இதை **அறிவித்தார்கள்.**

வி — பிறவினையை உணர்த்துகிறது.

இன்றைய தமிழில் நாம் செய், வை போன்றவற்றை முதல் வினையுடன் சேர்த்துச் சொல்வதன் மூலம் பிறவினையை ஆக்குகிறோம்.

தாய் குளிக்கிறாள்
தாய் குழந்தையைக் குளிக்க வைத்தாள்/குளிப்பாட்டினாள்
தாய் குழந்தையை எழுதச் செய்தாள்/எழுத வைத்தாள்

இதையே குளிப்பித்தாள், எழுதுவித்தாள் என்றும் கூறலாம். மேலும் ஓடு-ஓட்டு; மயங்கு-மயக்கு என்று பகுதி திரிந்தும் பிறவினை உணர்த்தப்படும்.

**செயப்படு பொருள் குன்றாவினை — செயப்படு பொருள் குன்றிய வினை**

அண்ணன் புல்லைப் பறிக்கிறான்
தம்பி! மாட்டை அடிக்காதே
குழந்தை பழம் தின்றது

இங்குள்ள வினைகளுக்கொல்லாம் புல், மாடு, பழம் என்பவை செயப்படு பொருளாக வருகின்றன (இது பற்றிய விளக்கம் வேற்றுமை, தொடர்கள் என்ற பகுதிகளில் காண்க). இத்தகைய வினைகளைச் செயப்படுபொருள் குன்றா வினைகள் என்பர்.

மழை பெய்தது
குழந்தை உறங்குகிறது
மரம் ஆடியது

இவ்வாக்கியங்களிலுள்ள வினைகளுக்குச் செயப்படுபொருள் இல்லை. இத்தகைய வினைச்சொற்களைச் செயப்படுபொருள் குன்றிய வினைகள் என்பர்.

**தன் மதிப்பீடு-6**

**பயிற்சி**

செய்யப்படுபொருள் **குன்றா வினை, குன்றிய வீனைகளைச்** சுட்டுக.

1. வணங்கினான்
2. இறங்கினான்
3. முளைத்தது
4. வருந்தினான்
5. நீட்டினான்

**செய்வினை, செயப்பாட்டுவினை**

வீடு வாடகைக்கு விடப்படும்
கொள்ளையர்கள் பிடிபட்டனர்
போன்ற வாக்கியங்களை நீங்கள் படித்திருப்பீர்கள். இதை முழுவதுமாக எழுதினால் கீழே உள்ளவாறு அமையும்.

எங்களால் வீடு வாடகைக்கு விடப்படும்.
போலீசால் / மக்களால் > கொள்ளையர்கள் பிடிபட்டனர்

இதையே நேராகச் சொன்னால்

நாங்கள் வீட்டை வாடகைக்கு விடுகிறோம்
போலீசார் > கொள்ளையர்களைப் பிடித்தனர்
மக்கள்

இவ்வாறு எழுவாயே (நாங்கள், போலீஸ்) செயலைச் செய்ததாகக் கூறுவது செய்வினை. செயப்படுபொருளை (வீடு, கொள்ளையர்கள்) வைத்துச் சொல்வது செயப்பாட்டுவினை. செய்வினை செயப்பாட்டு வினையாக மாறும்போது எழுவாயுடன் ஆல் சேருவதையும் வினைச்சொல் செய் + படு என்றும் அமைவதைக் கவனியுங்கள்.

இத்தகைய செயப்பாட்டுவினை பேச்சில் வராது. பெரும்பாலும் செய்தித் தாள்களில் இதைப் பார்க்கலாம். சில வேளை எழுவாய் யாரென்று தெரியாதபோது இவ்வாறு கூறுவோம்.

இந்திராகாந்தி சுட்டுக் கொல்லப்பட்டர் (ஏனெனில் யார் சுட்டுக் கொன்றார்கள் என்று தெரியாது). பேச்சில் இந்திராகாந்தியைச் சுட்டுக் கொன்று விட்டனர் என்று எழுவாயைச் சுட்டாது கூறுவோம்.

பெரும்பாலும் இத்தகைய செயப்பாட்டுவினை அமைப்பைத் தவிர்க்கலாம். மேலும் பார்க்க:

அரசன் கோயில் கட்டினான்
கோயில் அரசனால் கட்டப்பட்டது

மக்கள் கவிஞருக்கு ஒரு மணிமண்டபம் கட்டினர்
கவிஞருக்கு மணிமண்டபம் ஒன்று (மக்களால்) கட்டப்பட்டது.

தமிழில் செயப்பாட்டுவினையைச் செய்வினையாகக் கூறுவதே பெருவழக்கு.

இந்தப் பாடம் நான் வாசித்தது (என்னால் பாடம் வாசிக்கப்பட்டது)
இந்தக் கிளி நான் வளர்த்தது (கிளி என்னால் வளர்க்கப்பட்டது)
கட்டிடம் முடிந்தது (கட்டிடம் கட்டி முடிக்கப்பட்டது)

**தெரிநிலை வினை, குறிப்பு வினை**

வேலப்பன் எழுதுகிறான்
வேலப்பன் பழனிக்காரன்

முதல் வாக்கியத்தில் எழுதுகிறான் என்ற வினைமுற்று பயனிலையாக வருகிறது; நிகழ்காலத்தை உணர்த்துகிறது. இரண்டாம் வாக்கியத்தில் பழனிக்காரன் என்பது, பயனிலையாக நிற்கிறது; ஆனால் இது குறிக்கும் காலம் பற்றி வெளிப்படையாக ஒன்றும் சொல்ல இயலாது.

இவ்வாறு பெயர்கள் பயனிலையாக வரும் போது அவை குறிப்பு வினைமுற்று எனப்படும். எழுதுகிறான் — தெரிநிலை வினைமுற்று எனப்படும்.

| | |
|---|---|
| கண்ணன் | உண்டு |
| | இல்லை |
| | வேறு |

இங்கு வரும் மூன்று சொற்களும் காலத்தைச் சுட்டுவதில்லை. இவைகளும் குறிப்புவினை முற்றுகளாகும்.

## 2.6 வேற்றுமைப் பொருள், உருபுகள், சாரியைகள்

**பெயரும் வேற்றுமையும்**

பெயர்ச் சொற்கள், வினைச்சொற்கள் சேர்ந்து வரும்போது **எழுவாய், செயப்படுபொருள்** முதலிய வேறு வேறு பொருள்களில் வரும். இவை பற்றிய விளக்கத்தினைத் 'தொடர்கள்' பகுதியில் காணலாம். அவ்வாறு பெயர்ச்சொற்கள் ஏனைய பெயர் வினைகளோடு கொள்ளும் உறவையே **வேற்றுமை** என்கிறோம். அங்ஙனம் வேற்றுமைப் பொருள்களில் வரும்போது அதற்கு உருபுகள் வரும். அவற்றை **வேற்றுமை உருபுகள்** என்பர். வேற்றுமை எட்டாகும்.

### 2.6.1 வேற்றுமைகள்

**முதல் வேற்றுமை:** எழுவாய் வேற்றுமை
கண்ணகி கோவலனை மணந்தாள். கண்ணகி என்ற பெயர் வாக்கியத்தின் **எழுவாயாக** வரும். இதற்கு வேற்றுமை உருபு இல்லை.

**இரண்டாம் வேற்றுமை:** செயப்படுபொருள் வேற்றுமை
கண்ணகி கோவல**னை** மணந்தாள்
குழந்தை பழம் சாப்பிட்டது.

கோவலன், பழம் ஆகியவை செயப்படுபொருளாக வருகின்றன. ஐ-வேற்றுமை உருபாகும். இது 'பழம்' போன்ற சொற்களில் மறைந்து (தொக்கி) வரும்.

**மூன்றாம் வேற்றுமை:** இது 1. கருவி 2. கருத்தா 3. உடனிகழ்ச்சி என மூன்று பொருளில் வரும்.

1. கருவிப்பொருள்

முருகன் **கத்தியால்** வெட்டினான்
கத்தி — கருவியாக அமைகிறது. ஆல் — இதன் உருபு. வழக்கில் 'கத்தி கொண்டு வெட்டினான்' எனவரும். கொண்டு — வேற்றுமைச் **சொல்லுருபு** ஆகும்.

2. கருத்தாப் பொருள்

கோயில் **தச்சனால்** கட்டப்பட்டது.
தச்சன் கோயிலைக் கட்டினான் என்ற செய்வினை வாக்கியம் செயப்பாட்டு வினை வாக்கியமாக மாறும்போது தச்சன் என்ற கருத்தா (எழுவாய்) தச்சனால் என மூன்றாம் வேற்றுமையில் வருகிறது.

3. உடனிகழ்ச்சிப் பொருள்

கண்ணகி கோவல**னோடு** மதுரைக்குப் போனாள்.
இங்கு கோவலனோடு என்பது கூடநிகழ்தல் என்ற பொருளில் வருகிறதல்லவா? இதற்கு உருபு **ஓடு**. வழக்கில் உடன், கூட என்பவை வரும். கண்ணகி கோவலனுடன்/கூடச்/சென்றாள் — என வரும்.

**நான்காம் வேற்றுமை:** கொடைப்பொருள் முதலியன.

வள்ளி குழந்தைக்குப் பால் கொடுத்தாள்.
இங்குவரும் **கு** கொடுத்தல் பொருளில் வருவதைப் பார்க்கிறோம்.

கண்ணகி கணவனுக்கு உணவு சமைத்தாள்.
இங்கு 'கு' **பொருட்டுப்** பொருளில் வருகிறது.
கோவலன் மதுரைக்குப் புறப்பட்டான்.
இங்கு 'கு' ஓர் இடப்பொருளை — திசைப்பொருளை உணர்த்துகிறது. இன்னும் 'கு' **உறவுப்பொருளிலும்** வரலாம்.

முருகனுக்கு மகன் அழகன்.
இங்கு ஆக, பொருட்டு, வேண்டி என்பவை சொல்லுருபாக வரலாம்.

எ-டு: முருகன் வள்ளிக்காக ஒரு சேலை வாங்கினான்
வள்ளிபொருட்டு
வள்ளிக்கு **வேண்டி**

**ஐந்தாம் வேற்றுமை:** நீங்கல் பொருள்
இராமன் **ஊரிலிருந்து** புறப்பட்டான். **வீட்டிலிருந்து** வந்தான்.
இதிலிருந்து — ஒன்றிலிருந்து நீங்குகிற பொருளைச் சுட்டுகிறது.

**ஆறாம் வேற்றுமை:** உடைமைப் பொருள்

வள்ளியி**னுடைய** கணவன் வேலன்
வள்ளியி**னது** வீடு

இங்கு உடைய, அது — என்ற உருபுகள் உடைமைப்பொருளை (ஒன்றுக்கொன்று உள்ள தொடர்பை) உணர்த்துகின்றன. சில வேளை **'வள்ளியின் வீடு'** என்பது போல இன் சாரியை மட்டுமே நின்று இப்பொருளைத் தரும்.

**ஏழாம் வேற்றுமை:** இடப்பொருள்

குழந்தை தொட்டி**லில்** தூங்குகிறது.

'இல்' என்ற உருபு இடப்பொருளைத் தருகிறது. இன்னும் உள், கண் என்பனவும் இப்பொருளில் வரும்.

வள்ளி வீட்டுக்**குள்** போனாள்.
சீதை காட்டின்**கண்** இருந்தாள்.

**எட்டாம் வேற்றுமை:** விளிவேற்றுமை

பெயர்களைக் கூப்பிடும்போது கந்தா! கடம்பா! வேலா! கதர் வேலாயுதனே! என்று நீட்டிக் கூறுவதெல்லாம் விளிவேற்றுமையே. இதற்குத் தனியாக உருபு இல்லை.

நினைவிற் கொள்க:

வேற்றுமைப் பொருளும் உருபுகளும்

| **வேற்றுமை எண்** | பொருள் | உருபு | சொல்லுருபு |
|---|---|---|---|
| முதலாம் வேற்றுமை | எழுவாய் | — | — |
| இரண்டாம் வேற்றுமை | செயப்படு பொருள் | ஐ | — |
| மூன்றாம் வேற்றுமை | கருவி<br>கருத்தா<br>உடனிகழ்ச்சி | ஆல்<br>ஆல்<br>ஒடு/உடன் | —<br>—<br>கூட |
| நான்காம் வேற்றுமை | கொடை<br>பொருட்டு<br>திசை<br>உறவு | கு | பொருட்டு<br>ஆக |
| ஐந்தாம் வேற்றுமை | நீங்கல் | இலிருந்து | — |
| ஆறாம் வேற்றுமை | உடைமை | அது,<br>உடைய | — |
| ஏழாம் வேற்றுமை | இடப் பொருள் | இல், உள், கண் | வைத்து |
| எட்டாம் வேற்றுமை | விளி | பலவித மாக மாறி வருதல் | |

## 2.6.2 வேற்றுமை மயக்கம்

வேற்றுமை உருபுகள், பொருள்கள் தம்முள் மயங்கி வருவது **வேற்றுமை மயக்கம்** எனப்படும்.

அறிவிற் சிறந்தவர் — இன்— ஐந்தாம் வேற்றுமை உருபு (ஏதுப் பொருள்)

அறிவால் சிறந்தவர் — மூன்றாம் வேற்றுமை உருபு (ஏதுப் பொருள்)

அம்மா எனக்குப் பணம் தந்தாள் — நான்காம் வேற்றுமை உருபு (கொடைப் பொருள்)

அம்மா என்னிடம் பணம் தந்தாள் — ஏழாம் வேற்றுமை உருபு (கொடைப் பொருள்)

இது தமிழில் ஒரு கருத்தைப் பொருள் மாறுபடாமல் வேறு வேறு வகை வாக்கியங்களில் கூறலாம் என்பதைக் காட்டுகிறது.

அவர் ஊரிலிருந்து புறப்பட்டார்.

அவர் ஊரைவிட்டுப் புறப்பட்டார்.

அவர் ஊருக்குப் புறப்பட்டார்.

அவர் ஊரை நோக்கிப் புறப்பட்டார்.

### 2.6.3 பெயர்கள் வேற்றுமை உருபேற்கும் முறைகளும் சாரியைகளும்:

பெயர்கள் வேற்றுமை உருபை ஏற்றுவரும் போது சிலவேளை திரியாமலும் சிலவேளை திரிந்தும் வரும்.

வள்ளி முருகனைப் பார்த்தாள்.

இங்கு முருகன் + ஐ = முருகனை என்று திரிபின்றி வந்துள்ளது.

வள்ளி பழத்தைச் சாப்பிட்டாள்.

பழம் + ஐ = பழ + **அத்து** + ஐ

இங்கு 'அத்து' என்ற கூறு வந்து,பெயரையும் வேற்றுமை உருபுகளையும் சார்ந்து இணைக்கின்றது. இத்தகைய கூறுகள் சாரியைகள் எனப்படும்.

அத்து போல இன், அன், அற்று என்பவை சாரியையாக வரும்.

இன் - வள்ளியினுடைய
அன் - அதன்
வற்று - பலவற்றையும்

வேற்றுமை உருபு ஏற்கும்போது மூவிடப் பெயர்கள் திரிபடையும். அவற்றின் திரிபடையாத பெயர் வடிவம் - திரிபடைந்த வேற்றுமை வடிவங்கள் சிலவற்றைக் கீழே பார்க்கலாம்.

| பெயர் வடிவம் | வேற்றுமை ஏற்ற வடிவம் |
|---|---|
| நான் | என் - என்னை |
| நாம் | நம்/எம் - நம்மை, எம்மை |
| நாங்கள் | எங்கள் - எங்களை |
| நீ | உன் - உன்னை |
| நீர் | உம் - உம்மை |
| பெயர் வடிவம் | வேற்றுமை ஏற்ற வடிவம் |
| நீங்கள் | உங்கள் - உங்களை |
| தான் | தன் - தன்னை |
| தாம் | தம் - தம்மை |
| அது | அத் - அதனை |
| அவை | அவ் - அவற்றை |

## 2.7 மேலும் படிக்க

இலக்கணச் செய்திகள் பற்றி மேலும் தெரிந்து கொள்ளக் கீழே கண்ட நூல்களைப் பார்க்கலாம்.

1. தமிழ் இலக்கணம் - 8,9,10 வகுப்புகள்
   தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவன வெளியீடுகள்
2. இலக்கணச்சுருக்கம், ஆறுமுகநாவலர் - ஆறுமுகநாவலர் பள்ளி, சிதம்பரம்.
3. நன்னூல் - காண்டிகை உரை

## தன் மதிப்பீடு : 7 பயிற்சி

1. கீழே உள்ள வாக்கியங்களிலுள்ள வேற்றுமை, உருபு, வேற்றுமைப் பொருள்களைக் குறிப்பிடுக.

1. குயில் கூவுகிறது.
2. மனத்தில் உறுதி வேண்டும்.
3. வீட்டுக்கு வீடு வாசல்படி.
4. நீ திடீரென்று எங்கிருந்து முளைத்தாய்.
5. தாயோடு அறுசுவை போகும்.
6. கண்ணீரால் வளர்த்தோம் இப்பயிரை.
7. குரங்கின் கைப்பூமாலை.

2. கீழே அடிக்கோடிட்ட சொற்களின் பெயர் சூட்டுக:
   1. ஆற்றங்கரையினிலே.
   2. என் கடன் பணி செய்து கிடப்பதே.
   3. உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?
   4. பாடத்தைப் படி.
   5. எங்களுக்கு உன்னிடம் நம்பிக்கை உண்டு.

3. கீழே கண்ட வாக்கியங்களிலுள்ள வேற்றுமை உருபுகளுக்கு வேறு வேற்றுமை உருபுகளை வைத்து அமைக்கவும்:
   1. கூண்டோடு கைலாசம்
      ____________ கைலாசம்
   2. மழையில் விளைந்த பயிர்
      ____________ விளைந்த பயிர்
   3. கண்ணகி சேர நாட்டை நோக்கிப் போனாள்
      கண்ணகி ____________________ போனாள்
   4. நகுதல் பொருட்டன்று நட்டல்
      ______________ அன்று நட்டல்.
   5. எனக்காக ஓர் உதவி செய்
      ______________ ஓர் உதவி செய்.

## தன்மதிப்பீடு: விடைகள்

1. அ. காக்கா, விகடகவி எனப்பல கண்டுபிடிக்கலாம். ஆ. தா, ஈ, பூ, மா, வா, ஏ (அம்பு), தீ, ஆ (பசு), கா (சோலை). நீங்களே சிந்தித்துத் தேடுங்கள்.

2. அ.

| பெயர் | வினை | இடை | உரி |
|---|---|---|---|
| எறும்பு | ஊர்ந்து<br>விரைவாய்<br>செல்கிறது | | நனி |
| அன்பரசன்<br>காலை | எழுந்து<br>படிக்கிறான் | இல் | |
| பூங்கொடி<br>இரவு பகல் | உழைக்கிறாள் | அம், உம் | |
| தொழில்<br>தெய்வம் | செய்யும் | ஏ | |
| பசி | | | உறு |
| இல்லாதது<br><br>நாடு | (வினையால்<br>அளவிடும்<br>பெயர்) | | |

2. அ. பெயர் வினையை இடமாகக் கொண்டு, அவற்றைச் சார்ந்து வழங்குவன இடைச்சொற்கள் எனப்படும். ஆ. அடையாக, பண்பை உணர்த்தி, பெரிதும் செய்யுளுள் வந்து வழங்குவன உரிச்சொல் எனப்படும்.

3. வளவன் - உயர்திணை, ஆண்பால், ஒருமை, படர்க்கை, அன்
நிலம் - அஃறினை, ஒன்றன்பால், ஒருமை, படர்க்கை, அம்
நான் - விரவுத்திணை, ஒருமை, தன்மை
நீர் - உயர்திணை, பலர்பால், பன்மை, முன்னிலை
தின்றான் - உயர்திணை, ஆண்பால், ஒருமை, படர்க்கை, ஆன்
எழுந்தது - அஃறிணை, ஒன்றன்பால், ஒருமை, படர்க்கை, து
ஆடின - அஃறிணை, பலவின்பால், பன்மை, படர்க்கை, அ

4. போ - போதல், போனவன்
நடு - நடுதல், நட்டவன்
குழம்பு - குழம்புதல், குழம்பியவன்
கிளர் - கிளர்ச்சி, கிளர்த்தவன்
அள - அளவு, அளந்தவன்
வளர் - வளர்ச்சி, வளர்ந்தவன்

பகுதி (வி) சந்தி இடை சாரிை-
ய செத்த-
து - சா
கொடுத்தேன் - கொடு த் த் ஏன்
ஆட்டினே-
ன்

## பாடப்பகுதி (Unit) 3 — சொற்சேர்க்கையும் சந்தி விதிகளும்

### படிப்பு நோக்கம்

- ★ தமிழின் இயல்பாகவுள்ள சொற்களின் சேர்க்கை பற்றி விளங்கிக் கொள்ளுதல்
- ★ பிரித்தெழுதுதலும் சேர்த்தெழுதுதலும் — இடமறிந்து பயன்படுத்துதல்.
- ★ தமிழை நன்கு எழுதப் பழகிக் கொள்ளுதல்.
- ★ புணர்ச்சி, சந்திகளின் இன்றியமையாமையைக் கற்றல்.
- ★ வல்லெழுத்து மிகுமிடம், மிகா இடங்களை அறிந்து பழகிக் கொள்ளுதல்

### பாடக் கருத்தலகுகள்

3.0 பாட முன்னுரை

3.1 தனிச்சொல்லும் தொடரும் — உருபு சாரியை சந்தி

3.2 பிரித்தெழுதுதலும் சேர்த்தெழுதுதலும் — இடமறிந்து ஆளுதல்

3.3 சொற்களின் சந்திப்பும் சந்தி வேறுபாடுகளும்

3.4 சில முக்கியமான புணர்ச்சி விதிகள்

3.5 வல்லெழுத்து மிகுதல் ஏன்? ஒலிப்பு வேறுபாடும் பொருள் வேறுபாடும்.

3.6 தொகுப்புரை

3.7 மேலும் கற்றற்குரியவை

3.8 தன்மதிப்பீடு — விடைகள்

## 3.0 முன்னுரை

தமிழ்ச் சொற்களின் அமைப்பைப் பற்றி அறிந்து கொண்ட பின் அச்சொற்கள் தமிழில் சேர்ந்து நிற்கும் முறைகளை நீங்கள் பழகிப் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டும். இது தமிழுக்கேயுள்ள தனித்தன்மைகளைக் கொண்டது. இதை நீங்கள் கவனமுடன் படித்தால், மிக எளிதாக இவற்றை விளங்கிக் கொண்டு விட முடியும்.

ஒரு மொழியைப் பேசும்பொழுதும் எழுதும்பொழுதும் அதை நன்றாக, திருத்தமாகக் கையாள வேண்டும் என்ற ஆர்வம் ஏற்படுகிறது. பிறரை விட நன்கு எழுத வேண்டும், எல்லோரையும் விடச் சிறப்பாகப் பேச வேண்டும் என்று நம் மனம் முந்துகிறது. நாம் சொல்வதும் எழுதுவதும் பிறர்க்கு விளங்க வேண்டும்; நம் கருத்துக்குப் பிறரை வசப்படுத்திவிட வேண்டும்; அதற்கு ஏற்ப ஆற்றலோடு, திறமையோடு எழுத வேண்டும் என்றெல்லாம் நாம் ஆர்வம் கொள்கிறோம். அது போலவே பிறர் எழுதுவது என்ன என்பதை விளங்கிக் கொள்ளவும் விரும்புகிறோம். இதற்காக நாம் பல மொழி பற்றிய பல வழக்காறுகளைத் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அதனால்தான் ஔவையார் 'சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப் பழக்கம், வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்' என்றார்.

நாப் பழக்கமும் மனப்பழக்கமும் மொழியோடு பழகப்பழகவே வாய்க்கும். மொழியோடு உறவு கொண்டால்தான் அது தக்க சமயத்தில் நமக்குக் கைகொடுத்து உதவும்.

தமிழில் எழுதும் பொழுதும் அடிக்கடி வருகிற சந்தேகம் ஒன்று உண்டு. 'இந்த இடத்தில் ஒற்று மிகுமா? மிகாதா?' என்ற கேள்வி தான் அது.

எண்ணெய் கடையா? எண்ணெய்க் கடையா?
வார பத்திரிகையா? வாரப்பத்திரிகையா?
சங்க காலமா? சங்கக் காலமா?
எத்தனை பழங்களா? எத்தனைப் பழங்களா?

கதை படிக்கும் என் நண்பர் ஒருவர் 'கருணை கொலையா?' அல்லது 'கருணைக் கொலையா?' என்று கேட்டார். கருணை கொலை செய்யப்பட்டதேல், கருணை கொலை என்றெழுத வேண்டும்; கருணையால் செய்யப்படும் கொலையென்றால் கருணைக்கொலை என்று வல்லெழுத்தை மிகுவித்தே எழுத வேண்டும் என்றேன். இடமறிந்து, பொருளுக்கேற்பப் பயன்படுத்த வேண்டும். கடினம் என்று விட்டு விடலாமா? ஆங்கிலத்தில் உச்சரிப்புத் தொல்லை எவ்வளவு உளது? கடினம் என்று விட்டு விடுகிறோமா? எல்லாம் பழகினால் எளிதாக வந்து விடும்.

அது போலவே எண்ணெய்க்கடை ஏன்பது எண்ணெய் விற்கும் கடையைக் குறிக்கும். எண்ணெய் கடை என்று சந்தியை விட்டு விட்டால் எண்ணெயைக் கடை என்று பொருள் படும். வார - நம் வீட்டுக்கு வருகிற பத்திரிகைதான் வார பத்திரிகை; வாரந்தோறும் வருவது வாரப்பத்திரிகைதான்!

சங்கம் இருந்த காலம் சங்ககாலம்தான்; க் ஒற்றுத் தேவையில்லை. 'எத்தனை பழங்கள்' என்பதே சரி; ப் வராது. நமக்கு முன்புள்ளவர்கள் எவ்வாறு பயன்படுத்தினார்கள் என்று பார்க்க வேண்டும். அது போன்ற தொடர்களைச் சொல்லிப் பார்க்க வேண்டும். பொருள் வேறுபடுகின்றதா என்று சொல்லிச் சொல்லிப் பார்க்க வேண்டும்.

இவற்றையெல்லாம் எப்படித் தெரிந்து கொள்வது? இதற்கென்று உள்ள இலக்கண நூல்களைப் படித்துத் தெரிந்து கொள்வது ஒரு

முறை. மொழியைப் படித்தும் பயன்படுத்தியும் பழகித் தெரிந்து கொள்வது பிறிதொரு முறை. பின்னைய முறையே சிறந்த முறையாகும்.

நாமும் ஒரு சிறிதாவது அறிமுகம் செய்து கொள்வோமா? நெருங்கிப் பழகிக் கொள்வோமா? செந்தமிழும் ஒரு வகையில் மனப்பழக்கம் தானே?

---

## 3.1 தனிச்சொல்லும் தொடரும் - உருபு சாரியை சந்தி

தமிழில் ஒரு தொடரில் சொற்கள் சங்கிலித் தொடர்போல் நிற்கும் நிலையை ஆங்கிலத்துடன் ஒப்பிட்டால் தமிழின் இயல்பு விளங்கும்.

**I go to Madras to study**

இதில் சொற்கள், உருபுகள் எல்லாம் தனித்தனியே ஒட்டாமல் நிற்கின்றன. ஆங்கிலத்தில் போலவே தமிழில் எழுதினால் எவ்வாறிருக்கும்?

நான் சென்னை கு படிப்பது கு போகிறேன்

தமிழில் இவ்வாறு யாரும் எழுதுவதில்லை. 'நான் படிப்பதற்காகச் சென்னைக்குப் போகிறேன்' என்றுதான் எழுதுவோம்.

நான் படிப்பது அன் கு ஆகச் சென்னை க் குப் போகிறேன். தமிழில் இத்தனை ஒட்டுக்கள் உள்ளன. கு நான்காம் வேற்றுமை உருபு. அன் சாரியை, ஆக துணைவினை, ச் க் ப் சந்திகள். இவை சொற்களைத் தொடர்புபடுத்திப் பிணைத்து நிற்கின்றன.

மரம் என்பதுடன் ஐ என்ற இரண்டாம் வேற்றுமை உருபு சேர்ந்தால் மரமை என்று வராது, மரத்தை என்றுதான் வரும். மரம் **அத்து** ஐ. இதில் **'அத்து'** சாரியை எனப்படும். 'மரத்தைப் பார்'. மரம் **அத்து** ஐ ப் பார். இதில் மரம், பார் என்பன இணையும் சொற்கள்; ஐ வேற்றுமை உருபு. இவை இன்றியமையாதன. பிறகு **அத்து**, ப் என்பன ஏன்? இவை முற்கூறிய சொற்களையும் உருபையும் இணைக்கவே வருகின்றன. இவற்றில் **'அத்து'** சாரியை என்பர்; அஃது இங்ஙனம் சொற்களை இணைக்க இடையில் வருவதால் இடைச்சொல் வகையைச் சேரும். ப் என்பது புணர்ச்சியால் வரும் சந்தி எழுத்து. அதை விட்டு விட்டு மரத்தைப் பார் என்று எழுதுவது தமிழில் வழக்கமில்லை. இங்ஙனம் சொற்பொருளை வேறுபடுத்த வேற்றுமை உருபும் அந்த உருபை இணைக்கச் சாரியையும் சாரியை வரும் சொல்லோடு பொருத்தச் சந்தியும் வருகின்றன.

தலையை எண்ணுக: தலை ய் ஐ-ய் என்பது சந்தி (உடம்படு மெய்), ஐ உருபு எண் உ க: உ சாரியை, க வியங்கோள் வினைமுற்று விகுதி

எல்லாம் உம் = எல்லாமும் என்று வரும். அதனோடு ஐ உருபு சேர்ந்தால் அதை ஒட்டவைக்க வற்று சாரியை வந்துவிடும் — எல்லாவற்றையும் உலகவழக்கில் எல்லாத்தையும் என்பர். அங்கு அத்து சாரியை வருகிறது. எல்லாம் ஐ உம் என்று சொல்லும் உருபும் மட்டும் சேர்த்துச் சொல்லிப் பாருங்கள். எல்லாமையும் — பொருள் விளங்காது; ஆகவே அவ்வாறு வரவே வராது.

எனவே ஒன்றை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். சொற்கள் ஒன்றுடன் ஒன்று ஒட்டிச் சேர்த்து வருவது தமிழ்மரபு. சொல்லுக்குப் பிறகு வேற்றுமை உருபு வந்தால், சாரியையும் சந்தி எழுத்தும் கூடவே வருவது பெருவழக்காகும்.

தலை + க் + கு = தலைக்கு. க் சந்தி மட்டும்.

தலை + ய் + இன் + உ + க் + கு = தலை–சொல், கு உருபு.
(தலையினுக்கு: இன் சாரியை,
முன்னுள்ள ய் உடம்படு மெய்–சந்தி
உ மற்றொரு சாரியை, க் சந்தி.)

இங்ஙனம் சந்தி மட்டும் வருவன; சாரியையும் சந்தியும் வருவன என இவற்றை இடம்நோக்கிப் பிரித்தறியலாம்.

**தன்மதிப்பீடு: 1**
**நினைவூட்டும் பயிற்சிகள்**

கீழ்வரும் தொடர்களையும் சொற்களையும் பிரித்து, அவற்றிலுள்ள சாரியைகளையும் சந்தி வேறுபாடுகளையும் சந்தி எழுத்துக்களையும் குறிப்பிடுக:
(முதலில் ஓர் உதாரணம் உளது.)

நாவினுக்கு : நா + வ் + இன் + உ + க் + கு
இன், உ — சாரியைகள்
வ், க் — சந்திகள்
நா, கு — வேற்றுமை உருபு
நா — பகுதி
குடத்தை
கரையின்கண்
கற்பனையினது
பாவினால்

## 3.2. பிரித்தெழுதுத்லும் சேர்த்தெழுதுதலும் — இடமறிந்து ஆளுதல்

ஆங்கிலத்தில் 'கண்டக்ட்' (Conduct) என்றால் ஒன்றை நடத்து என்று வினையாகவும் அதையே 'காண்டக்ட்' (Conduct) என ஒலித்தால் பெயராகி ஒழுக்கம், நடத்தை என்றும் பொருள் வேறுபடுகிறது. ஒரேசொல் இங்ஙனம் ஒலிப்பால் பொருள் வேறுபடுவதை அங்கு பல இடங்களில் காணலாம்.

இங்கு தமிழில் சொற்சேர்க்கையும் சொற்பிரிப்பும் பொருள் வேறுபாட்டுக்குக் காரணமாகின்றன. அப்பாவி என்று சேர்த்துச் சொல்லும்பொழுது ஒரு பொருளும் அப் பாவி எனப் பிரித்துச் சொல்லும்பொழுது ஒரு பொருளும் என வேறுபட்டமை காண்கிறோம். எழுந்திருந்தான் என்பது ஒரு பொருள்; அதையே எழுந்து இருந்தான் என்று பிரித்து, நிறுத்திச் சொன்னால் வேறு பொருள். 'இனிப்பாகிவிட்டது' என்றால் ஒரே இனிப்பாகிவிட்டதைக் குறிக்கும்; இனிப்பு என நிறுத்தி ஆகிவிட்டதென்றால் தீர்ந்துவிட்டது என்றல்லவா பொருள்படும்?

நாம் நம் நண்பரோடு பழகுவதுபோல, மொழியோடும் பழக வெண்டும். முதலில் அங்ஙனம் பழகவேண்டும் என்ற ஆர்வம் வரவேண்டும். அவ்வளவே!

*நினைவுபடுத்திச் சொல்லிப்பாருங்கள்*

சொற்களை எடுத்தும் படுத்தும் இடைவிட்டும் ஒலிப்பதால் பொருள் வேறுபாடு அடைவதைக் கீழ்வரும் தொடர்களில் கண்டு விளக்குக:

பிழையை உணர்ந்துவிடுதலேபெருமை
அப்பத்தைஎடுத்துக்கொண்டு
படித்தேன்என்றாலேஇனிது
முருகன்தன் சம்பளத்தைத்தானேசெலவழித்தான்
அண்டாவின்மேல்மூடி இருக்கிறதா?

## 3.3 சொற்களின் சந்திப்பும் சந்தி வேறுபாடும்

சொல்லும் சொல்லும் சந்திக்கும்போது, எவ்வித மாற்றமுமின்றி நிற்பது 'இயல்பு' எனப்படும். பல இடங்களில் இவ்வாறு இயல்பாக அமைவதைக் காண்கிறோம்.

மழைபெய்கிறது
மண்கரைகிறது
மலர்மணக்கிறது
குவளை மலர்
பனிவிளையாட்டு
படித்தபையன்
பொன்மலை
ஒளிமணி
பால்வண்ணம்
எழுச்சி பெறுக
வலைவீசினான்

இத்தகைய இயல்பு அல்லாதன விகாரம் எனப்படும். அவை தோன்றல், திரிதல், கெடுதல் என்பனவாம்.

சொல்லும் சொல்லும் ஒரு வாக்கியத்தில் குறிப்பிட்ட பொருளை உணர்த்துவதற்காகத் தொடர்ந்து நின்று சந்திக்கும்போது ஏற்படும் இவ்வியல்பும் விகாரமுமே இங்கு சந்திவிதிகள் எனப்படுகின்றன.

தமிழில் எழுத்துக்கள் இருவகை — உயிர், மெய். இவை நின்ற சொல்லின் ஈறாகவும், வரும் சொல்லின் முதலாகவும் சந்திக்கும்போது நான்குவகைச் சந்திப்புகள் ஏற்படும்.

உயிர் + உயிர்
மெய் + உயிர்
மெய் + மெய்
உயிர் + மெய்

இவை தவிர வேறுவகைச் சந்திக்கு இடமில்லை. அங்ஙனமாயின் இவற்றை இன்றைய நிலைக்கேற்ப மிக எளிமையாகத் தெரிந்துகொண்டு விடலாமே? பழைய இலக்கணத்தைப் படிப்பதுதான் கடினமே தவிர, இன்றைய மொழியைப் பழகிக் கொள்வது கடினமே அன்று.

### (1) உயிர் — உயிர்

பனிரண்டு உயிரும் ஏதேனும் ஒருவகையில் மொழிக்கு இறுதியில்வரும்; அதுபோல அவை பனிரண்டும் முதலிலும் வரும். எனவே இவை அனைத்தும் ஒன்றையொன்று சந்தித்துக்கொள்ளும். உயிர்கள் சந்திக்கும்போது ஓருயிர் மறைவதும் உடம்படுமெய் தோன்றி உயிர்களை இணைப்பதும் உண்டு.

மரம் அத்து ஐ. மர என நின்று, 'ம்' கெடும். மர அத்து என நிற்கும். ஈற்றிலும் அ, வருவதும் அ. இவற்றில் வருவது கெட்டு மரத்தை என ஆகும். இல்லையென்றால் 'மரஅத்தை' என்றல்லவா ஆகிவிடும்?.

ய், வ் என்பன இன்றைய நிலையில் அரையுயிர்கள் எனப்படும். இவை இரண்டில் ஒன்று தோன்றி உயிர்களை இணைப்பதே தமிழில் பெருவழக்காகும்.

கூலி(இ) + ஆள் — கூலியாள் — ய் தோன்றி இணைத்தது
வேலை(ஐ) + ஆள் — வேலையாள் — ய் தோன்றி இணைத்தது
கோ(ஓ) + இல் — கோவில் — வ் தோன்றி இணைத்தது
மா(ஆ) + இலை — மாவிலை - வ் தோன்றி இணைத்தது.

கோவில், கோயில் என இரண்டும் வழங்குவதும் உண்டு. கடிதம் எழுதவில்லை என்றுதான் எழுதுகிறோம். 'எழுத இல்லை' என்று எழுதுவதில்லை. ஆனால் இவையிரண்டில், உயிர்களை யிணைப்பதே என்று எழுதாமல் இவை இரண்டில், உயிர்களை இணைப்பதே என இயல்பாக வழங்கினால் நன்கு பொருள் விளங்குமென்று கருதுமிடங்களில் நாம் அவற்றை இணைப்பதில்லை.

**(2) மெய் — உயிர்**

காதல் + ஆகி = காதலாகி. பொருள் + இல்லை = பொருளில்லை. இவ்வாறு மெய்யுடன் உயிர் சேர்ந்து உயிர்மெய்யாவதால் இதில் வேறு மாற்றங்கட்கு இடமில்லை: இஃது இயல்பெனவே கருதப்படும்.

**(3) மெய் — மெய்**

நாள் + கூலி = நாட்கூலி. முதலிலுள்ள கூ (க் — ஊ) ஆவதால் முதலில் நிற்பது க்.

கல் + கோயில் = கற்கோயில்

கல் + தரை = கற்றரை

மொழி ஈறாகும் மெய்கள் மொழி முதலாகும் மெய்களைச் சந்திக்கும்போது ஒலிப்பு எளிமையும் பொருள் உணர்ச்சியும் கருதிப் பலவகையான திரிபுமாற்றம் — விகாரங்களை அடைகின்றன. இவற்றுள் இன்று தேவையான அளவு இம்மாற்றங்களை ஏற்றால் போதும்.

**4. உயிர்—மெய்**

பலா + பழம் = பலாப்பழம். பாக்கு + பொட்டலம் = பாக்குப் பொட்டலம். உயிர்கள் வருமொழி மெய்களோடு கூடும் புணர்ச்சி வேறுபாடுகள்தான் மிகப்பலவாகும். இதில் குற்றியலுகரம் எனப்படும் இறுதியையுடைய சொற்கள் பலவாகும்.

ய, ர, ல, வ, ழ, ள என்ற ஆறு இடையெழுத்துக்களில், ய, வ, இரண்டே மொழிக்கு முதலில் வரும்.

ஞ, ங, ண, ந, ம, ன என்ற ஆறு மெல்லெழுத்துக்களில் ந, ம இரண்டு மட்டுமே மொழிக்கு முதலில் வரும். (ங — ஙனம் என வருவதோடு சரி).

க, ச, ட, த, ப, ற என்ற ஆறு வல்லெழுத்துக்களில் க, ச, த, ப என்ற நான்கு மட்டுமே மொழி முதலாக வரும்.

தமிழில் மொழியிறுதியில் ஒரு வல்லெழுத்துக்கூட வராது.

**வருமொழி முதலில் வரும் கசதபக்கள் காரணமாக, வல்லெழுத்து மிகுதலும் மிகாமையும் பற்றிய சந்தி விதிகளே தமிழில் மிக அதிகமாகும்.**

இனி, இச் சந்தி விதிகள் ஒவ்வொன்றையும் சற்று விரிவாகக் காண்போம். மெய்யும் உயிரும் சந்திக்கும் இயல்புப் புணர்ச்சி, உலக வழக்கில் எத்தனையோ நூற்றுக்கணக்கான சொற்களில் வழங்கிவருகிறது. தமிழில் உயிர்மெய் என்பது தனி எழுத்தன்று. மெய் எழுத்துடன் உயிர் சேர்ந்தால், இயல்பாகச் சேர்ந்தொலிப்பதால் அதை உயிர்மெய் என்றார்கள்.

க் + அ = க. ச் + அ = ச. த் + இ = தி. இவ்வாறு வரும் புணர்ச்சியைக் கீழ்வரும் சொற்களில் காணலாம்:

கடல் + அலை — கடலலை

ஆல் + இலை — ஆலிலை

தொழில் + ஆளி — தொழிலாளி

முதல் + ஆளி — முதலாளி

பால் + ஆடை — பாலாடை

இங்ஙனம் 'உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவன' (மெய்யும் உயிரும் சேர்ந்து உயிர்மெய்யாவன) யாவும் இயல்பு எனவே படும்.

பட்டு + துணி = பட்டுத்துணி
பூ + கொடி = பூங்கொடி
மா + பிள்ளை = மாப்பிள்ளை
கவி + அரங்கம் = கவியரங்கம்

இங்கெல்லாம் சொற்கள் சந்திக்குமிடத்தில் **ஒரெழுத்துத் தோன்றி** சொற்களை இணைப்பதைக் காணலாம்.

மரம் + வேர் = மரவேர்
அரசன் + வள்ளல் = அரசவள்ளல்
கபிலர் + பரணர் = கபிலபரணர்
மனம் + மாற்றம் = மனமாற்றம்

இறுதியிலுள்ள எழுத்துக் கெடுவதால் இதனைக் 'கெடுதல்' என்பர். 'கெடுதல்' என்பது ஒரு எழுத்துக் கெட்டுப்போதல்; மறைந்துபோதலாகும்.

நாள் + கூலி = நாட்கூலி
பால் + குடம் = பாற்குடம்
அருள் + செல்வம் = அருட்செல்வம்
கால் + புள்ளி = காற்புள்ளி
கண் + நீர்= கண்ணீர்
எள் + நெய்= எண்ணெய்

இவை ஒரெழுத்து மற்றொன்றாகத் திரியும் '**திரி**பாகும். நின்ற சொல்லும் வரும் சொல்லும் சேரும்போது, முதலிலுள்ளதன் இறுதி எழுத்தோ, வருமொழி முதலெழுத்தோ அல்லது இரண்டுமோ மாறும்.

எனவே எங்கு பிரித்தெழுதவேண்டும்? எங்கு சேர்த்தெழுத ேண்டும்? என்று வினவி வினவி உண்மையறிந்து, பொருள் விளங்குமாறு எழுதவேண்டும். சிற்றிடை, சேவடி, ஒண்ணுதல், ஆண்டகை போல்வன பண்புத்தொகைகள். இவற்றைப் பிரித்தல் கூடாது. பேரணி, காரிருள் என்பனவும் அவ்வாறே மண்ணுலகம், விண்ணுலகம், புள்ளினம், வண்டினம் என்பனவும் பிரிக்கக் கூடாதன. ஈரிரண்டு, எண்ணான்கு, ஐயிரண்டு, ஆறிரு என்ற எண்ணுப் பெயர்கள் போல்வனவும் பிரிக்கக்கூடாதன.

ஆனால் சில இடங்களில் பிரித்தெழுதினால்தான் பொருள் தெளிவாக விளங்கும். வாட்டடங்கண், கற்றரை, முட்டாட்டாமரை போல்வன பிரித்து எழுதப்படவேண்டும். வாள்தடங்கண், கல்தரை, முள்தாள் தாமரை என்றால் எளிதில் பொருள் விளங்கும். எண்டிசை என்பதைவிட எண்திசை என்பது நன்கு விளங்கும். மண் குடம் (மட்குடம்), நாள் மலர் (நான்மலர்),கோள் மீன் (கோண்மீன்) என்பன பிரித்து எழுதுவதால் எளிதில் பொருள் விளங்குவனவாகும்.

மக்கட்செல்வம், நாட்கூலி, கூலியாள், முதற்பதிப்பு என்பன பிரிக்காது வழங்கும்போதுதான் எளிதில் பொருள் விளங்கும். மக்கள் செல்வம் என்றால் மக்கள் வேறு செல்வம் வேறாகிவிடக்கூடும்.

அருட்செல்வம் செல்வத்துட்செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள.

இத்திருக்குறளில் அருள் செல்வம், பொருள் செல்வம் எனப் பிரித்துக் கூறிப் பாருங்கள். பொருள் தெளிவுபடாது போய்விடும்.

**தன் மதிப்பீடு :2 பயிற்சியும் வினாக்களும்**

***கீழ்வரும் பயிற்சிகளை செய்து பார்த்து, உங்கள் முன்னேற்றத்தை அறிந்துகொள்ளுங்கள்:***

1. (அ) இயல்புப் புணர்ச்சிக்கு ஐந்து சான்றுகள் தருக.
(ஆ) தோன்றல் புணர்ச்சிக்கு ஐந்து காட்டுகள் தருக.
(இ) கெடுதல் புணர்ச்சிக்கு ஐந்து உதாரணங்கள் தருக.
(ஈ) திரிதல்விகாரப் புணர்ச்சிக்கு ஐந்து எடுத்துக்காட்டுகள் தருக.

2. கீழ்வருவனவற்றுள் எவையெவை என்ன புணர்ச்சி (இயல்பு, தோன்றல், கெடுதல், திரிதல்) என்று கூறுக. ஒன்றில் இரண்டு வரினும் குறிப்பிடுக.

மடைப்பள்ளி, படையெடுப்பு, மட்குடம், படத்திறப்பு, நடைதிறப்பு, படிப்பில்லை,கிணற்றுத்தவளை.

3. கீழ்வரும் கடினமான புணர்ச்சிகளை இக்காலத்திற்கேற்ப எவ்வாறு பிரித்தெழுதவேண்டும்?

புற்றரை, கொழுநற்றொழுதெழுவாள்,
முஃடீது, நாடுரி, எட்டுணையும், கட்டீது.

## 3.4. சில முக்கியமான புணர்ச்சி விதிகள்

சொற்சேர்க்கையால் ஏற்படும் சந்தி விதிகள் பிறர்க்குத் தெளிவாகக் கருத்தைத் தெரிவிக்க, ஐயமின்றித் தெரிவிக்க உதவுகின்றன. இல்லையென்றால் இவற்றை நாம் ஏன் சுமக்க வேண்டும். தேவையில்லை என்று விட்டுவிடலாமே? நாம் இயல்பாக வழங்குவதைத்தான் மீண்டும் நினைத்துப் பார்க்கிறோம்.

அங்கே பறவை கூடுகண்டேன்

இதில் பறவையையும் கூட்டையும் கண்டதாக ஆகும்.

அங்கே பறவைக்கூடு கண்டேன்

என்றால் பறவையினது கூட்டைக் கண்டதாக ஆகும். மேலே கண்ட இரண்டு வாக்கியங்களிலும் உள்ள பொருள் வேறுபாட்டைப் பார்த்தால், தெளிவாகப் பேச, எழுதச் சந்திவிதிகள் வேண்டும் என்றல்லவா தோன்றுகின்றது.

கூடு இன் உள் ஏ முட்டை உளது
கூட்டினுள்ளே முட்டையுளது.

அச்சு எந்திரம் வந்துவிட்டதால் எந்தச் சொல்லையும் தனித்தனியே எழுதலாம். ஆனால் தமிழில் சேர்த்தெழுதும் இயல்பை மாற்றிவிட முடியுமா? அச்சு இயந்திரத்தால் ஏற்பட்டுள்ள மாற்றம் பல உள. ஆயினும் இம்மாற்றங்கள் பொருளை விளங்கிக்கொள்ளத் தடையாகும் அளவுக்கு ஏற்படவில்லை. முட்டையுளது என்பதை முட்டை உளது என எழுதுகிறோம். ஆனால் 'கூட்டினுள்ளே' என்பதை இனியும் கூடு இன் உள் ஏ எனப் பிரித்து எழுதுவோமா?

தமிழ் கவிதை மொழியாதலின் அதில் வரும் அசை, சீர், தளைகட்கேற்பத் தமிழில் கடும் புணர்ச்சி விதிகள் பல தோன்றின. இன்று உரைநடைக் காலமாதலின் அவற்றுள் பல தவிர்க்கப்படுகின்றன. இன்று வழக்கத்தில் உள்ளவுமான அடிக்கடி பயன்படுகிற விதிகளை மட்டும் பார்த்துப் பார்த்துச் சொல்லிச் சொல்லிப் பழகிக்கொள்வது நல்லது.

**(1) தனிக்குறில் முன்பு வரும் மெய்**

மண் + எண்ணெய் = மண்ணெண்ணெய் என்றே ஆகும். நன்கு கவனித்துச்சேர்த்து ஒலித்துப்பாருங்கள். நாமோ மண்ணெண்ணெய் என்கிறோம்.மண்ண் — எண்ணெய் என முன்புள்ள மெய் இரட்டிக்கிறது.

கல் + இல் = கலில் நாம் கல்லில் என்றே உச்சரிக்கிறோம்.

விண் + இல் = விண்ணில்.
கள் + உண்டான் = கள்ளுண்டான்
எண் + அம் = எண்ணம்

இவை எல்லாம் இதைப்போல் ஆனவை.

ஒரு வேறுபாடு பாருங்கள்: கால் + ஐ = காலை ;
வேல் + ஐ = வேலை ஆகின்றன.

ஆனால் கல் + ஐ = கல்லை என ஆகின்றது ஏன்? தமிழில் ஒலிப்பை எளிமையாக்கவும், இனிமையாக்கவும் மனிதன் உள்ளுணர்வால் கொண்ட ஆர்வ முயற்சிகளே இம்மாற்றங்களை விளைவித்துள்ளன. பின்னர் பொருளை வேறுபடுத்துமளவு அவை வளர்ந்துவிட்டன. காலப்போக்கில் இவை இரண்டுமே சந்திகளுக்கு அடிப்படைக் காரணமாகிவிட்டன எனலாம்.

செல் + அரித்தது = செல்லரித்தது.
புல் + அரித்தது = புல்லரித்தது
வில் + ஐ = வில்லை

'தனிக்குறில் முன் ஒற்று உயிர்வரின் இரட்டும்'. எதிரே வரும் சொல் முதலில் உயிரெழுத்து வந்தால், தனிக்குறிலின் பின்வரும் மெய்யெழுத்து (கல், செல், வில், கண், புண், தின் என்பன போன்றவை) இரட்டிக்கும். முன் + ஒற்று = முனொற்று என்றே ஆகும். ஆனால் முன்ன் என்று ஒற்று இரட்டித்து பின்வரும் ஒற்றுடன் சேர்த்து 'முன்னொற்று' என்றாதல் காண்க.

**(2) உடம்படு மெய்**

நிலைமொழியின் இறுதியிலும் உயிரே நின்று, வருஞ்சொல்லின் முதலிலும் உயிரே வந்தால் — உயிரும் உயிரும் சந்தித்தால் வரும் சந்திதான் ய் அல்லது வ் என்ற உடம்படுமெய். இதுமுன்பே ஒருமுறை விளக்கப்பட்டது. உயிர்களை உடம்படுத்துவதற்கு வருகிற மெய் இது. மெய்யில் உயிர் சேருமேயன்றி, உயிரில் உயிர் சேராது. அங்ஙனம் சேரவேண்டுமேல் இடையில் ஒரு மெய் வரவேண்டும் என்பது உலகத் தத்துவம்போல் இருக்கிறது.

வேலையாள்: வேலை — இறுதியிலிருப்பது உயிர் ஐ: ஆள் முதலிலிருப்பது உயிர் ஆ. வேலையாள் இடையில் 'ய்' சந்திவந்து இவற்றை இணைக்கிறது.

வேலைஆள் என்றால் பொருள் மயங்கும்; வேலையாள் என்று உடம்படுமெய் சேர்ந்தால்தான் தெளிவுபெறும்.

பூவரசு = பூ — ப் + ஊ. எதிரே அரசு. உயிரையும் உயிரையும் இணைக்க 'வ்' வருகிறது.

மாவிலை, கோயில்,வாவென்றான், சிலையெழுது, எழுதவில்லை, தலையெழுத்து என்பன போன்ற பல சொற்களில் உடம்படுமெய் வந்திருப்பதைக் கவனியுங்கள். சொற்களைப் பிரித்து, இடையில்வரும் ய், வ் எழுத்துக்களைக் குறிப்பாக நோக்குங்கள்.

***(3) குற்றியலுகரமும், உயிரும் சந்தித்தால் ஏற்படும் மாற்றம்.***

தமிழில் நாடு, பயறு, சுக்கு, பங்கு, சார்பு, எஃகு என வருவன குற்றியலுகரங்கள்.

சொல்லின் இறுதியில் மெல்லெழுத்து வரும்; இடையெழுத்து வரும்; மண், தின், மரம் முதலியன மெல்லினம் இறுதியில் வந்தன. பாய், கார், தாள், வால் முதலியன இடையினம் கடைசியில் வந்தன. க், ச், ட், த், ப், ற் என்ற வல்லெழுத்து வந்த ஒரு சொல்லையாவது தமிழில் காட்ட முடியாது. பிற மொழிகளில் உண்டு. ரோட், ராக்கெட், கார்க், பாத், பீச் என்றுவரும். அவற்றை நாம் ரோடு, ராக்கட்டு, பீச்சு என்று மாற்றிவிடுவதுண்டு. நம் ஒலிப்புமுறை அப்படி.

இவ்வாறு வல்லெழுத்தோடு வரும் உகரங்களே குற்றியலுகரங்கள். அவை எதிரே உயிர்வரின் கெட்டுவிடும். இதுவும் மிகுதியான அழுத்தமான ஒரு சந்தி வேறுபாடு.

குறிப்பு + இல்லை = குறிப்பில்லை
குறிப்பு + ஏடு = குறிப்பேடு
நாடு + அல்ல = நாடல்ல
பதிப்பு + ஆசிரியர் = பதிப்பாசிரியர்
வயிறென்று ஒன்றிருக்கிறது.
கணக்கில்லை வழக்கில்லை

**படிப்பில்லாத** பையனுக்கு **அழகில்லாத** பெண்ணைக்

**கட்டி** வைத்தால் **அன்பில்லாத** வாழ்வே அமையும்.

கோடிட்ட சொற்களில் எல்லாம் குற்றியலுகரம் கெட்டுப்போயுள்ளது காண்க.

**(4) குற்றியலுகரம் இரட்டித்தல்**

நாடு, காடு, வீடு முதலிய 'டு' குற்றியலுகரமும் வயிறு, ஆறு, பெரியாறு, பாலாறு முதலிய 'று' குற்றியலுகரமும் நெடில்தொடர்க்குற்றியலுகரமாகவோ உயிர்த்தொடர்க் குற்றியலுகரமாகவோ மேற்காட்டியதுபோல் வருகின்றன என்று வைத்துக்கொள்வோம். வேற்றுமைத் தொடராக வரும்போதும் சிலபோது அல்வழியினும் அவை ஒற்று இரட்டிப்பது தமிழில் உள்ள தனிவழக்கம்.

நாடு + புறம் = நாட்டுப்புறம் (நாடு — நாட்டு)
காடு + அரண் = காட்டரண் (காடு — காட்டு)

தனிக்குறில் முன் ஒற்று இரட்டிப்பது போன்றது இவ்விரட்டிப்பு.

வயிறு + பசி = வயிற்றுப்பசி
சேயாறு + பாலம் = சேயாற்றுப்பாலம்
பெரியாறு + நீர்த்தேக்கம் = பெரியாற்று நீர்த்தேக்கம்
ஓடு + பரப்பு = ஓட்டுப்பரப்பு
முகடு + மேலே = முகட்டுமேலே

'தமிழ்நாடு போக்குவரத்துக் கழகம்' என்று வரலாமா? 'தமிழ்நாடு சட்டமன்றம்' என்று வருமா? தமிழ்நாட்டுப் போக்குவரத்துக் கழகம், தமிழ்நாட்டுச் சட்டமன்றம் என்று வரவேண்டும். சிலசமயம் 'நாடு கிழவோன்' (நாட்டுக்கிழவோன்), காடகம் (காட்டகம்) என்ற செய்யுளில் இரட்டாமலும் வந்திருப்பதால் தமிழ்நாடு' என்று குழுமம் போன்ற பெயர்களில் ஆளப்படுவதும் ஏற்புடையதேயாம். அங்ஙனம் பார்த்தால் முன் குறித்தவை இரண்டும் தவறல்ல.

**(5) இனமான மெல்லினம் மிகுதல்**

பெரும்பாலும் வல்லினம் மிகுவதுதான் அடிக்கடி காணப்படுவது. சில இடங்களில் வல்லெழுத்து மிகவேண்டிய இடத்தில், அதற்குப் பதிலாக அதன் இனமான மெல்லெழுத்து மிகும்.

மா + கனி = மாக்கனி அன்று; மாங்கனி என்றே ஆகும்.
விள + காய் = விளக்காய் ஆகாமல் விளங்காய் ஆகும்.
புளி + கறி = புளிக்கறி எனலாம்; புளிங்கறி எனலும் உண்டு.
புளிஞ்சோறு — புளியஞ்சோறு என்பதுமுண்டு.
பூ + கொடி = பூக்கொடி அன்று; பூங்கொடியேயாம்.
பூ + சோலை = பூச்சோலை அன்று; பூஞ்சோலையே.
பூ + கணை = பூக்கணை ஆகாமல் பூங்கணை ஆதலுண்டு.

**(6) பண்புப்பெயரும் பண்புகொள் பெயரும்**

வெண்மை, செம்மை, கருமை முதலிய பண்புச்சொற்கள், மை

விகுதி கெட்டு, பல்வேறு வகையாகத் திரிந்து வருஞ்சொல்லோடு சேரும்.

வெண்மை + திங்கள் = வெண்திங்கள் (முன்பு வெண்டிங்கள்).

செம்மை + தமிழ் = செந்தமிழ்
கருமை + மேகம் = கருமேகம்
பெருமை + இன்பம் = பேரின்பம்
அருமை + அணங்கு = ஆரணங்கு
சிறுமை + அடி = சீறடி

பெருமை, அருமை, சிறுமை என்பன எதிரே 'உயிர்' எழுத்து வந்தால் பேர், ஆர், சீற் என மாறிவிடுகின்றன. இதுபோல் ஐந்து பண்புச்சொற்கள் வந்து புணரும் தொடர்களைத் தேடித் தொகுத்து எழுதிப் பாருங்கள். அவை சேரும் இயல்பு விளங்கிவிடும்.

(7) சுட்டு, வினா எழுத்துக்களின் புணர்ச்சி

அ, இ, உ என்ற சுட்டெழுத்துக்களும் எ என்ற வினாவெழுத்தும் எவ்வாறு வருஞ்சொற்களோடு கூடும்?

அ + யானை = அவ்யானை
இ + ஏடு = இவ்வேடு
எ + அருவி = எவ்வருவி

வருஞ்சொல் உயிர் அல்லது ய வந்தால் 'வ்' தோன்றுதல் காணலாம். பிற இடங்களில் வந்த சொல்லின் மெய்யே மிகும்.

அ + தீ = அத்தீ
எ + துணை = எத்துணை
இ + செடி = இச்செடி
அ + குளம் = அக்குளம்
எ + பாட்டு = எப்பாட்டு
இ + காலம் = இக்காலம்

'உ' கரச் சுட்டு இன்று வழங்கவில்லை. உவ்விடம், உம்மனிதன் என்பன முன்னைய வழக்குகள்

மேலும் சில சந்திகள் மிகக் கடினமானவை. அஃதாவது அவை எவ்வாறு உருமாறின என்று எளிதில் சொல்ல இயலாதபடி மாறிவிட்டன.

அ + இடை = ஆயிடை
பத்து + பத்து = பதிற்றுப்பத்து
ஒன்பது + நூறு = தொண்ணூறு
தென்னை + காய் = தேங்காய்

இப்படிப் பல உள. இவ்வாறு இன்று வழக்கிலுள்ள சொற்களையெல்லாம் பிரிக்கவும் சேர்க்கவும் சந்தி என்ன என்று அறியவும் வேண்டும். அதற்கு நாம் பேசும்போதும், படிக்கும்போதும், எழுதும்போதும் தேவையான அளவு பழக்கம் இருந்தால் இயல்பாக வந்துவிடுகிறது. நிரம்பச் சொற்களைச் சொல்லிச்சொல்லி பாருங்கள். நீங்களே கண்டிபிடித்து விளக்கம் சொல்ல ஆரம்பித்து விடுவீர்கள் !

**தன் மதிப்பீடு: 3 வினாக்கள்**

1. தனிக்குறில் முன்வரும் மெய்யெழுத்து இரட்டிப்பதைச் சான்றுகாட்டி விளக்குக.
2. உயிரெழுத்தும் உயிரெழுத்தும் சந்திக்கும்போது ஏற்படும் மாற்றங்கள் யாவை?
3. குற்றியலுகரமும், உயிரும் சந்திக்கும்போது ஏற்படும் மாற்றம் என்ன?
4. டு, று குற்றியலுகர விகுதிகள் எச்சொற்களில் இரட்டிக்கின்றன?

## 3.5. வல்லெழுத்து மிகுதல் ஏன்? ஒலிப்பு வேறுபாடும் பொருள் வேறுபாடும்

ஓசையை இணைத்து உச்சரிப்பை எளிமைப்படுத்த வல்லெழுத்து சொற்களின் இடையில் வருவது வழக்கம். தமிழ் எளிமை நோக்கிய மொழி. தொன்றுதொட்டு எளிமையாக ஒலிப்பதிலேயே கவனம் செலுத்தி வந்துள்ளனர்.

நாட்டை காக்கும், பார்த்து சிரித்தாள், பட்டு புடவை என்றால் பொருள் மிகவும் விளங்காமல் போவதில்லை. எனினும் இவற்றையே அவ்வாறு ஒற்றுவிட்டு எழுதினாலும் ஒலிக்கும்போது நாட்டைக்காக்கும், பார்த்துச் சிரித்தாள், பட்டுப்புடவை என்றுதான் கூறுகிறோம். பிறகு ஏன் ஒற்றை எழுதக்கூடாது.

சந்தி எழுத்து மிகுவதாலும், மிகாமையாலும் பொருள் வேறுபடுமிடங்கள் பலவாகும். பட்டு தெறித்தது என்றால் சிதைந்தது என்றாகும்; பட்டுத் தெறித்தது என்றால் ஒன்றிலொன்று பட்டுத்தெறித்ததாகும். ‘கடலைச் சாப்பிட்டார்’ என்று ச் எழுத்தை விட்டுவிட்டால், பொறிகடலை சாப்பிடார் என்றுதான் பொருள்படும். ‘அகத்தியர் கடலை சாப்பிட்டார்’ என்றால் நகைச்சுவைதானே? முன்பு காட்டியதுபோல் தலைச்சுமை என்றால் தலையிலுள்ள சுமையைக் குறிக்கும்; தலைசுமை என்றால் தலையே சுமையாகிவிடாதா? எண்ணிப்பாருங்கள்.

சொல்லும் சொல்லும் சந்திக்கும்போது இடையே வல்லெழுத்து (க ச த ப) மிகுவதால், ஒலிக்குப் பயன்படுவதை நினைத்துப் பாருங்கள். அதனால் பொருள் வேறுபடுவதையும் சற்றே எண்ணிப்பாருங்கள். அதன் இன்றியமையாமை மனத்திற்குப் புலனாகும்.

எடுத்துக்காட்டிற்குக் கீழ்வரும் இரண்டிரண்டு சொற்களைக் கவனியுங்கள். ஒற்று மிகுவதால் பொருள் வேறுபடுவதை உணருங்கள்.

| | | |
|---|---|---|
| வாய்பாடு | — | முன்மாதிரி |
| வாய்ப்பாடு | — | பானையின் மேல்வாய் |
| கைபிடி | — | கையைப்பிடி |
| கைப்பிடி | — | ஒரு கருவி * |
| வேலைதேடு | — | வேலை கிடைக்குமா என்று தேடு |
| வேலைத்தேடு | — | வேல் என்ற ஆயுதத்தைத் தேடு |
| பிட்டுதின்றான் | — | பிட்டு உணவைத் தின்றான் |
| பிட்டுத்தின்றான் | — | சிறிதுசிறிதாகப் பிட்டுத் தின்றான் |
| கைகுட்டை | — | கைகுட்டையாக உளது |
| கைக்குட்டை | — | சிறுதுண்டு |
| மலர்கை | — | மலர்தல் |
| மலர்க்கை | — | மலர்போன்ற கை |
| தயிர்கடை | — | தயிரைக்கடை |
| தயிர்க்கடை | — | தயிர் விற்கும் கடை |
| படிதேன் | — | ஒருபடி தேன் |
| படித்தேன் | — | கற்றேன் |
| திருடி பார்த்தேன் | — | ஒரு திருடியைப் பார்த்தேன் |
| திருடிப் பார்த்தேன் | — | களவு செய்து பார்த்தேன் |
| கதைபடி | — | கதையைப்படி |
| கதைப்படி | — | இந்தக் கதையின்படி |

எனவே இவ்வாறு மெய்யெழுத்து மிகுவதால் ஓசை கெடுவதேயல்லாமல், பொருளும் வேறுபடுவது தெரிகிறது. பிறிதொரு காட்டும் பார்ப்போம். அல்வழியில் எழுவாய்த்

தொடராக வரும்பொழுது ஒற்று மிகுவதில்லை. மழை குறைந்தது என்றால் இயல்பாகவுள்ளது. இதையே மழைக்குறை என்றால், மழையினது குறை என்றாகி வேற்றுமைத் தொடராய் ஒற்று மிகுகிறது. இதுபோன்ற தொடர்களை முன்வரும் பக்கத்தில் பார்த்தோம் அல்லவா?

மழை தூறியது — மழைத்தூறல்
மரம் குறைந்தது — மரக்குறை
வழி தடுமாறுகிறது — வழித்தடுமாற்றம்
பாட்டி கதை சொன்னாள் — பாட்டிசொன்னகதை

கீரை, கறி என உம்மைத்தொகையில் (கீரையும் கறியும்) மிகாதது, கீரைக்கறி என இருபெயரொட்டில் (கீரையாகிய கறி) மிகுகிறது. வல்லெழுத்து மிகுவதாலும் மிகாமையாலும் பொருள் வேறுபடுவது உறுதி. அதை நாம் குழப்பினால், காலப்போக்கில் பொருள் தடுமாறி ஒருவருக்கொருவர் விளங்காமல் இடர்ப்பட நேரிடும்.

**தன் மதிப்பீடு: 4**
**நடைமுறைப்பயிற்சி**

(அ) ஒரு நாளிதழ்ப் பத்திரிகையை எடுத்துவைத்துக்கொண்டு அதிலுள்ள தலைப்புக்களையெல்லாம் படியுங்கள். பிறகு அவற்றில் ஒற்று மிகவேண்டிய இடத்தில் மிகுந்துள்ளனவா என்று கண்டுபிடியுங்கள். அப்படி மிகவேண்டிய இடங்களில் மிகாமல் அச்சேற்றியிருந்தால், அதனால் பொருள்வேறுபடுமா, படாதா என்று சொல்லிச் சொல்லிப் பாருங்கள். ஒரு தாளை எடுத்து அத்தலைப்புக்களை எழுதிப்பாருங்கள்.

(ஆ) கீழ்வரும் பகுதியில் ஒற்றுக்கள் இடப்பட்டுள்ள அல்லது விடப்பட்டுள்ள விதத்தைப் படித்துச் சிந்தியுங்கள். பிறகு முறைப்படி அதை மாற்றி எழுதுங்கள். கருத்தை எளிதில் விளங்கவைக்க எது பயன்படும் என வேறுபடுத்தி எண்ணிப்பாருங்கள்.

''இடைகால குழுதலைவராக ஒரு பிரதிநிதி பிறகு நியமிக்க படுவார். நிர்வாக குழு நாடுக்கு கேடு விளைவிக்காமல் இருக்க நடவடிக்கை எடுக்க படும். இவ்வாறு குடியரசு தலைவர்க் கூறினார்.''

---

## 3.6. தொகுப்புரை

---

ஆங்கிலத்தில் உச்சரிப்புக்குத் தனி இடம் இருப்பதுபோல் தமிழில் சந்தி வேறுபாடுகளுக்கு முக்கிய இடமிருப்பதைத் தெரிந்துகொண்டோம். தமிழ் கவிதை மொழியாகவே வளர்ந்ததால், முன்பு கடுமையான புணர்ச்சிகள் தோன்றின. அச்சு வந்தபிறகு யாவும் எளிமைப்படுத்தப்படுதல் வளர்ச்சி நிலையாகிவிட்டது. அதில் இன்று தேவையானவற்றை நாம் நினைவுபடுத்திக் கொண்டோம்.

தொடர்களாக இணையும்போது, பொருள்புலப்பாட்டிற்காகச் சந்திகள் மாறுகின்றன. ஒலி, எளிமை, ஒலிப்பு இனிமை கருதியும் அவை இன்று போற்றப்படுகின்றன.

சில சந்திகளை எந்தவிதத்திலும் விட்டுவிடமுடியாதபடி அவை தமிழ்மொழியில் படிந்துள்ளன. பெயரும், வினையுமே தமிழில் அடிப்படைச் சொற்கள். அவை சேரும்போது உருபுகள், சாரியைகள் வருகின்றன. அவை இடைச்சொற்கள் எனப்படுகின்றன. பெயர், வினை, உருபு, சாரியைகளை — மேலும் இணைக்கும் அல்லது 'ஒட்டும்' போக்கை இச்சந்திகள் வெளிப்படுத்துகின்றன.

## 3.7. மேலும் கற்றற்குரியவை

கீழ்க்காணும் நூற்பட்டியலில் ஒன்றிரண்டு நூல்களையேனும் பெற்றுப் பார்த்துப்படித்துப் பழகுவோர்க்கு மேலும் நல்ல பயிற்சி ஏற்படும்.

1. அறிவியல் இலக்கியக் கழக வெளியீடு, **தமிழ் வழக்கில் சில தவறுகள்**, பயிலரங்க நிகழ்ச்சித் தொகுப்பு, தொகுப்பாசிரியர் : டாக்டர் வா. செ. குழந்தைச்சாமி, அண்ணா பல்கலைக்கழகம்,சென்னை - 600 025.
2. இராசமாணிக்கம், வீ., **எப்படி எழுதுவது?**, தேன்தமிழ்ப்பதிப்பகம், 85, சுப்பிரமணியபிள்ளைத் தெரு, சேலம் - 636 001.
3. இளையபெருமாள், கோ., **தமிழில் பிழையின்றி எழுதுவது எப்படி?**, வானதி பதிப்பகம், 13 தீனதயாளு தெரு, தியாகராயநகர், சென்னை - 600 017
4. சண்முகதாஸ், அ., **தமிழ்மொழி இலக்கண இயல்புகள்**, யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், யாழ்ப்பாணம், இலங்கை.
5. தமிழண்ணல், **இனிய தமிழ்மொழியின் இயல்புகள் ,1, 2, 3 பகுதிகள்**, மீனாட்சி புத்தக நிலையம், 60, மேலக்கோபுரத் தெரு, மதுரை - 625 001.
6. பரந்தாமனார், அ.கி., **நல்ல தமிழ் எழுதவேண்டுமா?** , பாரி நிலையம், 184, பிராட்வே, சென்னை - 600 108
7. முத்து-கண்ணப்பன், தி., **தமிழில் தவறுகளைத் தவிர்ப்போம்**, பாரி நிலையம், 184, பிராட்வே, சென்னை-600 108.

**தன்மதிப்பீடு' அறிதல்: 5 பயிற்சி**

ஒரு பாரதியார் பாடல் தரப்பட்டுள்ளது. அதில் அடிக்கோடிட்ட/எடுத்தெழுதப்பட்ட தொடர்களைப் பாடத்தில்வரும் அவற்றோடு ஒப்புமையுடைய சந்திபெற்ற பகுதிகளுடன் சேர்த்துக் குறிப்பிட்டு விளக்குக.

**வெள்ளைத் தாமரைப் பூவிலிருப்பாள்**
**வீணை** செய்யும் **ஒலியி லிருப்பாள்**
கொள்ளை **இன்பங் குலவு கவிதை**
**கூறு பாவலர் உள்ளத் திருப்பாள்**
உள்ளமாம் பொருள் **தேடி யுணர்ந்தே**
**ஓதும் வேதத்தின் உள்நின் றொளிர்வாள்**
**கள்ளமற்ற** முனிவர்கள் **கூறும்**
கருணை வாசகத் **துட்பொரு ளாவாள்**

வெள்ளைத் தாமரை
தாமரைப் பூ
பூவிலிருப்பாள்
ஒலியிலிருப்பாள், இன்பங்குலவு
குலவு கவிதை, கூறுபாவலர்,
உள்ளத்திருப்'பாள், தேடி-
யுணர்ந்தே, நின்றொளிர்வாள்
கள்ளமற்ற, உட்பொருள்,
பொருளாவாள்.

**மதிப்பீடு: விடைகள்**

1. குடத்தை—குடம் +அத்து +ஐ அத்து சாரியை (ஐ உருபு)
2. கரையின்கள்-கறை + ப் + இன் + கள் இன் சாரியை (கண் உருபு)

3. கற்பனையினது - கற்பனை + ய் + இன் + அது
இன் சாரியை ய் சந்தி
(அது உருபு)
பாவினால் - + பா + இன் + ஆல் இன் சாரியை வ் சந்தி
(ஆல் உருபு)

2. 1. அ. ஒலி கேட்கிறது, சிரித்த பெண், மணி விளக்கு, பனை மரம், பால் கொடு.
ஆ. மாங்கனி, இயற்கையழகு, சட்டைத்துணி, கூட்டுக்கறி, ஒட்டுச்செடி.
இ. மர நடுவிழா, அரச வீரன், மூல நாள், கணக்கில்லை, வாக்குண்டாம்.
ஈ. வேற்கண், பொருட்செலவு, நூற்பொருள், பற்பொடி, கட்குடி

2. மடைப்பள்ளி - தோன்றல்
படையெடுப்பு - தோன்றல்
கிணற்றுத்தவளை - தோன்றல்
மட்குடம் - இரிதல்
படத்திறப்பு - கெடுதல், தோன்றல்
படிப்பில்லை - கெடுதல்
நடைதிறப்பு - இயல்பு

3. புல்தரை, கொழுநன் தொழுது எழுவாள், முள்தீது, நாழிஉரி, எள்துணையும், கள்தீது.

3. அ. முள் + ஐ = முள்ளை எடு 'ள்' இரட்டித்தது காண்க. இன்றேல் முள் + ஐ = முளை ஆகும்.
ஆ. உயிரும் உயிரும் சந்திக்கும் போது இடையில் ய் அல்லது வ் என்ற உடம்படுமெய் தோன்றும். புகை + இலை = புகையிலை. மா + இலை = மாவிலை.
இ. குற்றியலுகரத்தின் முன் உயிர் எழுத்து வந்தால், அவ்வுகரம் கெட்டு விடும். காசு + இல்லை = காசில்லை. காற்று + இல்லை = காற்றில்லை.
ஈ. நெடில், உயிர்த்தொடராக வரும் டு, று குற்றியலுகரங்கள் பெரிதும் இரட்டிக்கும். ஆடு + குட்டி = ஆட்டுக்குட்டி; வயிறு + பசி = வயிற்றுப்பசி.

4. அ. ''இடைக்காலக் குழுத்தலைவராக ஒரு பிரதிநிதி பிறகு நியமிக்கப்படுவார். நிர்வாகக் குழு நாட்டுக்குக்கேடு விளைவிக்காமல் இருக்க நடவடிக்கை எடுக்கப்படும்." இவ்வாறு குடியரசுத்தலைவர் கூறினார்!

5. அ. வெள்ளைத்தாமரை — ஒற்று தோன்றியது
தாமரைப்பூ
பூவிலிருப்பாள்
ஒலியிலிருப்பாள்
பொருளாவாள்
கள்ளமற்ற
கூறுபாவலர்
குலவு கவிதை — இயல்புப்புணர்ச்சி
இன்பங்குலவு — 'ம்' திரிந்தது
உள்ளத்திருப்பாள் - உள்ளம் + அத்து + இருப்பாள்
(அத்து சாரியை)
நின்று + ஒளிர்வாள் = (இற்றுகரம் கெட்டது)
உள் + பொருள் = உட்பொருள் (ள் திரிந்தது)

# பாடப்பகுதி (Unit) 4 — வாக்கிய அமைப்பும் வகைகளும்

## படிப்பு நோக்கம்

★ தமிழ் வாக்கிய அமைப்புக்களை விளங்கிக் கொள்ளுதல்

★ எழுவாய் பயனிலை செயப்படுபொருளைக் கண்டறிதல்

★ தமிழ்மொழியின்கண் சிறப்பாகவுள்ள வேற்றுமை, அல்வழித் தொடர்களையும் தொகைநிலை, தொகாநிலைத் தொடர்களையும் நன்கு அறிந்து கொள்ளுதல்.

★ ஆங்கிலத்திற்போன்ற வாக்கிய அமைப்புக்களையும் புரிந்து கொள்ளுதல்.

★ ஆளுமையோடு, திறம்பட எழுதும் ஆற்றல் பெறுதல்.

## பாடக் கருத்தலகுகள்

4.0 பாட முன்னுரை

4.1 வாக்கியம்

4.2 இயைபு

4.3 எச்சங்கள்

4.4 வேற்றுமைத் தொடர்கள்

4.5 அல்வழித் தொடர்கள்

4.6 தொகைநிலைத் தொடர்கள்

4.7 தொகாநிலைத் தொடர்கள்

4.8 வாக்கியம் : வகைகள்

4.9 பாடத்தொகுப்புரை

4.10 தொடர்ந்து படித்தற்குரிய நூல்கள்

4.11 தன்மதிப்பீடு — விடைகள்

## 4.0 பாட முன்னுரை

தமிழில் வாக்கிய அமைப்பு எளிமையானது. சொல், தொடர், வாக்கியம் எனத் தமிழில் வகைப்படுத்தலாம். தொடர்கள் தம்மளவில் வாக்கியமாக நிற்பனவும், மேலும் தொடர்ந்து நின்று வாக்கியமாவனவும் உள. 'கண்ணா வா' என்பது விளித்தொடர்; அதுவே வாக்கியமெனவும் கூறலாம். 'மற்றொன்று' என்பது இடைச்சொல்தொடர். இதனை 'மற்றொன்று தந்தான்' என்றால்தான் வாக்கியமாகும். 'சேவடி' என்பது பண்புத்தொகை நிலைத்தொடர். 'சேவடி காப்பு' என்றால் வாக்கியமாகும். தமிழ் வாக்கிய அமைப்புகளை, இன்றைய புதிய பார்வைகளில் வகைப்படுத்துவதும் தெளிவு பெற உதவுகிறது. நன்கு திறம்பட எழுத வேண்டுமென்றால், மிகுதியாகப் பயிற்சிகளைச் செய்து பார்த்து ஆற்றலை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

## 4.1 வாக்கியம்

சொல் என்பது ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துக்கள் சேர்ந்து நின்று, ஒரு பொருளைத் தருவது என்று முன்னமே நீங்கள் படித்திருக்கிறீர்கள்.

'தலை' என்பது இரண்டு எழுத்துக்களால் ஆகி உடம்பில் 'கழுத்துக்கு மேல் உள்ள பகுதி' என்ற பொருளைக் குறிப்பதால் **சொல்** எனப்படும்.

அவ்வாறே ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் சேர்ந்து நின்று ஒரு முடிந்த பொருளைச் சுட்டுவதுண்டு.

**கண்ணன் வந்தான்**

இங்கே இரண்டு சொற்கள் சேர்ந்து நின்று, கண்ணன் வருதலாகிய தொழிலைச் செய்தான் என்று ஒரு கருத்தைத் தெளிவுபடுத்தி நிற்கின்றன. இவ்வாறு இரண்டுக்கு மேற்பட்ட சொற்கள் சேர்ந்து பொருள் முற்றுப் பெற நிற்கும் போது **அச்சொற்றொடரை** வாக்கியம் என்கிறோம்.

## 4.2 இயைபு

வாக்கியத்தில் எழுவாய்க்கும் பயனிலைக்கும் ஒருவகைப் பொருத்தம் உள்ளதை அறிவீர்கள். இவ்வகையான பொருத்தத்திற்கு 'இயைபு' என்று பெயர்.

**அவன் வந்தான்**

என்று கூறுவோம். ஆனால்,

**அவன் வந்தது**

என்று கூற மாட்டோம். அப்படியே நண்பர்கள் யாராவது கூறினாலும் அவர்கள் பேச்சைக் கேட்டு எள்ளி நகைப்போம். எழுதும் போதும் கவனமாக எழுதினால்தான் மொழி என்ற கருவி பழுதுபடாமல் இருக்கும்.

'மாடு வந்தது' என்று கூறுவோம்; மாறாக 'மாடு வந்தார்' என்று கூறமாட்டோம்.

ஏனெனில் 'அவர்' என்பது எழுவாயாக வருமானால் 'வந்தார்' (வா-ந்-த்-ஆர்) என்ற வினைமுற்று 'ஆர்' விகுதிபெற்று முடிவதைக் காண்கிறோம். 'அவன்' என்று உயர்திணை ஒருமை ஆண்பால் எழுவாயாக வரும்போது வினைமுற்றிலும் 'ஆன்' என்ற

உயர்திணை ஒருமை ஆண்பால் விகுதி வருகிறது. இதுவே இயைபு எனப்படும்.

மீனா(ள்) வந்தாள்

இவ்வாக்கியத்தில் 'மீனாள்' என்னும் பெண்பாற் சொல் 'வந்தாள்' என்றும் பெண்பாலுக்கு உரிய வினைமுற்றையே கொண்டு முடிகிறது. ஆகவே, அதனைப் **பால் இயைபு** எனக் கூறுவர்.

நான் படித்தேன்

இங்கு 'நான்' என்னும் தன்மைப் 'பெயர் படித்தேன்' என்னும் தன்மை வினைமுற்றையே கொண்டு முடிவதால் இது 'இட இயைபு' எனப்படும்.

மாடு வந்தது

இங்கு 'மாடு' என்னும் அஃறிணை ஒருமை 'வந்தது' என்னும் அஃறிணை ஒருமை வினைமுற்றோடு 'இயைந்து வருவதால் இஃது 'எண் இயைபு' ஆகும்.

மாடுகள் வந்தது
பறவைகள் பறக்கிறது

என்று அஃறிணையில் பன்மைக்கு ஒருமை விகுதி கொடுப்பது இன்று பரவலாகி விட்டது என்றாலும் பன்மை முடிவு கொடுப்பதே தெளிவுபடும் எனலாம்.

நரி நடந்தார்.

இவ்வாக்கியத்தில் 'நரி' என்னும் அஃறிணைப்பெயர் 'நடந்தார்' என்னும் உயர்திணை வினைமுற்றைக் கொண்டு முடிதலின் இது '**திணை இயைபு**' பெறாமல் அமைகிறது. ஆகவே இவ்வாக்கியம் சரியான வாக்கியம் ஆக வேண்டுமெனில், 'நரி நடந்தது' என்றே இருக்க வேண்டும்.

அவள் எழுந்தான்

இவ்வாக்கியத்தில் 'அவள்' என்னும் பெண்பாற் சொல் 'எழுந்தான்' என்னும் ஆண்பால் வினைமுற்றைக் கொண்டு முடிதலின் இது '**பால் இயைபு**' பெறாமல் அமைகிறது. இவ்வாக்கியம் இலக்கணம் உடையதாக இருக்கவேண்டுமெனில், 'அவள்' என்ற எழுவாய்க்கு ஏற்ற 'எழுந்தாள்' என்னும் வினைமுற்றைக் கொண்டு, 'அவள் எழுந்தாள்' என அமைய வேண்டும்.

அவன் பார்த்தேன்

இவ்வாக்கியத்தில் 'அவன்' என்னும் படர்க்கைக்கு உரிய சொல் 'பார்த்தேன்' என்னும் தன்மை வினைமுற்றைக் கொண்டு முடிவதால் இஃது '**இயைபு**' பெறாது அமைகின்றது.

ஆனால் 'அவன் பார்த்தான்' என்று அமையும்போது 'இட இயைபு' பெற்று இலக்கணமுடையதாக உள்ளதைக் காணலாம்.

எளிதாகப் புரிந்து கொள்வதற்காகக் கீழே கட்டங்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

***1. எடுத்துக்காட்டு — இயைபின் பெயர் — சரியான வாக்கியம்***

| எடுத்துக்காட்டு | இயைபின் பெயர் | சரியான வாக்கியம் |
|---|---|---|
| நான் வந்தோம் | இட இயைபு இல்லை | நான்வந்தேன் |
| பாலன் வந்தான் | பால் இயைபு இல்லை | பாலன் வந்தான் |
| யானை வந்தன | எண் இயைபு இல்லை | யானை வந்தது |
| நீ தூங்கினான் | இட இயைபு இல்லை | நீ தூங்கினாய் |
| அவள் நடந்தான் | பால் இயைபு இல்லை | அவள் நடந்தாள் |
| ஆடு ஓடினான் | திணை இயைபு இல்லை | ஆடு ஓடியது |

| எழுவாய் | விகுதி | எடுத்துக்காட்டு |
|---|---|---|
| தன்மை+முன்னிலை | ஓம் | நானும் நீயும் போவோம் |
| தன்மை+படர்க்கை | ஓம் | நானும் அவனும் போவோம் |
| முன்னிலை+படர்க்கை | உங்கள் | நீயும் அவனும் பாருங்கள் |
| (படர்க்கை) உயர்திணை+அஃறிணை | ஆர்கள் | அவனும் குதிரையும் வந்தார்கள் |

**நினைவுபடுத்திக் கொள்க**

1. எழுவாய்க்கும் பயனிலைக்கும் உள்ள தொடர்புக்கு இயைபு என்று பெயர்.
2. 'நான் வந்தேன்' என்று கூறலாம்; ஆனால் 'நான் வந்தார்' என்று கூறுவதில்லை.
3. 'நாம் வந்தோம்' என்று கூறலாம்; ஆனால் 'நாம் வந்தேன்' என்று கூறவதில்லை.
4. ஒருமை எழுவாயெனில் வினைமுற்றிலும் ஒருமை விகுதி வரும்.
5. திணை, பால், எண், இடம் நான்கும் இயைபுடன் அமைய வேண்டும்.

**புறனடை**

சிலசமயம் மரியாதை கருதி 'காமராசர் வந்தார்', 'இந்திரா காந்தி பார்வையிட்டார்', 'அண்ணா பேசினார்' என்பதுண்டு. இங்கு ஒருமை, பன்மை போலக் கூறப்படுகிறது. இதனை மரியாதைப் பன்மை என்பர். சிறுவர்க்குக் கதை கூறும்போது 'நரியார் வந்தார்', 'யானையார் பிளிறினர்' என்பன இவ்வாறே அஃறிணையை உயர்திணையாக்கிக் கூறுவன. இவை 'புறனடை' எனப்படும். சிலசமயம் விதிகளுக்குப் புறமாகவும் இவை நடைமுறைக்கு வருவன (புறன்+நடை).

**தன் மதிப்பீடு: 1**
**வினாக்கள்**

1. வாக்கியத்தில் முன்னிலையும் தன்மையும் எழுவாயாக வரும்போது வினைமுற்றின் விகுதி என்ன?
2. 'மாடு வந்தாள்' என்று ஏன் கூறுவதில்லை?
3. 'ஆர்' என முடியும் விகுதி கொண்ட வினைமுற்றிற்கு எழுவாய் கூறுக.

**பயிற்சி**

**கோடிட்ட இடத்தைச் சரியான எழுவாய், விகுதிகளைக்கொண்டு நிரப்புக.**

1. குதிரையும் நாயும் ஓடி .........
2. அவள் நேற்று விழுந்து விட்...........
3. ........... அவரை இன்றுவரை மறந்து விட்டேன்.
4. நாங்கள் நன்றாகப் படிக்கி............
5. ............... ஏன் வந்தான்?
6. ............... அங்கே நிற்கும்?

## 4.3 எச்சங்கள்

எச்சங்கள் என்றால் என்னவென்று முற்பகுதியிலேயே பார்த்திருக்கிறீர்கள்.

வந்த பையன் - பெயரெச்சம்
வந்து போனான் - வினையெச்சம்

இவ்வாறு வினைமுற்றில் விகுதி கெட்டு, எஞ்சி நிற்கும் பகுதி பெயரைக் கொண்டு முடிந்தால் பெயரெச்சம் என்றும், வினையைக் கொண்டு முடிந்தால் வினையெச்சம் என்றும் பெயர் பெறும்.

வினைமுற்று - கருத்தாலும் அமைப்பாலும் முற்றுப்பெற்றது.
எச்சம் - கருத்தாலும் அமைப்பாலும் முற்றுப்பெறாதது.




**பெயரெச்சம்**

1. **ஓடிய பையன் விழுந்து விட்டான்**
2. **ஓடாத பையன் விழுந்து விட்டான்**

மேலே காட்டிய சான்றுகளைக் காண்க. வினைமுற்றின் விகுதி கெட்டு எஞ்சிய பகுதிகளுடன் **'அ'** என்னும் **பெயரெச்ச விகுதி** பெற்று, பெயர் கொண்டு முடிவது பெயரெச்சமாகும். அஃது **உடன்பாட்டுப்** பொருளையும் எதிர்மறைப் பொருளையும் **உணர்த்தி** நிற்கும். முதல் வாக்கியத்தில் **'ஓடிய'** என்பது **உடன்பாடு;** இரண்டாவது வாக்கியத்தில் உள்ள **'ஓடாத'** என்பது எதிர்மறை. இவ்விரண்டுமே பெயர் கொண்டு முடிவதைக் காணுங்கள்.




**வினையெச்சம்**

அவள் **பாடி ஆடினாள்**

இவ்வாக்கியத்தில் 'பாடி' என்ற வினையெச்சம், ஆடினாள் என்ற வினைச்சொல் கொண்டு முடிகிறது. இவ்வாறு, வினைமுற்றிலுள்ள விகுதி கெட்டு, எஞ்சியுள்ள பகுதிகளோடு வினைச் சொல்லைக்கொண்டு முடிவது வினையெச்சம் ஆகும். வினையெச்சமும் உடன்பாடு, எதிர்மறை ஆகிய இரண்டு பொருள்களிலும் வரும்.




1. **படித்து வருபவர்** பயன் பெறுவர்

இங்கு **'படித்து'** என்ற வினையெச்சம் 'வருபவர்' என்ற வினையாலணையும் பெயரைத் தழுவி நிற்கிறது.

2. அவள் **அவனைத் தேடி ஓடினாள்.**

இவ்வாக்கியத்தில் 'தேடி' என்னும் வினையெச்சம், 'ஓடினாள்' என்னும் வினைமுற்றைத் தழுவி வந்துள்ளது.

3. **திருடிக் கிடைத்த பணம்** நீண்ட நாள் நிலைக்காது.

இந்த வாக்கியத்தில் வினையெச்சமான **'திருடி'** என்ற சொல் **'கிடைத்த'** என்னும் பெயரெச்சத்தைக் கொண்டு முடிகிறது.

4. ஆடிப்பாடி மகிழ்ந்தாள்.

இந்த வாக்கியத்தில் 'ஆடி' என்ற வினையெச்சம் 'பாடி' என்ற மற்றொரு வினையெச்சத்தைத் தழுவி வந்துள்ளது.

இவ்வாறு வினையெச்சமானது வினையாலணையும் பெயர், வினைமுற்று, பெயரெச்சம், மற்றொரு வினையெச்சம் முதலிய அனைத்து வினைவடிவங்களையும் தழுவி வரும்.




*நினைவு படுத்திக் கொள்க*

1. பெயரெச்சம் என்பது பெயருக்கு முன் வரும்.
2. வினையெச்சம் என்பது வினைக்கு முன் வரும்.
3. பெயரெச்சம், வினையெச்சம் இரண்டும் உடன்பாடு, எதிர்மறை என்னும் இருபொருள்களிலும் வரும்.

**தன் மதிப்பீடு: 2**

**வினாக்கள்**

1. எச்சங்கள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?
2. எச்சம் வினைமுற்றிலிருந்து எவ்வாறு வேறுபடுகிறது?
3. பெயரெச்ச விகுதி எது?
4. அழாமல் வந்தான்.
   அழாத பையன்.

மேலே கோடிட்ட வார்த்தைகள் இரண்டிற்கும் உள்ள முக்கிய வேறுபாடு என்ன?

**பயிற்சி**

வினையெச்சம், பெயரெச்சம்; இவை கொண்டு முடியும் சொற்கள் ஆகியவற்றைத் தொகுத்தெழுதுக.

1. பழத்தைக் கடித்துத் தின்றான்.
2. அம்மா அந்திக் கடையில் அழுகின பழம் வாங்கி வந்தாள்.
3. சிரித்துச் சிரித்து வயிறு வலித்தது.
4. இது முட்டையிடாத கோழி.
5. கவைக்கு உதவாப் பேச்சு.

| வினையெச்சம் | கொண்டு முடியும் சொல் | பெயரெச்சம் | கொண்டு முடியும் சொல் |
|---|---|---|---|
| கடித்து | தின்றான் | இடாத | கோழி |

## 4.4 வேற்றுமைத் தொடர்கள்

ஒரு தொடரில் முதலில் நிற்கம் மொழி (சொல்) நிலைமொழி ஆகும். அதனை அடுத்து வருவது வருமொழி எனப்படும்.

இவ்வாறு நிலைமொழியும் வருமொழியும் ஒன்று சேர்ந்து இணைவது புணர்ச்சியாகும். இஃது இயல்புப் புணர்ச்சி, விகாரப்புணர்ச்சி என இருவகைப்படும்.

**எழுத்து வகையின்** அடிப்படையில் உயிர்முன் உயிர், உயிர்முன் மெய், மெய்முன் உயிர், மெய்முன் மெய் எனப் புணர்ச்சி நான்கு வகைப்படும். இவற்றைப் பற்றி முன்பே கண்டோம்.

இனிப் **பொருள்வகையில்** புணர்ச்சி எத்தனை வகைப்படும் என்பதைப் பற்றி இங்கு விரிவாகக் காண்போம்.
இவ்வடிப்படையில் இவை தமிழில் வேற்றுமைத் தொடர்கள் எனப்படுகின்றன;

| | | |
|---|---|---|
| மரம் வெட்டினான் | (ஐ) | இரண்டாம் வேற்றுமை |
| தலை வணங்கு | (ஆல்) | மூன்றாம் வேற்றுமை |
| கண்ணன் மகள் | (கு) | நான்காம் வேற்றுமை |
| மலைவீழ் அருவி | (இன்) | ஐந்தாம் வேற்றுமை |
| என் கை | (அது) | ஆறாம் வேற்றுமை |
| நிலம் நடந்தான் | (கண்) | ஏழாம் வேற்றுமை |

மேலே உள்ளவற்றை விரித்து நோக்குவோம். அவை: 'மரத்தை வெட்டினான்', 'தலையால் வணங்கு', 'கண்ணனுக்கு மகள்', 'மலையின் வீழ் அருவி', 'எனது கை', 'நிலத்தின்கண் நடந்தான்' என விரிவதைக் காண்கிறோம்.

இவ்வாறு இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை வரை ஆறு வகையான வேற்றுமைப் பொருள்பட நின்று, நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் சேர்ந்து வருவது 'வேற்றுமைப்புணர்ச்சி' ஆகும்.

இவ்வாறு 'ஐ' முதல், 'கண்' வரையுள்ள ஆறு வேற்றுமை உருபுகளுள் ஏதேனும் ஒன்று, இரண்டு சொற்களிடையே மறைந்து வருவது 'வேற்றுமைத்தொகை நிலைத்தொடர்' அல்லது 'வேற்றுமைத் தொகை' என்று வழங்கப்படும்.

முதலாம் வேற்றுமைக்கும் எட்டாம் வேற்றுமைக்கும் தனியே உருபுகள் இல்லை. எனவே இவை வேற்றுமைத்தொகையாக வருவதில்லை.

'ஐ' முதலிய வேற்றுமை உருபுகள் வெளிப்படையாக வந்து, நிலை மொழியும் வருமொழியும் சேர்வது 'வேற்றுமைத் தொகா நிலைத்தொடர்' அல்லது 'வேற்றுமை விரி' என்று அழைக்கப்படும். ஆகவேதான், வேற்றுமைப் புணர்ச்சியில் தொகைநிலையும் ஆறு (உருபு மறைந்து வருவது), தொகா நிலையும் ஆறு (உருபு வெளிப்படையாகத் தோன்றி வருவது) என்ற நிலை உள்ளது.

---

## 4.5 அல்வழித் தொடர்கள்

வேற்றுமைப் பொருள் அல்லாத நிலையில் நிலைமொழியும் வருமொழியும் சேர்வது **அல்வழிப்புணர்ச்சி** ஆகும் (அல்வழி **என்பது** வேற்றுமை அல்லாத வழி).

| | | |
|---|---|---|
| **ஊறுகாய்** | - | வினைத்தொகை |
| கொடுங்காற்று | - | பண்புத்தொகை |
| முத்துப்பல் | - | உவமைத்தொகை |
| துணிமணி | - | உம்மைத்தொகை |
| பூங்கொடி வந்தாள் | - | அன்மொழித்தொகை |

மேலே கூறியவாறு அல்வழிப்புணர்ச்சியில் வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை,

அன்மொழித்தொகை என ஐந்து தொகைகள் உள்ளன. இவை பற்றிப் பின்னர் விரிவாகக் காண்போம்.

வேற்றுமைப் புணர்ச்சியில் உள்ளதுபோல, அல்வழிப் புணர்ச்சியிலும் 'தொகைநிலை' என்றும் 'தொகாநிலை' என்றும் இரண்டு வகை உண்டு. இவை தமிழில் அல்வழித் தொடர்கள் எனப்படும்.

**நினைவுப்படுத்திக் கொள்க.**

1. வேற்றுமை உருபு இரண்டு சொற்களுக்கிடையில் மறைந்து வருவது 'வேற்றுமைத் தொகை' ஆகும்.
2. முதலாம் வேற்றுமையும் எட்டாம் வேற்றுமையும் வேற்றுமைத் தொகையாக வருவதில்லை.
3. வேற்றுமை உருபு இரண்டு சொற்களுக்கிடையில் வெளிப்படையாக வருவது 'வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்' என்பதாகும்.
4. வேற்றுமை அல்லாத பிற பொருள் நிலையில் இரண்டு சொற்கள் இணைவது 'அல்வழிப்புணர்ச்சி' எனப்படும்.

***தன் மதிப்பீடு: 3***

**வினாக்கள்**

1. 'வேற்றுமைத் தொகை' என்றால் என்ன? சொந்தமாக எடுத்துக்காட்டுத் தருக.
2. வேற்றுமைத் தொகாநிலைத்தொடரைப் பற்றி விளக்குக.
3. அல்வழிப்புணர்ச்சிக்கு இரண்டு எடுத்துக்காட்டுகள் தருக.

---

## 4.6 தொகைநிலைத் தொடர்

இரண்டு சொற்களுக்கு இடையில் வேற்றுமை உருபு, உவமை உருபு முதலிய உருபுகள் தொக்கு நின்று (மறைந்து நின்று) பொருள்தருவது தொகை எனப்படும்.




இவ்வாறு அமைகின்ற தொகைகள் முன்பு காட்டியவாறு வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத் தொகை, அன்மொழித்தொகை என்பனவற்றுடன் வேற்றுமைத்தொகையையும் சேர்த்து ஆறு ஆகும்.

தொகைகள்:

1. வேற்றுமைத்தொகை
2. வினைத்தொகை
3. பண்புத்தொகை
4. உவமைத்தொகை
5. உம்மைத்தொகை
6. அன்மொழித்தொகை

**1. வேற்றுமைத்தொகை**

ஐ, ஆல், கு, இன், அது, கண் ஆகிய ஆறு வேற்றுமை உருபுகளில் ஏதேனும் ஒன்று இடையே மறைந்து நின்று சொற்கள் தொடர்வது வேற்றுமைத்தொகை.

எ-டு: தேங்காய் உடைத்தார்.
கண்ணன் கை

வேற்றுமைத்தொகை

| | | | |
|---|---|---|---|
| பூசாரி | தேங்கா | யை | உடைத்தார் |
| | தேங்காயை உடைத்தார் | | |

**எந்தெந்த வேற்றுமை உருபுகள் மறைந்து நிற்கின்றனவோ அந்தந்த வேற்றுமைத்தொகை என்று கூறவேண்டும்.**

**உருபு மறைந்து வராது வெளிப்படையாக வருமெனில் அது தொகாநிலைத்தொடராகும்.**

பார்வதி க்கு மகன் - தொகாநிலைத் தொடர்
பார்வதி மகன் - தொகைநிலைத் தொடர்

அதாவது, தொகைநிலைத் தொடரில் உருபு எப்போதும் மறைந்து வர வேண்டும்.

கோடையிடி
கூலி வேலை
அரிசி கொடுத்தான்
தசரதன் மகன்
— வேற்றுமைத்தொகை

**2. வினைத்தொகை**

காலம் காட்டும் இடைநிலை மறைந்து நின்று வினையடிச் சொல்லோடு பெயர்ச்சொல் தொடர்வது வினைத்தொகை.

எ-டு: அரிவாள்

வினைத்தொகை

| | | |
|---|---|---|
| அரி | கின்ற | வாள் |
| | அரிவாள் | |

இதனை விரித்துப் பொருள் கொண்டால் '**அரிகின்றவாள்**' என்று நிகழ்காலமும் 'அரிந்த வாள்' என்று இறந்த காலமும் 'அரியும் வாள்' என்று எதிர்காலமும் காட்டி நிற்கும்.

| வினைத்தொகையின் அமைப்பு |
|---|
| வினையடி - பெயர் |

தொங்குதோட்டம்
ஓடுகாலி
மாறுகண்
செய்தொழில்
புளி மாங்காய்
மறைபொருள்
— வினைத்தொகை

**3. பண்புத்தொகை**

ஆகிய என்னும் உருபு மறைந்து நின்று பண்புச் சொல்லோடு பெயர்ச்சொல் தழுவுவது பண்புத்தொகை. இங்கு பண்பு என்பது வண்ணம், வடிவம், அளவு, சுவை முதலியன அடங்கியவை ஆகும்.

எ-டு: கருங்குரங்கு

இதனை விரிக்கும் போது **கருமையாகிய** குரங்கு என்று ஆகும். 'கருமை' என்ற பண்புச்சொல்லை அடுத்து 'குரங்கு' என்ற பெயர்ச்சொல் நின்று 'ஆகிய' என்னும் பண்புருபு தொக்கு நிற்பது பண்புத்தொகையாகும்.

பண்புத் தொகை

| | | |
|---|---|---|
| செம் | மையாகிய | தாரை |
| | செம் — தாமரை | |
| | செந்தாமரை | |

| பண்புத்தொகையின் அமைப்பு |
|---|
| பெயரடை-பெயர் |

வெண்பட்டு
செந்நாய்
செம்பொன் } — பண்புத்தொகை

### 4. உவமைத்தொகை

போல, அன்ன, ஒப்ப முதலிய உவமை உருபுகள் மறைந்து நின்று உவமானச் சொல்லோடு உவமேயச் சொல் தொடர்வது உவமைத்தொகை.

எ-டு: முட்டைக்கண்

இத்தொடரில் 'முட்டை போன்ற கண்' என்பதன் **'போன்ற'** **என்னும்** உவமை உருபு மறைந்து நின்று, **முட்டை** என்னும் உவமானச் சொல்லுடன் **கண்** என்னும் உவமேயச் சொல் சேர்ந்து நிற்கிறது. இவ்வாறு உவமை உருபு இன்றி, ஒன்றை மற்றொன்றோடு உவமைப்படுத்திக் கூறுவது உவமைத்தொகை.

உவமைத்தொகை

| | | |
|---|---|---|
| தாமரை | போன்ற<br>போல<br>புரைய<br>ஒப்ப<br>அன்ன | முகம் |
| | தாமரை முகம் | |

தேங்காய்த்தலை
மலர்க்கரம்
முத்துப்பல்
குச்சி உடம்பு — உவமைத்தொகை

### 5. உம்மைத்தொகை

எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் நான்குவகை அளவைகளால் பொருள்களைக் கூறுமிடத்து 'உம்' உருபு இடையிலும் கடையிலும் மறைந்து நின்று ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் தொடர்வது உம்மைத்தொகை எனப்படும்.

**இரவு பகலா** வேலை பார்த்தான் - உம்மைத்தொகை

இங்கு **இரவும் பகலும்** என்பது இடையிலுள்ள 'உம்', கடையிலுள்ள 'உம்' ஆகியவை கெட்டு **இரவு பகல்'** என்றாகிறது. இவ்வாறு அமைவதே உம்மைத்தொகை.

உம்மைத் தொகை

| | | | |
|---|---|---|---|
| வெற்றிலை | உம் | பாக்கு | உம் |
| | வெற்றிலை பாக்கு | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நடை | உம் | உடை | உம் | பாவனை | உம் |
| | | நடை உடை பாவனை | | | |

சேர சோழ பாண்டியர்
அப்பா அம்மா
ஆட்டம் பாட்டம்
இன்ப துன்பம்
காய் கறி } - உம்மைத்தொகை

6. அன்மொழித்தொகை

வேற்றுமைத்தொகை முதலிய ஐந்து தொகைநிலைத் தொடர்களும் தத்தம் பொருள்பட நின்று, மேலும் புறத்தே சென்று பொருள்படும்படி தொக்குவருவது (மறைந்து வருவது) அன்மொழித்தொகை ஆகும். (தொகுதல் — தொகை, தொகுதல் என்றால் உள்ளே மறைந்து நிற்றல்)

எ-டு: செஞ்சட்டை (வந்தான்)

இது 'செம்மையான (சிவந்த) சட்டையை அணிந்தவன்' எனப்பொருள்பட்டு, பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகிறது.

அன்மொழித்தொகையின் வகைகள்

1. வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை — தண்ணி வண்டி வருகிறான்.
2. வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை — மாறுகண் வருகிறாள்.
3. பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை — பசும்பொன் மாவட்டம் (ஊர்ப்பெயர்)
4. உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை — தேன்மொழி வந்தாள்.
5. உம்மைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை — உயிர்மெய் ஆகும்.

நினைவுபடுத்திக்கொள்க

1. வேற்றுமை உருபுகளில் ஒன்று தொக்கு நிற்பது வேற்றுமைத் தொகை
2. உருபோடு வரும் தொடர் தொகாநிலைத்தொடர்
3. உருபில்லாமல் வரும் தொடர் தொகைநிலைத் தொடர்
4. வினைத்தொகையின் அமைப்பில் வினையடியோடு பெயர் வரும்
5. உவமை உருபு மறைந்து வரும் தொடர் உவமைத் தொகை
6. 'உம்' உருபு மறைந்து வரும் தொடர் உம்மைத் தொகை

**தன்மதிப்பீடு: 4 வினாக்கள்:**

1. **வினைத்தொகை என்றால் என்ன?**
2. **பண்புத்தொகைக்குப் பாடப்பகுதியில் இல்லாத ஓர் உதாரணம் தருக.**
3. **உவமைத்தொகையில் உவமை உருபு வெளிப்படையாக வருமா? மறைந்து வருமா?**
4. **உம்மைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக்கு ஓர் எடுத்துக்காட்டுத் தருக.**
5. **தொகைகள் எத்தனை வகைப்படும்?**
6. **தொகைகளின் பெயர்களைக் கூறுக.**
7. **அன்மொழித்தொகை பிற தொகைகளிலிருந்து எங்ஙனம் வேறுபடுகிறது?**

பயிற்சி

1. **சேர சோழ பாண்டியர் தங்குமிடம் அமைத்தனர்.**
   **அ. இவ்வாக்கியத்தில் எத்தனை தொகைகள் உள்ளன?**
   **ஆ. அவை என்னென்ன?**
   **இ. ஒவ்வொன்றையும் தனித்தனியே விரித்துக் காட்டுக.**
2. **கீழே உள்ள சொற்களில் என்னென்ன தொகைகள் உண்டு என்று எடுத்தெழுதுக.**

| | |
|---|---|
| **குடிதண்ணீர்** | **பேய்பிசாசு** |
| **கரும்பலகை** | **ஆயிழை (கேட்டாள்)** |
| **தேங்காய்த்தலை** | **விடிகாலை** |
| **தொலைக்காட்சி** | **நம்நாடு** |
| **தேங்காய் பழம்** | **சுடுமணல்** |
| **செங்கண்** | **கொடி இடை (வந்தாள்)** |

| | |
|---|---|
| வேற்றுமைத் தொகை | |
| வினைத் தொகை | |
| பண்புத் தொகை | |
| உவமைத் தொகை | |
| உம்மைத் தொகை | |
| அன்மொழித் தொகை | |

## 4.7. தொகாநிலைத் தொடர்

முருகன் ஓடினான்
புலி பாய்ந்தது

இங்கு முதல் தொடரில் 'முருகன்' என்னும் பெயர்ச்சொல்லைத் தொடர்ந்து 'ஓடினான்' என்னும் வினைமுற்று வந்துள்ளது. அது போல இரண்டாம் தொடரில் 'புலி' என்னும் பெயர்ச்சொல்லைத் தொடர்ந்து 'பாய்ந்தது' என்னும் வினை முற்று வந்துள்ளது. இச்சொற்கள் ஒரு தொடரில் எவ்வாறு தொடர்கின்றன? 'முருகன்' என்னும் சொல்லும் 'ஓடினான்' என்னும் சொல்லும் தொடர்ந்து நிற்கின்றன. இரப்பினும் நடுவில் வேறு சொல் எதுவும் மறைந்து நிற்கவில்லை. அவ்வாறே 'புலி' என்னும் சொல்லும் 'பாய்ந்தது' என்னும் சொல்லும் வருகின்றன. ஆனால் இங்கும் இடையில் வேறு சொல் மறைந்து நிற்கவில்லை.

இவ்வாறு ஒரு தொடர்மொழியில் இரண்டு சொற்கள் நின்று, இடையில் எந்தவிதச் சொல்லும் மறைந்து வராதிருக்குமானால் அத்தொடரினைத் 'தொகா நிலைத்தொடர்' என்பர். அஃதாவது எச்சொல்லையும் விரிக்க வேண்டிய அவசியமில்லை; மறைந்து நிற்பதென்றும் எதுவும் இடையில் இல்லை.

தொகைநிலைத் தொடர்களில் வேற்றுமை உருபு முதலியன தொக்கு (மறைந்து) வரும். இவ்வாறு தொக்கு வருவதைத்தான் 'தொகைநிலைத் தொடர்' என்று அழைப்பர். ஆனால் தொகாநிலைத்தொடரில் இரண்டு சொற்களின் நடுவில் வேறு சொல் மறைந்து நிற்காது என்பது தெளிவு.

1. எழுவாய்த்தொடர்

அரசன் தூங்கினான்

இத்தொடரில் இரண்டு சொற்கள் உள்ளன அல்லவா? இவ்விரு சொற்களுக்கும் இடையில் சொல் எதுவும் மறைந்துள்ளதா? இல்லை. எவ்வாறு சொற்கள் தொடர்ந்து நிற்கின்றன ? எழுவாயும் பயனிலையுமாய் நின்று தொடர்மொழியாய் அமைந்துள்ளன.

இவ்வாறு எழுவாய் முதலில் அமைந்து, அதைத்தொடர்ந்து பயனிலையும் நின்று இடையில் சொல் எதுவும் மறையாது வருமாயின் அதனை 'எழுவாய்த்தொடர்' எனக்கூறலாம்.

2. விளித்தொடர்

வேலா, பார்

'வேலா' என்பது விளி (விளி என்பது அழைப்பது). இத்தொடரின் இடையில் சொல் எதுவும் மறைந்து நிற்கவில்லை. ஆகவே, இதனை விளித்தொடர் என்கிறோம்.

மேலே காட்டிய இரண்டும் வேற்றுமைகளாயினும் உருபின்மையால் தொகாநிலைத் தொடர்களாகவே வரும்.

**3. வினைமுற்றுத்தொடர்**

சிரித்தாள் சீதை

இத்தொடரில் 'சிரித்தாள்' என்னும் வினைமுற்று முதலில் நின்று, 'சீதை' என்னும் எழுவாய் தொடர்ந்து வந்து பொருள் தருகிறது. இவ்வாறு வருவதை 'வினைமுற்றுத்தொடர்' என்பர்.

**4. பெயரெச்சத்தொடர்**

கொடுக்கும் கடவுள்

இங்கு 'கொடுக்கும்' என்னும் பெயரெச்சம் 'கடவுள்' என்னும் பெயரைக் கொண்டு முடிகிறது. இவ்வாறு வருவதைப் 'பெயரெச்சத்தொடர்' என்று அழைப்பர்.

**5. வினையெச்சத்தொடர்**

தங்கிப் போகிறேன்

'தங்கி' என்னும் வினையெச்சம் 'போகிறேன்' என்னும் வினைமுற்றோடு முடிகிறது. இவ்வாறு அமையும் தொடரை 'வினையெச்சத்தொடர்' என்று கூறுவர்.

**6. இடைச்சொல் தொடர்**

மற்றொன்று

'மற்று' என்னும் இடைச்சொல் 'ஒன்று' என்னும் எண்ணுப்பெயரோடு முடிகிறது. இவ்வாறு அமையும் தொடரை 'இடைச்சொல் தொடர்' என்று அழைப்பர்.

**7. உரிச்சொல் தொடர்**

நனிபேதை

'நனி' என்பது உரிச்சொல். இது பேதை என்னும் பெயரைத் தொடர்ந்து வருகிறது. எனவே, இதனை 'உரிச்சொல் தொடர்' என வழங்குகிறோம்.

**8. அடுக்குத்தொடர்**

தீ தீ

தீ என்னும் சொல் அடுக்கி வருவதால் இதனை 'அடுக்குத்தொடர்' என்று உரைப்பர்.

**9. வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்**

தேங்காயை உடைத்தேன்

இங்கு 'ஐ' என்னும் வேற்றுமை உருபு வெளிப்படையாக நின்று பொருள் தருவதால் இதனை 'வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்' என்பர்.

இவ்வாறு தொகாநிலைத்தொடர் (1) எழுவாய்த் தொடர், (2) விளித்தொடர், (3) வினைமுற்றுத் தொடர், (4) பெயரெச்சத் தொடர், (5) வினையெச்சத் தொடர், (6) இடைச்சொல் தொடர், (7) உரிச்சொல் தொடர், (8) அடுக்குத்தொடர், (9) வேற்றுமைத் தொகாநிலைத்தொடர் என ஒன்பது வகைகள் உண்டு என்பதைப் பார்த்தோம்.

தமிழில் இவ்வாறு சொற்கள் தொடர்ந்து நிற்பனவற்றைத் தொடர்கள் என்கிறோம். இவற்றுள் வாக்கியமாக அமைவனவும் உள. பிற தொடர்ந்து இணைந்து வாக்கியம் உருவாகும்.

*நினைவுபடுத்திக் கொள்க.*

1. எழுவாய் முதலிலும் பயனிலை இரண்டாவதும் நின்று, இடையில் சொற்கள் எதுவும் மறையாமல் வருமாயின், அது 'எழுவாய்த் தொடர்'.
2. வினைமுற்று முதலிலும் எழுவாய் இரண்டாவதும் நின்று, இடையில் சொற்கள் எதுவும் மறையாமல் வருவது 'வினைமுற்றுத் தொடர்'
3. பெயரெச்சம் பெயரைக் கொண்டு முடிவது 'பெயரெச்சத்தொடர்',
4. வினையெச்சம் வினைமுற்றோடு முடிவது 'வினையெச்சத்தொடர்'.
5. இடைச்சொல்லோடு வேறொரு சொல் சேருவது 'இடைச்சொல் தொடர்'.
6. உரிச்சொல்லோடு பெயர் தொடர்வது 'உரிச்சொல் தொடர்'.

**தன்மதிப்பீடு: 5**

**வினாக்கள்**

அ. எழுவாய்த் தொடர் என்றால் என்ன?
ஆ. விளித்தொடரை உதாரணங்கள் காட்டி விளக்குக.
இ. பெயரெச்சத் தொடர் என்பது பற்றி விவரிக்க.
ஈ. உரிச்சொல்தொடர் என்றால் என்ன?
உ. அடுக்குத்தொடர் எவ்வாறு அமையும்?
ஊ. வேற்றுமைத்தொடரை உதாரணம் காட்டி விளக்குக.

**பயிற்சி**

கீழே கட்டத்திற்குள் கொடுக்கப்பட்டுள்ள உதாரணங்களின் தொடர்ப்பெயர்களை எழுதுக:

| | |
|---|---|
| | 1. பார்த்தாள் சீதை<br>2. நண்பா பேசு<br>3. நான் படித்தேன்<br>4. கடிமணம்<br>5. பழத்தைத் தின்றான் |

## 4.8 வாக்கியம்: வகைகள்

கண்ணன் வந்தான்

மேலே காட்டிய எடுத்துக்காட்டில் '**கண்ணன்**' என்ற எழுவாயும் '**வந்தான்**' என்ற பயனிலையும் சேர்ந்து ஒரு முழுமையான பொருளைத் தருகின்றன. ஆதலால் இது **வாக்கியம்** எனப்படுகிறது.

ஒரு வாக்கியத்தில் எழுவாயும் பயனிலையும் இன்றியமையாத உறுப்புகள். ஒரு சில வாக்கியங்களுக்குச் செயப்படுபொருளின் இன்றியமையாமையும் உண்டு.

1. அவன் ஓடினான்
2. அவன் பாடினான்

முதல் வாக்கியத்தில் 'ஓடினான்' என்ற வினைமுற்றுக்குச் செயப்படுபொருளாக எந்தத் தொடரும் அமையாது என்பதை முன்பகுதியில் கண்டோம். ஆனால் 'பாடினான்' போன்ற வினை முற்றோடு செயப்படுபொருள் சேர்ந்து வரும். இவ்வாறு அமைகின்ற வாக்கியம் மூன்று வகைப்படும்.

அவை:
1. தனி வாக்கியம் (Simple sentence)
2. தொடர்வாக்கியம் (Compound sentence)
3. கலப்பு வாக்கியம் (Complex sentence)

வாக்கியம்

தனிவாக்கியம் | தொடர்வாக்கியம் | கலப்பு வாக்கியம்

**1. தனி வாக்கியம்**

1. கண்ணன் தூங்குகிறான்
2. பூனை எலியைத் தின்றது.

முதல் வாக்கியத்தில் **'கண்ணன்'** என்பது **எழுவாய்.** **'தூங்குகிறான்'** என்பது **பயனிலை.**

இரண்டாவது வாக்கியத்தில் **'பூனை'** என்பது **எழுவாய்.** **'தின்றது'** என்பது **பயனிலை.** **'எலி'** என்பது செயப்படு பொருள்.

இவ்வாறு எழுவாய் ஒன்றும் பயனிலை ஒன்றும் அமைந்து செயப்படுபொருள் வந்தோ வராமலோ அமைகின்ற வாக்கியம் **தனிவாக்கியம்** எனப்படும்.

சில வாக்கியங்களில் எழுவாய் மறைந்து நின்று வாக்கியம் அமைவதும் உண்டு. எ-டு: தண்ணீரைக் குடி

| எழுவாய் (செயப்படுபொருள்) பயனிலை | தனி வாக்கியம் |
|---|---|

**2. தொடர் வாக்கியம்**

1. இராமு நன்றாகப் படித்தான்; அதனால் வெற்றி பெற்றான்.
2. திருடன் பூட்டை உடைத்தான்; வீட்டிற்குள் நுழைந்தான்; பொருள்களைத் திருடிக் கொண்டிருந்தான்; அப்போது பிடிபட்டான்.

முதல் வாக்கியத்தில் **'இராமு'** என்ற ஒரே எழுவாய் 'படித்தான்' 'வெற்றி' பெற்றான்' என்ற இரண்டு பயனிலைகளுக்கும் பொதுவாய் உள்ளதைக் காணலாம்.

அவ்வாறே இரண்டாவது வாக்கியத்தில் **'திருடன்'** என்ற ஒரே எழுவாய் **'உடைத்தான்'**, **'நுழைந்தான்'**, **'திருடிக்கொண்டிருந்தான்'**, **'பிடிபட்டான்'** என்ற நான்கு பயனிலைகளுக்கும் பொதுவாக அமைந்திருப்பதைக் காண்கிறோம்.

**இவ்வாறு ஒரு வாக்கியம் ஓர் எழுவாயும் ஒன்றுக்கு மேற்பட்ட பயனிலைகளையும் கொண்டு, தொடர்புடைய ஒரே கருத்தை விளக்குவது 'தொடர் வாக்கியம்' ஆகும்.**

3. கலவை வாக்கியம்

1. ''தினமும் காலையில் எழுந்து படி'' என்று என்னுடைய அப்பா கூறுவார்.
2. ஆசிரியர், ''வீட்டுக்கணக்குப் போட்டுக் கொண்டு வரும்படி'' சொன்னார்.

முதல் வாக்கியத்தில் ''என்னுடைய அப்பா கூறுவார்'' என்பது **முதன்மை வாக்கியம்;** ''தினமும் காலையில் எழுந்துபடி'' என்பது **சார்பு வாக்கியம்;** **'என்று'** என்பது இவ்விரு வாக்கியத்தையும் இணைக்கும் சொல்.

இரண்டாவது வாக்கியத்தில் 'ஆசிரியர் சொன்னார்' என்பது **முதன்மை வாக்கியம்.** இது ''வீட்டுக்கணக்குப் போட்டுவரும்படி'' என்ற **சார்பு வாக்கியத்தால்** பிரிக்கப்பட்டு ''ஆசிரியர்.............. சொன்னார்'' என்று இருக்கிறது.

**இவ்வாறு முதன்மை வாக்கியம் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட சார்பு வாக்கியங்களுடன் கலந்து வருவது கலவை வாக்கியம் ஆகும்.**

இம்மூவகை வாக்கியங்கள் தவிர,

1. உடன்பாட்டு வாக்கியம்
2. எதிர்மறை வாக்கியம்
3. வினா வாக்கியம்
4. கட்டளை வாக்கியம்
5. செய்வினை வாக்கியம்
6. செயப்பாட்டு வினை வாக்கியம்

போன்ற வாக்கியங்களும் உள்ளன.

### செய்வினை வாக்கியம்

கரிகாலன் கல்லணையைக் கட்டினான்

'கட்டினான்' என்பது 'கரிகாலன்' என்ற எழுவாய் செய்த செயல் (பயனிலை) ஆகும்.

இவ்வாறு எழுவாய் செய்த வினையைப் பயனிலையாகக் கொண்டு முடியும் வாக்கியம் 'செய்வினை வாக்கியம்' எனப்படும்.

### செயப்பாட்டு வினை வாக்கியம்

கல்லணை கரிகாலனால் கட்டப்பட்டது

செய்வினை வாக்கியத்தில் **செயப்படுபொருளாக** இருந்த **'கல்லணை'** இங்கு **எழுவாயாக** உள்ளது. 'கரிகாலன்' என்பது 'ஆல்' உருபு சேர்ந்து கருத்தாவாக மாறியுள்ளது. பயனில்லையில் உள்ள வினைப்பகுதி 'படு' என்னும் துணைவினை பெற்று, எழுவாய்க்குத் தகுந்தாற்போல் விகுதிபெற்று அமைகிறது.

செயப்படுபொருளின் தொழிலை உணர்த்தும் வினையைப் பயனிலையாக்கிக் கொண்டு முடியும் வாக்கியம் **செயப்பாட்டு வினை வாக்கியம்** ஆகும்.

செய்வினை வாக்கியமும் செயப்பாட்டு வினை வாக்கியமும் ஒரே பொருள்தான் உணர்த்தும்; ஆனால் அமைப்பில் மட்டும் மாற்றம் உண்டு.

| | | | | |
|---|---|---|---|---|
| செய்வினை | எழுவாய் | செயப்படுபொருள் ஐ | | பயனிலை |
| செயப்பாட்டுவினை | எழுவாய் | கருத்தா | ஆல் | பய... னிலை<br>படு |

செயப்பாட்டுவினை வாக்கியத்திற்கு முக்கியமாகச் செயப்படுபொருள்வேண்டும்.

### உடன்பாட்டு வாக்கியம்

பால்காரரர் வந்தார்

இங்கு 'வந்தார்' என்பது வினைமுற்று. இது 'வருதல்' என்னும் தொழில் நிகழ்ச்சியைத் தெரிவிக்கிறது. இவ்வாறு தொழில் நிகழ்ந்தமையை அறிவிக்கும் வாக்கியம் **உடன்பாட்டு வாக்கியம்** ஆகும்.

**எதிர்மறை வாக்கியம்**

பால்காரர் வரவில்லை

இவ்வாக்கியத்தில் 'வரவில்லை' என்பது வினைச்சொல். இது 'வருதல்' என்னும் தொழில் நிகழவில்லை என்பதை உணர்த்துகிறது. இவ்வாறு தொழில் நிகழாமையை உணர்த்துகின்ற வாக்கியம் **'எதிர்மறை வாக்கியம்'**.

உடன்பாட்டு வாக்கியம் - தொழில் நிகழ்ச்சி
எதிர்மறை வாக்கியம் - தொழில் நிகழாமை

**வினா வாக்கியம்**

பால்காரர் வந்தாரா? வந்தார் -ஆ

இவ்வாறு, 'வந்தார்' என்ற பயனிலையோடு, 'ஆ' என்னும் வினா உருபு சேர்வதால், இவ்வாக்கியம் வினாவாக்கியமாக மாறுகிறது.

யார் வந்தார்?

இங்கு 'பால்காரர்' என்பதற்குப் பதிலாக 'யார்' என்னும் வினாச்சொல்லை வைத்து **வினா வாக்கியம்** அமைக்கலாம்.

**கட்டளை வாக்கியம்**

தப்பில்லாமல் எழுது

இவ்வாக்கியம் முன் உள்ள ஒருவனைப் பார்த்துக் கட்டளை இட்டுக் கூறப்படுகிறது. இவ்வாறு ஒரு செயலைச் செய்ய, ஒருவனைப் பார்த்துக் கட்டளையிட்டுக் கூறப்படும் வாக்கியம் **கட்டளை வாக்கியம்** என்று சொல்லப்படும்.

**நினைவுபடுத்திக்கொள்ளுங்கள்**

1. ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் சேர்ந்து ஒரு முழுமையான கருத்தைக் கூறுவது - வாக்கியம்.
2. வாக்கியத்தில் இன்றியமையாத உறுப்புகள் - எழுவாய், பயனிலை.
3. வாக்கியத்தில் எழுவாய் மறைந்து வருவது - தோன்றா எழுவாய்
4. தொடர்புடைய ஒரு கருத்தை விளக்கி எழுவாய் ஒன்றும் பயனிலை ஒன்றுக்கு மேற்பட்டும் அமைகின்ற வாக்கியம் - தொடர் வாக்கியம்
5. கலவை வாக்கியத்துள் - முதன்மை, சார்பு வாக்கியம் என இரண்டு வாக்கியம் அடங்கியிருக்கும்.
6. செயப்பாட்டு வினை வாக்கியத்தில் பயனிலையில் 'படு' என்ற துணைவினை சேர்க்கப்படும்; செய்வினையில் உள்ள செயப்படுபொருள் எழுவாயாக மாறும்; எழுவாயுடன் 'ஆல்' சேர்த்துக் கூறப்படும்.
7. கேள்வியாகக் கேட்கப்படும் வாக்கியம் வினா வாக்கியம்.
8. தொழில் நிகழ்ச்சி — உடன் பாட்டு வாக்கியத்திற்கு
   தொழில் நிகழாமை — எதிர் மறை வாக்கியத்திற்கு

**தன் மதிப்பீடு: 6**

**பயிற்சி**

அ. நீ எதற்குப் போனாய்?
ஆ. அவள் அவளைப் பார்க்க முடியாது.
இ. கட்டில் தச்சனால் செய்யப்பட்டது.
ஈ. நாய் பார்த்தது; கடித்து விட்டது.
உ. நீ தொலைக்காட்சி பார்.

மேலே உள்ள வாக்கியங்கள் என்னென்ன என்று கண்டிபிடித்து அவற்றின் பெயர்களை எழுதுக.

அ.
ஆ.
இ.
ஈ
உ.

## 4.9 பாடத்தொகுப்புரை

எழுவாய் பயனிலை செயப்படுபொருள் ஆகிய மூன்றும் பற்றி நன்றாக விளங்கிக் கொண்டோம். இவற்றிடையே திணை, பால், எண், இட அடிப்படையில் இயைபு முக்கியம். தமிழில் வரவர ஒருமை பன்மை இயைபு குழம்புகிறது. 'பறவைகள் பறக்கிறது', 'மாடுகள் மேய்கிறது' என்று அஃறிணையில் பன்மையை ஒருமையாகவே கருதி எழுதும் பழக்கம் இருக்கிறது. 'கம்பர் தம் நூலைச் சிறப்பாக எழுதியுள்ளார்' என்று எழுதாமல், 'கம்பர் தன் நூலை எழுதினார்' என்றே எழுதி விடுகின்ற பழக்கம் உளது. இவை கற்றறிந்தவர்களிடையேயும் காணப்படுகின்றன.

எழுவாய், பயனிலை காண்பது முக்கியம். 'மரங்களை வெட்டிச் சாய்க்கக் கூடாது' என்பதில் எது எழுவாய்? முன்பு காட்டியபடி 'எது கூடாது?' என்று கேட்டால் 'சாய்க்க' என்று பதில் வரும். இதில் 'சாய்த்தல்' என்ற தொழிற்பெயரே - எச்சமாகி நின்று எழுவாயாகப் பயன்படுகிறது. இத்தகைய நுட்பமான வேறுபாடுகளையும் அறியும் வண்ணம் முன்னர்க் கருத்துக்கள் விரித்துரைக்கப்பட்டுள்ளன. இக்கால உரை நடை வளர்ச்சிக்கேற்ற, வாக்கிய அமைப்பு மாற்றங்களையும் தெரிந்து கொண்டீர்கள்.

## 4.10 தொடர்ந்து படித்தற்குரிய நூல்கள்


1. நன்னூல் காண்டிகையுரை, சொல்லதிகாரம் படித்தற்குரியதாகும்.
2. பரந்தாமனார் அ.கி., 'நல்ல தமிழ் எழுத வேண்டுமா?', பாரிநிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை-600 108.
3. சண்முகதாஸ். அ., தமிழ்மொழி இலக்கண இயல்புகள், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், யாழ்ப்பாணம், இலங்கை.


**தன் மதிப்பீடு: விடைகள்**

1. வினாக்கள்: அ. விகுதி 'ஓம்' ஆகும். ஆ. மாடு அஃறிணை, வந்தார் உயர்திணை, திணை இயைபு இல்லை. இ. அவர் வந்தார்

பயிற்சி: அ. ஓடின ஆ. விழுந்து விட்டாள் இ. நான்
ஈ. படிக்கிறோம் உ. அவன் ஊ. வண்டி

2. வினாக்கள்: அ. எச்சங்கள் இரண்டு வகைப்படும்: பெயரெச்சம், வினையெச்சம்
ஆ. வினைமுற்றின் விகுதி கெட்டு, வினை நிகழ்ச்சி முற்றுப் பெறாமல் நிற்பது எச்சம் எனப்படும்.
இ. பெயரெச்ச விகுதி 'அ'
ஈ. அழாமல் - எதிர்மறை வினையெச்சம்
அழாத - எதிர்மறைப் பெயரெச்சம்

பயிற்சி: அ. அழுகின - பெயரெச்சம், பழம் கொண்டு முடியும் சொல்
வாங்கி - வினையெச்சம், வந்தாள் கொண்டு முடியும் சொல்
ஆ. சிரித்து - வினையெச்சம், சிரித்து கொண்டு முடியும் சொல்
சிரித்து - வினையெச்சம், வலித்தது கொண்டு முடியும் சொல்
இ. உதவா(த) - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், பேச்சு கொண்டு முடியும் சொல்

3. அ. பாடம் படித்தேன்: (பாடத்தைப் படித்தேன்)-வேற்றுமை உருபு மறைந்திருப்பது வேற்றுமைத்தொகை
ஆ. கல்லால் எறிந்தான்: உருபு விரிந்து நிற்பதால் இது வேற்றுமைத் தொகா நிலைத்தொடர்.
இ. தீ தீ : அடுக்குத்தொடர் முருகன் வந்தான்: எழுவாய்த்தொடர் — இவை அல்வழித் தொடர்கள்

4. வினாக்கள்:

1. காலங்காட்டும் இடைநிலை மறைந்து நின்று, பெயருடன் முடிவது வினைத்தொகை. 2. செங்குருதி 3. உவமை உருபு மறைந்து வருவது உவமைத்தொகை 4. காய்கறி சாப்பிடு (காயும் கறியுமாகிய உணவைச் சாப்பிடு) உம்மைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. 5. தொகைகள் ஆறு வகைப்படும். 6. வேற்றுமைத் தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித் தொகை 7. பிற ஐந்து தொகைகளின் அடிப்படையில், அவற்றுக்கு மேலும் ஒரு கருத்துத் தொக்கு வருவது அன்மொழித்தொகையாகும்.

பயிற்சி:

1. அ. இரண்டு தொகைகள். ஆ. உம்மைத்தொகை, வினைத்தொகை, இ. சேரரும் சோழரும் பாண்டியரும், தங்குகிற இடம்.

ஆ.

| | |
|---|---|
| குடிதண்ணீர்<br>சுடுமணல்<br>விடிகாலை | வினைத்தொகை |
| கரும்பலகை<br>செங்கண் | பண்புத்தொகை |
| தேங்காயத்தலை - | உவமைத்தொகை |
| தேங்காய் பழம் -<br>பேய் பிசாசு | உம்மைத்தொகை |
| தொலைக்காட்சி -<br>நம்நாடு | வேற்றுமைத்தொகை |
| கொடி இடை (வந்தாள்) -<br>ஆயிழை (கேட்டாள்) | அன்மொழித்தொகை |

வினாக்கள்:

5. எழுவாய் முதலில் நின்று பயனிலையுடன் ம்டிவது எழுவாய்த் தொடர் ஆகும். ஆ. முருகா வா, நண்பனே கேள் - இங்ஙனம் விளித்துப் பயனிலையுடன் முடிவன விளித்தொடர்களாகும். இ. எச்சம் பெயரைக் கொண்டு

முடிவது பெயரெச்சத் தொடர் (வந்த பையன்) ஈ. நனிபேதை — இங்ஙனம் உரிச்சொல்லுடன் தொடர்ந்து நிற்பன உரிச்சொல் தொடர்கள் எனப்படும். உ. தீ.தீ. பாம்பு பாம்பு வருக வருக - இவ்வாறு அடுக்கி வரும். ஊ. முருகனைப் பார்த்தேன் - வேற்றுமையுருபுடன் கூடிய பெயருடன் பயனிலை தொடர்ந்து வருவது வேற்றுமைத் தொடர் எனப்படும்.

**6. பயிற்சி:**

1. வினைமுற்றுத்தொடர், 2. விளித்தொடர், 3. எழுவாய்த் தொடர், 4. உரிச்சொல்தொடர், 5. வேற்றுமைத்தொடர்

6. அ. வினா வாக்கியம்
ஆ. எதிர்மறை வாக்கியம்
இ. செயப்பாட்டு வினை வாக்கியம்
ஈ. செய்வினை வாக்கியம்
உ. கட்டளை வாக்கியம்

## பாடப்பகுதி (Unit) 5 — மொழிநடைக் கூறுகள்

**படிப்பு நோக்கம்**

★ இப்பாடப்பகுதியில் மொழியை நாம் பேசவும் எழுதவும் பயன்படுத்தும்போது கடைப்பிடிக்க வேண்டிய செப்பங்கள், அழகுகள் முதலியவற்றைப்பற்றித் தெரிந்து கொள்ளப் போகிறோம்.

★ பிழைகளைத் தவிர்த்துத் திருத்தமாகப் பேசவேண்டும்; எழுதவேண்டும்; சொல்லைப் பொருள் தெரிந்து ஆளவேண்டும் — இவை இங்கு தெளிவுபடுத்தப்படவுள்ளன.

★ பேச்சுமொழியில் அழகான, பொருத்தமான நல்ல சொற்களைப் பெய்து பேசவேண்டும்; எழுதும்போதும் அப்படித்தான். இவைமட்டுமன்றி, எழுதும்போது கவனிக்க வேண்டிய நிறுத்தக் குறிகள், எழுதும்முறை முதலியன பற்றியும் நாம் தெரிந்திருக்க வேண்டும். இங்கு அவை வரிசையாகத் தரப்படுகின்றன.

**பாடக் கருத்தலகுகள்**

## 5.0 பாட முன்னுரை

ஒரு மொழியின் எழுத்து, சொல், வாக்கியம், அவை புணர்ந்து அல்லது இணைந்து நிற்றல் போன்ற அடிப்படைகள் முக்கியமானவை. அவற்றைப் பற்றி இதுவரை நீங்கள் தெரிந்து கொண்டு, அவற்றை எடுத்தாளும் ஆற்றலைப் பெற்றுள்ளீர்கள். இப்போது நல்ல மொழி நடையை ஆள்வது எவ்வாறு? ஒருவர் சிறந்த முறையில் எழுதப் பயன்படும் நடைக்கூறுகள் யாவை? இவற்றையும் பார்த்து, நீங்களே வாக்கியங்களில் வைத்து எழுதிப் பழகிக்கொள்ளுங்கள். சிறந்த எழுத்தாளராக, பேச்சாளராக இவை உதவும்.

## 5.1 மரபுத்தொடர்கள், இணைமொழிகள், பழமொழிகள் முதலியன

தமிழில் எத்தனையோ விதமான மரபுத் தொடர்கள் உள்ளன. இணைமொழிகள் எனப்படுபவை தமிழில் புதுமையானவை. பெரும்பாலும் நாம் ஒன்றை வற்புறுத்திக் கூற, காரணம் காட்டும் முறையில் வரும் பழமொழிகளைப் பயன்படுத்திக் கொள்கிறோம்.

### 5.1.1. மரபுத்தொடர்கள்

'அகராதி பிடித்தவன்/படித்தவன்' என்ற தொடரைக் கேள்விப்பட்டிருப்பீர்கள். இதற்கு என்ன பொருள்? எதையும் மிகவும் நுணுக்கமாகப் பார்ப்பவர் - என்ற பொருளில் இதைப் பயன்படுத்துகிறோம். சொற்கள் நேர்பொருள் தராமல் வேறு ஒரு குறிப்பான பொருளை இங்கு சுட்டுகின்றன. இதுபோலக் 'கம்பி நீட்டினான்', 'கயிறு திரிக்கிறான்' போன்ற தொடர்களினால் பெறும் பொருள் முற்றிலும் வேறானது. இத்தொடர்கள் தமிழ்ப் பண்பாட்டுப் பின்னணியில் ஊறியவர்களுக்குச் சூழலை வைத்துத் தெரியும்; சொன்னாலும் புரியும். இத்தகைய தொடர்களை நாம் சுருக்கம், எளிமை, பொருள் விரிவு - இவற்றுக்காகப் பேசுகிறோம். இதனைப்போல, நம் கருத்தை மிகச்சுலபமாக மற்றவர்கள் விரும்பிச் சுவைக்கும்படி பேசவும் எழுதவும் முடியும். இத்தகைய தொடர்கள், மரபாக - பரம்பரையாக வருகின்றன. சான்றாக, கீழே சில மரபுத்தொடர்களைப் பாருங்கள்.

| | | |
|---|---|---|
| அரங்கேற்றுதல் | - | நூல், நடனம் முதலியவற்றை அவையில் ஏற்கச்செய்தல் |
| ஆழம்பார்த்தல் | - | ஒருவனுடைய அறிவு முதலியவற்றை ஆராய்தல் |
| இருதலைக்கொள்ளி | - | இரண்டும் கெட்டான் நிலை |
| ஈ ஆடவில்லை | - | முகத்தில் மிகுந்த கவலை தோன்றக்காணப்படும் நிலை |
| உடைப்பிற் போடுதல் | - | தூக்கி எறிதல், களைந்து விடுதல் |
| குடிமுழுகிப்போதல் | - | முற்றும் அழிதல் |
| குட்டிச்சுவர் | - | பழுது, பாழ் |
| பல்லைக்காட்டுதல் | - | கெஞ்சுதல் |
| விரல் விட்டு எண்ணக்கூடிய | - | சிறுபான்மை, அருகிய |

மேலும் பல தொடர்களைக் கீழேகண்ட நூலில் பார்க்கலாம்.

1. **மரபுத்தொடர் அகரவரிசை**, சைவ சித்தாந்த நூற்பதுபபுக கழகம், 1980. (இந்நூல் தமிழ்ப்பாதுகாப்பு நூற்றிரட்டு, தமிழ்ப் பாதுகாப்புக்கழகம், 1980 என்ற தொகுப்பு நூலிலும் உள்ளது).
2. **லிப்கோ தமிழ்-தமிழ் அகராதி**, லிப்கோ வெளியீடு, சென்னை, 1978.
3. **தமிழ் பயிற்றும் முறை**, டாக்டர் ந. சுப்புரெட்டியார், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1980.
4. நல்ல **தமிழ் எழுத வேண்டுமா?** அ.கி. பரந்தாமனார், பாரி நிலையம், சென்னை.
5. இன்னும் டாக்டர் தி. முத்துக்கண்ணப்பர் எழுதிய **தமிழில் தவறுகளைத் தவிர்ப்போம்** நூலையும் பார்க்கலாம், பாரிநிலையம், சென்னை.

உங்கள் பாடங்களில் வந்துள்ள மரபுத்தொடர்களைத் தொகுக்கவும். உங்களுக்குத் தெரிந்த மரபுத்தொடர்களையும் தொகுத்து எழுதி வைய்யுங்கள்.

### 5.1.2 இணைமொழிகள்

மரபுத்தொடர்களைப் போன்றவைதான் இணைமொழிகள். எடுத்துக்காட்டுகளைப் பாருங்கள்.

எதுகை மோனை - உருண்டு திரண்டு
அமளிதுமளி
அல்லும்பகலும்
சட்டதிட்டம்
வெட்ட வெளிச்சம்
கோணல் மாணல்
பிள்ளை குட்டி

பேச்சு மொழியிலும் எழுத்து மொழியிலும் இவற்றை நாம் பயன்படுத்துகிறோம்.

சில வேளைப் பேச்சில் பேச்சு கீச்சு, ஓடிக்கீடி என்று எதிரொலிச் சொற்களைப் பயன்படுத்துகிறோம். ஆனால், எழுதும்போது இதைத் தவிர்த்து விடுகிறோம்.

இத்தகைய சொற்களையும் மேலே கண்ட அகரவரிசை முதலிய நூல்களில் பார்க்கலாம்.

### 5.1.3 அடைமொழிகள், உவமைகள், பழமொழிகள்

**அடைமொழிகள்**

| | |
|---|---|
| **செஞ்ஞாயிறு** | **செந்தாமரை** |
| **வெண்திங்கள்** | **வெண்பட்டு** |

**முதல் தொகுதியில் உள்ள சொற்கள் ஞாயிறு, திங்கள் இவற்றின் பண்பை விளக்குகின்றன. இரண்டாவது தொகுதியில் தாமரையின் ஒரு வகையையும், பட்டின் ஒருவகையையும் குறிக்கின்றன. இவ்வாறு அடைமொழிகளைக் கொடுத்துப் பேசுவது தமிழில் அடிக்கடி காணக்கூடியது. ஆனால், வேண்டாத இடத்தில் அடைகொடுத்துப் பேசும்போது சொற்களுக்குப் பொருள் உணர்த்தும் ஆற்றல் குறைந்து வெறும் ஒலிக்கூச்சலாக மாறிவிடும். எனவே, இவற்றைக் கவனமாகக் கையாள வேண்டும்.**

| | | |
|---|---|---|
| **மாபெரும்** | **மிகச்சிறந்தது** | **நீண்டநெடும்புருவம்** |
| **அரும்பெரும்** | **நனி சிறந்தது** | **உயர்ந்தோங்கியமரம்** |
| **தனிப்பெரும்** | **நனிமிகச்சிறந்தது** | |

**இங்கு 'பெரும்' என்பதற்கு மா, அரும், தனி முதலியன அடையாக வருகின்றன. அது போன்றே சிறந்தது என்பதற்கு அடையாளமாக 'மிக', 'நனி' ஆகியவை வருகின்றன. 'நீண்ட**

நெடும்', 'உயர்ந்தோங்கு' என்ற ஒரே பொருள் தரும் சொற்கள் அடுக்கி வந்து மிகுதியைக் காட்டுகின்றன. இவற்றை எல்லாம் பொருள் பொருத்தம் தெரிந்தே ஆள வேண்டும்.

உவமையைப் பயன்படுத்த ஓர் எடுத்துக்காட்டு

மடியில் பணம், வழியில் கள்ளர் பயம், அடிவயிற்றில் நெருப்பு கட்டிக்கொண்டது போன்றிருந்தது அவனுக்கு.

**பழமொழிகள்**

உவமைகளைப் போன்றவைதான் பழமொழிகளும். பல பழமொழிகள் உவமைகளாகவும் வழங்குகின்றன.

அகத்தின் அழகு முகத்தில் தெரியும்.
இக்கரைக்கு அக்கரை பச்சை.
மண்குதிரையை நம்பி ஆற்றில் இறங்கலாமா?
(இதை மண்குதிரையை நம்பி ஆற்றிலிறங்கின மாதிரி என உவமையாகவும் பேச்சில் பயன்படுத்துவர்)

**தன் மதிப்பீடு: 1 பயிற்சி**

1. கதை நூல்களைப் படித்து அவற்றில் வந்துள்ள உவமை, உருவகம் முதலியவற்றைத் திரட்டுக.
2. உங்களுக்குத் தெரிந்த உவமை, உருவகங்களை எழுதிக்காட்டுக.
3. வழக்கில் உள்ள பழமொழிகளைத் திரட்டுக. பத்து பழமொழிகளை எழுதி, அவை பயன்படும் விதத்தைக் கண்டறியுங்கள்.

பழமொழித் திரட்டுகளைக் கீழே கண்ட நூல்களில் பார்க்கலாம்.
1. லிப்கோ - தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி — பிற்சேர்க்கை
2. கழகப் பழமொழித்திரட்டு, கழக வெளியீடு.
3. தமிழ்நாட்டுப் பழமொழி அகரவரிசைச் சுருக்கம் (கழக வெளியீடு): தமிழ்ப்பாதுகாப்பு நூற்றிரட்டிலும் உள்ளது.

### 5.1.4 இரட்டைக்கிளவி

'கலகலவென, கடகடவென, சடசடவென' — இவற்றைப் பிரிக்க இயலாது. இஃது ஒலி முதலியவற்றைக் குறித்து வருவது.

அடுக்குத்தொடர்

வருக வருக, போபோ, தீத்தீ, வாழ்க வாழ்க வாழ்க! — இதைப் பரித்தாலும் பொருள் தரும். இரண்டுக்கு மேலும் அடுக்கி வரும்.

### 5.1.5 தகுதிவழக்குகள்

ஒன்றை அதற்குரிய சொல்லால் குறிப்பிடாமல் நாகரிகம் முதலியன கருதி மாற்றிச் சொல்வது தகுதிவழக்காகும். **மங்கலம், இடக்கரடக்கல், குழூஉக்குறி** என்பன குறிப்பிடற்பாலன.

செத்தவர்களைக் 'காலமானார்', 'சிவலோகப் பதவி அடைந்தார்', 'வைகுந்த பதவி அடைந்தார்' என்பன மங்கல வழக்கு.

'ஒன்றுக்குப்போதல்', கொல்லைக்குப் போதல்' என்பன இடக்கரடக்கல். 'தண்ணி போட்டிருக்கிறான்' என்பது குழூஉக்குறி. சிறையை மாமியார் வீடு என்பது பணத்தை வெள்ளையப்பன், வைட்டமின் ப என்பனவும் குழூஉக்குறிகளே.

இவை தகுதி வழக்குகளாகும். மொழியில் பயன்படும் இத்தகைய வழக்குகளைக் கவனியுங்கள்.

## 5.2 நடைவகை

நாம் ஒவ்வொருவரும், எவ்வாறு — கையை, காலை வீசி

நடப்பதை நடை என்கிறோமோ அதுபோல நாம் மொழியில் சொற்களைக் கையாண்டு அமைக்கும் வாக்கிய அமைப்பின் தன்மையை நடை என்கிறோம். நடை என்பது ஒவ்வொருவரின் இயல்புக்கு ஏற்ப மாறுபட்டிருக்கும். எனினும், நடையை

1. விளக்கநடை
2. வினாநடை
3. வருணனைநடை
4. அடுக்குமொழி நடை

என்றெல்லாம் வகைப்படுத்திக் காட்டலாம்.

**நல்ல நடை**

நல்ல நடையை நாம் எவ்வாறு எழுதப் பழகுவது? பொதுவாகச் சொன்னால் சில விதிகளை வகுத்து இதற்கு விளக்கம் காட்ட முடியாது. இருப்பினும் சில முறைகளை நாம் பின்பற்றலாம்.

முதலில், எளிய இனிய சொற்களைக் கையாண்டு சிறு வாக்கியங்களாக அமைத்துக் கொள்ளவும்; கூறுவதை முடிந்தவரை நேரடியாகக் கூற முயலவும்; நல்லநடை தானாக வந்துவிடும்.

எழுதப்புகுமுன் எழுதவேண்டிய கருத்தை நன்கு சிந்தித்து வரிசைப்படுத்திக் கொண்டு எழுத வேண்டும். நல்ல உரைநடை எழுத்தாளர்களின் நூல்களைத் திரும்பத் திரும்பப் படித்தால் நல்லநடை தானாக வரும். ஔவையார் சொல்வது போல் 'சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம், வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்' என்பதை மறவாதீர்கள். சிந்திப்பதைத் திரும்பத் திரும்ப எழுதி எழுதிப் பார்க்க வேண்டும். நாள்தோறும் நாட்குறிப்பு எழுதுவது ஒரு நல்லவிதமான பயிற்சியாகும்.

நீங்கள் நாட்குறிப்பு எழுதுவதுண்டா? இதுவரை எழுதும் பழக்கம் இல்லை என்றால் அதை இன்றே தொடங்குங்கள். நாள்தோறும் ஒரு பக்கமாவது எழுதுவது என்று வைத்துக் கொள்ளுங்கள். முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார் என்பது உங்களுக்குத் தெரிந்த செய்திதானே!

நடை என்பது, நாம் என்ன பொருள்பற்றி எழுதுகிறோமோ அதைப் பொறுத்து மாறுபடும். யாருக்கு எழுதுகிறோமோ — அதைப் பொறுத்தும் நடை மாறுபடும். இது உங்கள் நினைவில் நிற்க வேண்டிய ஒரு செய்தி ஆகும்.

### 5.2.1 விளக்கநடை

ஒரு கருத்தை விளக்கிக்கூறும் நடையை விளக்க நடை எனலாம். அறிவியல் கருத்துக்கள், மற்றும் எல்லாவிதமான அறிவுத்துறை நூல்களிலும் இந்நடையை நாம் பார்க்கலாம். பின்வரும் எடுத்துக்காட்டுகளைப் படித்துச்சிந்தித்துப் பாருங்கள்:

(எ-டு) 1

**நெல் கருவண்டு** (Rice hispa: Dicladispa armigera)

''இது பயிருக்குக் 'கொக்கு நோய்' உண்டாக்குகிறது. இந்த வண்டுகள் தோகையின் பச்சைச் சத்தை அரித்து உண்பதினால் தோகைகளில் வெண்கோடுகள் காணப்படும். இப்பூச்சியின் 'கிரப்' புழுக்கள் தோகைகளைச் சுரண்டி உண்பதின் மூலம் தோகைகள் பசுமையற்ற பழுப்பு நிறமாகி, வாடிச் சருகாகிவிடும். பி.எச்.சி.10 சதத் தூள் தூவி இதை அழிக்கலாம். பாரத்தியான், பெனிட்ரோத்தியான் கலந்து தெளிக்கலாம்.''

(எஸ்.எஸ். நாகராஜன், **நெல்சாகுபடி**, ப.92)

(எ-டு) 2

''தமிழில் அமைந்துள்ள செய்திகளைக் கணிப்பொறியில் ஆய்வு செய்யும் பொருட்டு அவை முழுவதும் ரோமன் எழுத்துகளைக் கொண்டு ஒலிபெயர்ப்பு செய்யப்பட்டுக் கணிப்பொறிக்கு

உள்ளீடாக அளிக்கப்பட்டன. தமிழ் வரி வடிவத்தின் ஒலி அமைப்பினைக் குறிப்பிடுவதற்கு ஏற்ற ரோமன் வரி வடிவங்களைக் கொண்ட ஓர் அட்டவணை உருவாக்கப்பட்டுள்ளது. இந்த அட்டவணையைப் பயன்படுத்தி ஆங்கிலத் தட்டச்சுப் பலகையைக் கொண்டு செய்திகளைப் பதிவு செய்பவர்கள் அவற்றை ரோமன் எழுத்தில் மாற்றித் தட்டச்சு செய்கின்றனர். இவ்வாறு தட்டச்சு செய்யப்பட்ட ரோமன் வரிவடிவங்களில் அமைந்த தமிழிலான செய்திகள் கணிப்பொறியில் ஆய்வு (தெரிவு செய்தல், அகரமுதலி வரிசையாக்கல், பகுத்து வகைப்படுத்துல் முதலியன) செய்யப்படுகின்றன.''

(கா.செ. செல்லமுத்து, 'கணிப்பொறியில் மொழிகளின்... தமிழ்கலை, மார்ச்சு, சூன் 1986, ப.17).

### 5.2.2 வினாவிடை நடை

கட்டுரை ஆசிரியர் தாமே சில வினாக்களை எழுப்பி அவற்றிற்கு விடை பகரும் நோக்கில் கட்டுரையை அமைத்துச் செல்வார். இவ்வகை நடைக்கு வினா விடை நடை என்று பெயர். தருக்க முறையிலான பாங்கு இதில் வெளிப்படும்.

மாணவர்களே நீங்கள், திரு. வி.க. அவர்களின் நூல்களைப் படித்திருப்பீர்கள் அல்லவா? அந்த நூல்களில் வினாவிடை நடையைக் கவனித்திருப்பீர்கள். இல்லையென்றால் இனி திரு.வி.கவின் நூல்கள் உங்கள் கைகளில் அகப்படும்போது முன் சொன்னதை நினைவில் கொண்டு அவர் நடையை உற்று நோக்குங்கள்.

இனி, வினாவிடை நடைக்கு ஓர் எடுத்துக்காட்டைக் காண்போம்.

''ஆன்மா என ஒன்றில்லை; உடலின் இயல்புதான் அது; உடலின் குணமே அது. அதாவது, உடல்குணி; உணர்வு குணம் என்று கூறில், குணம் பிரிந்து தனியே நின்று குணியை உணரமாட்டாது; ஆனால், ஆன்மா உடலைத் தன் உடல் என உணர்கிறது; இதிலிருந்தே ஆன்மா உடலின் குணம் அல்ல; பிறிதான ஒன்றென்பது தெளிவாகின்றதல்லவா?

வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு சேர அச்சேர்க்கையில் தோன்றும் சிவப்பு நிறம் போலப் பூதங்களின் சேர்க்கையால் உணர்வு தோன்றுமெனக் கூறும் உலகாயதர், வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு மூன்றும் தாமாகக் கூடுவதில்லை; கூட்டுவானுளன்; அதுபோலப் பூதங்களைக் கூட்டுவானும் ஒருவன் உளன் என்பதை மறுப்பது எங்ஙனம் பொருந்தும்?''

(கி. லக்ஷ்மணன், இந்தியத் தத்துவ ஞானம், ப. 85)

இப்போத வினாவிடை நடையைப் பற்றி நாம் தெரிந்து கொண்டோம். இனி, வருணனை நடையைப் பற்றிச் சிந்திப்போம்.

### 5.2.3 வருணனை நடை

ஆராய்ச்சி, அறிவியல் துறைகளைத் தவிரப் பெரும்பாலும் இலக்கிய நூல்கள் அனைத்திலும் வருணனை நடை இடம்பெற்று வரும். உவமைகளையும், உருவகங்களையும், சொல்லடுக்குகளையும் நாம் வருணனையின் உட்பிரிவில் அடக்கலாம்.

பொதுவாக 'எழுத்தோவியம்' என்று சொன்னால் அது பெரும்பாலும் வருணனையைக் குறித்து நிற்பதாகச் சொல்லலாம்.

மாணவர்களே, வருணனைப் பற்றிப்பின்வரும் எடுத்துக்காட்டைக் கவனியுங்கள்.

''அப்புலவர் பெருமான் வரும்போதே அவருடைய தோற்றம் என் கண்ணைக் கவர்ந்தது. ஒரு யானை மெல்ல அசைந்து நடந்து வருவதைப்போல் அவர் வந்தார். நல்ல வளர்ச்சி அடைந்த தோற்றமும், இளந்தொந்தியும், முழங்கால் வரை நீண்ட கைகளும்,

பரந்த நெற்றியும், பின்புறத்துள்ள சிறிய குடுமியும், இடையில் உடுத்திருந்த தூய வெள்ளை ஆடையும் அவரை ஒரு பரம்பரைச் செல்வரென்று தோன்றச் செய்தன. ஆயினும் அவர் முகத்திலே செல்வர்களுக்குள்ள பூரிப்பு இல்லை; ஆழ்ந்த பரந்த சமுத்திரம் அலையடங்கி நிற்பது போன்ற அமைதியே தோன்றியது. கண்களில் எதையும் ஊடுருவிப் பார்க்கும் பார்வை இல்லை; அலட்சியமான பார்வையும் இல்லை; தம் முன்னே உள்ள பொருள்களில் மெல்ல மெல்லக் குளிர்ச்சியோடு செல்லும் பார்வைதான் இருந்தது''.

(உ.வே.சாமிநாதையர், **என் சரித்திரம்**, ப. 159)

### 5.2.4 அடுக்கு மொழிநடை

ஒரு நிகழ்ச்சியை அல்லது கருத்தை விளக்குவதற்கு அதுபோன்ற - அதோடு தொடர்புடைய செய்திகளை ஒன்றன்பின் ஒன்றாக நிரல்படுத்தி எதுகை மோனை நயம்படச் சொல்வது அடுக்குமொழி நடையாகும்.

அடுக்குமொழிக்குப் பெயர் போன பெரியவர்கள் ரா.பி. சேதுப்பிள்ளை, அறிஞர் அண்ணாதுரை ஆவர்; அறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகளிலிருந்து எடுத்த ஓர் எடுத்துக்காட்டைக் கீழே பாருங்கள்:

''இயற்கை தன் அழகை வாரி வழங்குகிறது - கவனிப்பாரற்று கிடக்கிறது - எழில்மிக்க இளம் விதவையைப் போல.

நீர்வீழ்ச்சி - சித்திரச்சோலை - ஆறு உற்பத்தியாகும் இடம் மலை. உச்சி - சந்தனக்காடு - சிந்துபாடும் சிற்றாறு - பறவை இனங்களின் பாட்டு மொழி - புள்ளிமான்கள் துள்ளியோடும் காட்சி - யானைக் கன்றை அழைத்துச் செல்லும் கனவு, தேசிங்கு கோட்டை, சேர்வராயன் மலை ......''

(அறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள், ப.88)

இவ்வாறு அமைவதே அடுக்கு மொழி நடை. பொதுவாக அடுக்கு மொழிகளை மேடைப்பேச்சுகளில் கேட்கலாம்.

அடுக்கு மொழிக்கு ஒரு சிறப்பான தன்மை உண்டு. அதாவது, கேட்பவரின் உள்ளத்தை ஈர்த்து, அவர்களையும் அவ்வாறு அடுக்குமொழி சொல்லும்படி தூண்டிவிடும்.

**நடைமுறைப் பயிற்சி**

1. திரு. வி.க.வின் 'முருகன் அல்லது அழகு' என்ற நூலிலிருந்து வினாவிடையில் அமைந்த ஒரு பத்தியை எழுதிக்கொள்க.
2. நீங்கள் சொந்தமாக ஒரு மரத்தைப் பற்றிய வருணனையை எழுதுக.
3. ஓர் அழகிய சொற்பொழிவாளரின் அடுக்குமொழிகளைத் திரும்பச் சொல்லிப்பாருங்கள்.

---

## 5.3 திருத்தமாக எழுதப் பழகுவது எவ்வாறு?

நாம் மொழியைக் கையாளும்போது, சொல்லும் தொடரும் திருத்தமாய் அமைய வேண்டும்; அப்போதுதான் அதில் அழகிருக்கும்; நம் கருத்தையும் பிறர் ஏற்றுக்கொள்வார்கள். இந்தப் பகுதியில் நாம் தவிர்க்க வேண்டிய சில பிழைகளைப் பற்றிப் பார்க்கலாம்.

பெரும்பாலும் கொச்சை வடிவங்களைத் தவிர்க்க வேண்டும்; இயன்றவரை எல்லோருக்கும் தெரிந்த நல்ல இனிய சொற்களைப் பயன்படுத்த வேண்டும்.

**1. ஒவ்வொரு**

'ஒவ்வொரு மரமும் உயரமாய் இருக்கிறது! ஒவ்வொரு என்ற

சொல்லைத் தொடர்ந்து ஒருமைச் சொல்தான் வரவேண்டும்.

'ஒவ்வொரு வீடுகளிலும்' என்று எழுதுவது பிழை 'ஒவ்வொரு வீட்டிலும்' என்று எழுதவேண்டும்.

**2. பல பெயரெச்சங்கள் வரும்போது காலப்பொருத்தம் வேண்டும்.**

நாய் குலைக்கிற வீட்டில் திருட்டுப்போனது - பிழை
நாய் குலைத்த வீட்டில் திருட்டுப்போனது - சரி

**3. பெயரெச்சங்களுக்கு இடையே இடைப் பிறவராமல் எழுதுவது நல்லது**

'காலொடிந்த தாத்தாவின் நாற்காலி'

என்று எழுதுவது நாம் நினைக்காத பொருளைத் தந்து விடும்; எனவே, நேர் பொருளைத் தரும்படியாக,

'தாத்தாவின் காலொடிந்த நாற்காலி'

என்று எழுத வேண்டும்.

**4. இடையில் சொற்களை விடுவதால் ஐயப்பாடுகள் ஏற்படுகின்றன.**

''மகாகவியின் தாயார் இளமையிலேயே இறந்து போனார்''

இங்கு, 'மகாகவியின் தாயார், மகாகவியின் இளமையிலேயே இறந்து போனார்' என்றோ, மகாகவியின் இளமைப்பருவத்திலேயே அவர் தாயார் இறந்து போனார் என்றோ தெளிவாக மாற்றி எழுத வேண்டும்.

**5. உடைப்பதா, ஒடிப்பதா?**

சண்டையில் பெண்ணின் கையை உடைத்ததாகப் புகார்-பிழை
சண்டையில் பெண்ணின் கையை ஒடித்ததாகப் புகார் -சரி

**6. செருப்பு ஒன்றா? இரண்டா?**

'குழந்தைக்குக் காலில் அணியச் செருப்புகள் வேண்டும்' என்று எழுதுவதைவிட,

'குழந்தைக்குக் காலில் அணியச் செருப்பு வேண்டும்' என்று எழுதுவது சரியாக அமையும்.

**7. கண் தெரியாத குருடன்** - என்று சிலர் பேசுவதையும் எழுதுவதையும் கேட்டிருப்பீர்கள். இங்கு கண் தெரியும் குருடன் உண்டா என்ற வினா தோன்றுகிறது. குருடன் என்றாலே கண்தெரியாதவன்தானே! 'கண்தெரியாத' என்ற அடைமொழி இங்குத் தேவையில்லை அல்லவா?

8. சில வேளைகளின் பத்திரிகைகளிலும், பிற இடங்களிலும், செயப்பாட்டு வினை அமைப்பைப் பயன்படுத்துவது நடை அழகைக் குறைப்பதாக அமைகிறது.

'படகு கவிழ்ந்து நூறு பேர் கொல்லப்பட்டனர்'
'ரயில் விபத்தில் ஐம்பது பேர் கொல்லப்பட்டனர்'

ஆங்கிலத்தை மொழி பெயர்க்கும் போது, தவறாக, வாக்கியங்களைச் செயப்பாட்டு வினையாக, மொழிப்பெயர்ப்பதால் வருகின்ற கோளாறுகள் இவை. கொல்வதற்காகவே கவிழ்ந்தது போன்ற கருத்துத் தோன்றவில்லையா? இவற்றை

'படகு கவிழ்ந்து நூறு பேர் செத்தனர்/மாண்டனர்/மரண மடைந்தனர்.' என்றும்
'ரயில் விபத்தில் ஐம்பது பேர் செத்தனர்/மாண்டனர்/மரணமடைந்தனர்'. என்றும் நேரடியாக எழுதலாம்.

இதுபோல் திருத்தமாகச் செவ்விய முறையில் எழுதும் பழக்கங்களைக் கற்க வேண்டும்.

பிழை-திருத்தம் பற்றித் தெளிவுக்குப் பார்க்க வேண்டிய நூல்கள்

1. **தமிழ்ச்சொற்களைப் பிழைநீக்கி எழுதுமுறை**, கழக வெளியீடு,

*1981, இது தமிழ்ப் பாதுகாப்பு நூற்றிரட்டு என்ற நூலிலும் உள்ளது.*

2. *லிப்கோ தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி (1978) பிற்சேர்க்கை.*

---

## 5.4 கலைச்சொல், துறைச்சொல் வழக்கு

நாம் வழக்கில் பொதுப்பொருளில் பயன்படுத்தும் சொற்கள் சில குறிப்பிட்ட பொருளைப் பற்றிப் பேசும்போது வேறு பொருள்படுவதை நீங்கள் கவனித்திருப்பீர்கள்.

உயிர் என்பது மனிதன் விலங்கு முதலியவற்றைக் குறிக்கும். உயிர் என்ற இலக்கணத்தில் வரும்போது உயிர் எழுத்துக்களைக் குறிக்கும். ஒரு துறைக்குரியதாகையால் இதைத் துறைச்சொல் என்றும் சுட்டலாம்.

'தேள்' என்பது ஒரு நச்சு உயிர் - இது பொது வழக்கு. சோதிடங்கள் தேள் என்பதை 'விருச்சிக ராசி' என்ற பொருளில் பயன்படுத்துவார்கள். அதுபோன்றே 'முல்லை' என்றால் 'பூ' என்பது பொதுப்பொருள். ஆனால், பழைய இலக்கணத்தில் முல்லை என்பது நிலத்தையும், தலைவி தலைவன் வரவை எதிர்நோக்கிக் காத்திருக்கும் அந்நிலத்திற்குரிய ஒழுக்கத்தையும் குறிக்கும். இவ்வாறு வரையறுத்த பொருளில் வழங்கும் சொற்களைத்தான் நாம் கலைச்சொல் என்கிறோம்.

'தொகுதி' என்றால் 'தொகுப்பு' என்று பொருள். 'சட்டப்பேரவைத் தொகுதி' என்னும் போது ஒரு குறிப்பிட்ட தேர்தல் களத்தைக் குறிக்கிறது.

இன்று வளர்ந்து வரும் பல அறிவுத்துறைகளிலும் இத்தகைய கலைச்சொற்கள் பெருகி வருவதை நீங்கள் அறிவீர்கள். மொழியில் வழங்கும் பொதுச்சொல் ஒரு துறையைச் சார்ந்து வழங்கும் போது சிறப்புப் பொருளில் வழங்குகிறது. அதாவது ஒரு குறிப்பிட்ட துறையைப் பற்றிப் பேசும்போது அதற்கென்றுள்ள கலைச்சொற்களின் தன்மையை நாம் உணர்ந்திருக்க வேண்டும். இத்தகைய சொற்களை நீங்கள் பொருளறிந்து பயன்படுத்தத் தெரிந்து கொள்ளுங்கள். இங்கு அத்தகைய கலைச்சொற்களைப் பற்றிச் சிறிது தெரிந்து கொள்ளலாம்.

அரசியல்

நாடாளுமன்றம், குடியரசு, செயலர்.

இயற்பியல்

குவியாடி, குழியாடி, மின்கலம், காந்தம்

வணிகவியல்

முதலீடு, ஐந்தொகை, சந்தை, கொள்முதல், பற்று, வரவு ரொக்கம்

உடலியல்

தமனி, பித்தப்பை, சிறுநீரகம், நுரையீரல், கல்லீரல்

இவற்றைப் பற்றிப் பழகிக்கொள்ளவும், நினைவுப்படுத்திக்கொள்ளவும் முயலுங்கள். உங்களுக்குத் தெரிந்த சில கலைச்சொற்களை வகைபிரித்து அட்டவணைப்படுத்துங்கள். தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுள்ள 9, 10 ஆம் வகுப்புத் தமிழ் இலக்கண நூல்களையும், பிற கலைச்சொல் அகராதிகளையும் பாருங்கள்.

## 5.5 சொல்லும் பொருளும்

ஒரு மொழியைச் செம்மையாகக் கையாள வேண்டுமென்றால் மொழியிலுள்ள சொற்களையும் அவற்றின் பொருளையும் சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

### 5.5.1 சொற்பொருள் மாற்றம்

தாய்மொழி பேசுபவர்களுக்கு அம்மொழியிலுள்ள அடிப்படையான சொற்களும் பொருளும் தெரியும். ஆனால் எழுத்து மொழியிலும் மேடைப்பேச்சுகளிலும் இலக்கியப் பாங்கான நடையிலும் நாம் நாள்தோறும் பயன்படுத்தாத சொற்கள் வழங்கி வருவது உண்டு.

பொன்மலர் நாற்றம் உடையது போல - என்ற பழமொழியை நாம் கேட்டிருப்போம். இங்கு நாற்றம் என்பது, 'கெட்ட மணம்' என்ற இக்காலப் பொருளிலா வழங்குகிறது? பொதுவாக 'மணம்', 'நல்ல மணம்' என்ற பொருளில் அல்லவா வழங்குகிறது?

'மணிமேகலை மலர்வனம் புக்காள்' என்ற வாக்கியத்தில் புக்காள் - புகுந்தாள் என்ற பொருளில் வழங்குகிறது. இந்தச்சொல் இன்று வழக்கில் இல்லை.

மழையில் நனைந்து அவனுக்குத் தடுமல் - இவ்வாக்கியத்திலுள்ள **தடுமல்** என்ற சொல்லுக்கு வடதமிழ் நாட்டிலுள்ளவர்களுக்குப் பொருள் புரியாது. இதற்குச் 'சளி' என்று அவர்கள் கூறுவார்கள்.

எனவே, மேலே கண்ட சொற்களுக்குப் பொருளை எவ்வாறு தெரிந்து கொள்வது?' 'உடனே அகராதியைப் புரட்ட வேண்டியதுதான்!' என்று விடை கூறுவீர்கள். ஆமாம்! தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்ளுக்கு எல்லாச் சொற்களுக்கும் பொருள் தெரிந்திருக்கும் என்று கொள்ள முடியாது என்பது தெளிவாகிறதல்லவா? எனவே, நாம் உடனடியாகச் செய்ய வேண்டியது தமிழை நல்ல முறையில் கற்பதற்கு அகராதி ஒன்றைத் தேடிக்கொள்வதாகும். உங்கள் கையில் தமிழ் அகராதி ஒன்று இருந்தால், தமிழைக் கற்பது எளிதாகும்.

### 5.5.2 அகராதிகளின் பயன்

அகராதி கையிலிருந்தால்,

1. சொல்லக்குப் பொருள் தெரிந்து கொள்ளலாம்.
2. சொல்லின் எழுத்தில் ஏதாவது ஐயமிருந்தால் அகற்றிக் கொள்ளலாம்.
3. இன்னும் தொடர்புடைய செய்திகள் பலவற்றையும் தெரிந்து அறிவை வளர்த்துக் கொள்ளலாம்.

எனவே, இன்றே தமிழ் அகராதி ஒன்றை எப்படியாவது தேடிவைத்துக் கொள்ளுங்கள்.

இப்போது கடைகளில் கிடைக்கக்கூடிய அகராதிகள் சிலவற்றின் விவரங்களைத் தருகிறோம்; தவறாமல் வாங்கிக் கொள்ளுங்கள்; பயன்படுத்தவும் பழகிக் கொள்ளுங்கள்.

1. **லிப்கோ தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி**, லிப்கோ, சென்னை, 1978. விலை 13.00; பக். 672 & 84
2. **தமிழ் மொழி அகராதி** (கதிரைவேற் பிள்ளை) (தமிழ்-தமிழ்) ஏசியன் எடுகேஷனல் சர்வீஸ், புதுதில்லி, 1981, விலை ரூ. 100, பக். 1336 & 368
3. **கழகத் தமிழ் அகராதி**, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1969, பக். 881.

முற்காலத்தில் அகராதிகள் வருவதற்கு முன் நிகண்டுகள் என்பவை வழக்கில் இருந்தன. இவற்றை மாணவர் இளம்பருவத்

திலேயே மனப்பாடம் செய்து கொள்வர். இவ்வாறே மாணவர்கள் சொற்களின் பொருளை அன்று அறிந்து கொண்டனர். ஆனால், இன்று அவ்வளவு முயற்சி வேண்டாம். அகராதியை எடுத்துப் புரட்டினால் சொல்லுக்குப் பொருள் உடனே வெட்ட வெளிச்சம் ஆகிவிடும். இஃது எவ்வளவு எளிதானது, பார்த்தீர்களா?

உங்களுக்குத் தமிழ் அகராதியில் சொற்களைக் கண்டுபிடிக்கத் தெரியுமா? மீண்டும் தமிழ் எழுத்துக்களின் அகர வரிசையை நினைவு படுத்திக் கொள்ளுங்கள்.

சொல்லும் பொருளும் பற்றி நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டிய ஓரிரு செய்திகள் உள்ளன: அவற்றைப் பார்ப்போம்.

### 5.5.3 ஒருபொருட் பன்மொழி

ஒரே பொருள் தரும் பல சொற்களை இவ்வாறு அழைக்கின்றோம். ஆங்கிலத்தில் Synonyms என்றும் வடமொழியில் பரியாயம் என்றும் கூறுவர்.

மகன்
மதலை
புத்திரன்
பிள்ளை
தனையன்

மேலே கண்ட பெயர்ச்சொற்கள் எல்லாம் ஒரே பொருளை உணர்த்துகின்றன. இவற்றையே நாம் ஒருபொருட் பன்மொழி என்கிறோம்.

### 5.5.4 பல பொருள் ஒரு சொல்

ஒரு பொருள் பன்மொழி போன்று, இன்னொருவகைச் சொல் **பலபொருள் ஒரு சொல்**. அதாவது ஒரு சொல் பல பொருளில் வழங்குவது - பலபொருள் ஒரு சொல் ஆகும். இதனை 'நானார்த்தபதம்' என்று வடமொழியிலும் 'homonyms' என்று ஆங்கிலத்திலும் வழங்குவர். கலை - கலைகள், கலைமான், கலைந்து போ எனப் பல பொருள் தரக் காணலாம்.

மாலை - 1. பூமாலை
2. சாயுங்காலம்

சுட்டான் - 1. தீயினால் வேகவைத்தல்
2. துப்பாக்கியால் வேட்டு எழுப்புதல்

**தன் மதிப்பீடு: 2**

**வினாக்கள்**

1. அகராதியின் பயன்கள் யாவை?
2. ஒருபொருட் பன்மொழி, பல பொருள் ஒரு சொல்-விளக்குக.

**பயிற்சி**

கீழே கண்ட சொற்களுக்கு அகராதியில் பொருள் பார்த்து எழுதுக.

மாசு, குறுகு, மறுகு, வரை, மல்கு.

---

## 5.6 நிறுத்தக்குறிகள்

அதோ நிற்பது யார்?
அந்தோ என்ன கொடுமை!
பொன்னும், வெள்ளியும் விலை உயர்ந்த உலோகங்கள்.

இந்த வாக்கியங்களைக் கவனியுங்கள். இதில் வெவ்வேறு விதமான கருத்துக்களை உணர்த்துவதற்கு, வெவ்வேறு விதமான

குறிகள் பயன்படுத்தப்பட்டிருப்பதை நோக்குங்கள்.

முதல் வாக்கியம் கேள்வியாக அமைகிறது. இதை உணர்த்த ? என்ற வினாக்குறியைப் பயன்படுத்துகிறோம். இரண்டாவதில் உணர்ச்சி வெளிப்படுத்தப்படுகிறது. இதைக்குறிப்பிட ! என்ற உணர்ச்சிக்குறி பயன்படுத்தப்படுகிறது. மூன்றாவதில் பொருள் முற்றுப்பெற்று வந்ததைக் குறிக்க (.) என்று குறி (முற்றுப்புள்ளி) பயன்படுத்தப்படுகிறது. இடையில் காற்புள்ளி (,) இடம் பெறுகிறது.

பேச்சு மொழியில் சூழ்நிலைக்கேற்ப அழுத்தம் கொடுத்தும், நிறுத்த வேண்டிய இடத்தில் தேவைக்கேற்ப நிறுத்தியும் பேசுகிறோம். ஆனால் மொழியை எழுதும்போது அந்த வேறுபாடுகளை எவ்வாறு காட்டுவது? அதற்காகவே நிறுத்தக் குறிகள் பயன்படுத்தப்படுகின்றன.

எனவே, ''மொழியைச் சரியாகப் படிப்பதற்கும், தவறில்லாமல் புரிந்து கொள்வதற்கும் பயன்படுத்துகின்ற குறிகளுக்கு நிறுத்தக்குறிகள் என்று பெயர்''.

இனி, இந்த நிறுத்தக் குறிகளின் வகைகளையும் வாக்கியங்களில் அவை எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன என்பதையும் இப்பகுதியில் காண்போம்.

### நிறுத்தக் குறிகளின் வகைகள்

நிறுத்தக்குறிகள் பல வகைப்படும். அவற்றைப் பின்வருமாறு காண்போம்.

1. முற்றுப்புள்ளி
2. முக்காற்புள்ளி
3. அரைப்புள்ளி
4. காற்புள்ளி
5. வினாக்குறி
6. உணர்ச்சிக்குறி
7. மேற்கோட்குறி (ஒற்றை மேற்கோட்குறி, இரட்டை மேற்கோட்குறி)
8. அடைப்புக்குறி (பிறைக்குறி, சதுர அடைப்பு)
9. இடைப்பிறவைப்புக்குறி (தொடர் புள்ளிகள், விடுகோடு)

என்பனவாகும். இவற்றை இனி விளக்கமாகக் காண்போம்.

**1. முற்றுப்புள்ளி (.)**

இராமன் பள்ளிக்குச் சென்றான்

இவ்வாக்கியம் முடிந்த அல்லது முற்றுப்பெற்ற பொருளைத் தருகிறது. எனவே, வாக்கியத்தின் இறுதியில் முற்றுப்புள்ளி இடம்பெறுகிறது.

இவ்வாறு முடிந்த பொருளை உணர்ந்தும் நிலையிலுள்ள வாக்கியங்கள் இறுதியில் ஒரு புள்ளியைப்பெற்றிருக்கும். இந்தப் புள்ளிக்கு முற்றுப்புள்ளி என்று பெயர்.

இனி, சுருக்கப் பெயர்களின் இடையிலும் புள்ளி இடம் பெற்று வரும்.

தமிழரசன் எம்.ஏ.
அருளரசன் பி.ஏ.
மு.வ.
திரு. வி.க.

இவை முற்றுப்பெற்ற பொருள்களை உணர்த்துவன அல்ல; சுருக்கப்பட்ட வடிவங்களைக் குறிக்கின்றன என்பதையும் நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். ஊர்ப்பெயர்கள் முதலியவற்றைச் சுருக்கி எழுதும்போதும் புள்ளி வைத்துக் காட்ட வேண்டும்.

(எ-டு) க.கு. மாவட்டம் (கன்னியாகுமரி மாவட்டம்)
பாளை. (பாளையங்கோட்டை)

**2. முக்காற்புள்ளி (:)**

நான்கு திசைகளாவன: கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு.

இவ்வாக்கியத்தில் 'திசைகளாவன' என்பதன் பின் (:) என்ற ஒரு குறி இடப்பட்டுள்ளது. இவ்வாறு ஒரு வாக்கியத்தின் செய்திகள் இனிமேல் தெரிவிக்க வேண்டிய இடத்து முக்காற்புள்ளி பயன்படுத்தப்படும்.

**3. அரைப்புள்ளி: (;)**

முருகன் காலையில் எழுந்தான்; பாடம் படித்தான்; பள்ளிக்குச் சென்றான்.

இவ்வாக்கியத்தில் 'முருகன்' என்னும் சொல் எழுந்தான்; படித்தான்; சென்றான் என்று பல பயனிலைகளைப் பெற்றிருப்பதைக் காண்கிறீர்கள். இவ்வாறு ஓர் எழுவாயைத் தொடர்ந்து பல பயனிலைகள் வருமாயின், அவ்விடத்து அரைப்புள்ளி இடம்பெற்று வரும்.

**4. காற்புள்ளி (,)**

மாலா, இங்கே வா.

இவ்வாக்கியத்தில் பெயருக்குப்பின் (,) என்ற ஒருவித குறி இடம் பெற்றுள்ளது.

செடிகளும், கொடிகளும் பூத்தன.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என நிலம் ஐந்து வகைப்படும்.

இவ்வாக்கியங்களின் இடையில் (,) என்ற ஒரு குறி இடம் பெற்றிருப்பதைக் கவனித்திருப்பீர்கள்.

இவ்வாறு, கூப்பிடப்படும் பெயருக்குப்பின்பும், பல பெயர்ச்சொற்கள் முதலியன வரிசையாக வருமிடத்தும் பயன்படுத்தப்படும் குறிக்குக் (,) காற்புள்ளி என்று பெயர்.

**5. வினாக்குறி (?)**

எங்கே போனாய்?
உன் பெயர் என்ன?

இவ்வாக்கியங்களைத் திரும்பப் படியுங்கள். அவற்றின் இறுதியில் ஏதோ தலைகவிழ்ந்த வடிவில் ஒரு குறி இடம் பெற்றிருப்பதைக் கவனித்திருப்பீர்கள். அதுபோல அவ்வாக்கியங்கள் உணர்த்துகின்ற பொருளையும் கவனித்திருப்பீர்கள்.

இவ்வாக்கியங்கள் பிறரிடமிருந்து இன்னொன்றைத் தெரிந்து கொள்ளும் முறையில் அமைந்துள்ளன. இவ்வாறு நிற்கும் வாக்கியங்கள் வினா வாக்கியங்கள் என்றும், அவற்றை அடுத்து இடம் பெற்று வரும் குறி வினாக்குறி என்றும் (?) அழைக்கப்படும்.

**6. உணர்ச்சிக்குறி (!)**

ஐயோ! அவன் எங்கே?
அந்தோ! இஃது என்ன புதுமை!
ஆகா! எவ்வளவு இனிமை!

இந்த வாக்கியங்களை நிறுத்தி ஒருமுறை கூடப் படியுங்கள். இப்போது ஏதோ ஒன்று மனத்தைத் தொட்டது போன்ற பொருளை உணர்கிறீர்கள் அல்லவா? இந்த வாக்கியங்களினூடே இடம் பெற்றுள்ள குறியைக் கவனித்தீர்களா?

இவ்வாறு வாக்கியங்கள் இழப்பு, மகிழ்ச்சி முதலிய பொருள்களை உணர்த்துமானால் அவற்றின்பின் உணர்ச்சிக்குறி (ஆச்சரியக்குறி) இடம் பெற்று வரும். இவ்வுணர்ச்சிக்குறி (!) என்ற வடிவைப் பெற்றிருக்கும்.

7. மேற்கோட்குறி

'பூ' என்பது ஒரு பொருளின் பெயர்
'கை' என்பது சினை ஆகும்.
'கற்க கசடற' என்று வள்ளுவர் கூறினார்.

''மாணவர்களே, 'ஓடி விளையாடு பாப்பா' என்று பாரதி சொன்னது உங்களுக்கு நினைவிருக்கிறதல்லவா?'' என்று ஆசிரியர் கூறினார்.

இவ்வாக்கியங்களைக் கவனித்தீர்களா? அவற்றில் '' '' ' என்ற குறிகள் இடம் பெற்று வருகின்றன அல்லவா?

இவ்வாறு, எழுத்தோ சொல்லோ தன்னைச் சுட்டும்போது (' ') என்ற குறி பயன்படுத்தப்படுகிறது. இது **ஒற்றை மேற்கோட்குறி** எனப்படும்.

(எ-டு) 'தீ' என்பது ஓரெழுத்து ஒரு மொழி.

முன்னோர் ஒருவரின் கருத்தைச் சுட்டும் போது ('' '') என்ற குறி பயன்படுத்தப்படும். இந்தக்குறி **இரட்டை மேற்கோட்குறி** எனப்படும்.

(எ-டு) ''அடக்கம் ஆயிரம் பொன் தரும்'' என்பது ஆன்றோர் வாக்கு. இரண்டும் வருமிடங்களில் ஒற்றை மேற்கோட்குறி உட்பகுதியிலும் இரட்டை மேற்கோட்குறி வெளியிலும் இடம்பெறும்.

8. அடைப்புக்குறி ( )

பூக்களில் அல்லி மிகவும் மணமானது.
மின்னொளி மிகவும் அழகானது. (இரவில்)

இவ்வாறு மொழிப்பெயர்ப்பு, ஒன்றை நிலைநாட்டிச் சொல்லுதல், ஒன்றை விலக்கிச் சொல்லுதல், முதலிய இடங்களில் அடைப்புக்குறி பயன்படுத்தப்படும். இவ்விடங்களில் 'பிறைகோட்டு அடைப்புக்குறி' ( ) பயன்படுத்தப்படுகிறது.

சதுர அடைப்புக்குறி என்ற ஒரு வகை அடைப்புக்குறியும் [ ] உண்டு.

**(எ-டு)** பாரதியும் வள்ளத்தோளும் [ஒப்பியல் பார்வை] என்பது பி.எச்.டி. பட்ட ஆய்வேடாகும்.

இவ்வாறு இரு வகையில் பயன்படுத்தப்படுகின்ற அடைப்புக் குறிகளைக் கொண்ட வாக்கியங்களை உமது குறிப்பேட்டில் எழுதி வைக்கவும்.

தற்காலத்தில் கணிதத்திலும் விஞ்ஞானத்திலும் பயன்படுத்துகின்ற இவ்வகை அடைப்புக்குறியைப் பற்றி உங்களுக்குத் தெரியுமல்லவா?

9. இடைப்பிற வைப்புக்குறி

இடைப்பிற வைப்புக்குறி என்ற உடனே உங்களுக்கு ஏதோ தடுமாற்றம் தோன்றுகிறதோ? அது நீங்கள் எதையும்கடினமாய் எண்ணும் விளைவால் ஏற்படுத்துவதாகும்.

ஆனால் இந்தப் பெயரை ஒரு நகைச்சுவைக் கூற்றாகவும் வைத்துக் கொள்ளலாம் அல்லவா? அவ்வாறு வைத்துப் பாருங்கள். அது இப்பிறவியில் மறக்கவே மறக்காது.

இந்த 'இடைப்பிற வைப்புக்குறி'யில் இரு வகைகள் உண்டு.

1. தொடர்புள்ளிகள்
2. விடுகோடு

என் நண்பன் இப்போது இருந்தால்......

இவ்வாக்கியத்தில், ஏதோ எச்சப்பொருள் புலப்படுகிறது. எனவே, இவ்விடத்தில் ....... இவ்வகைக்குறி இடம் பெற்று வரும்.

சொல்லோ தொடரோ முற்றுப் பெறாத போதும் இதைக் கையாளலாம்.

(எ-டு) ''அன்பும் அறனும் .....

இவ்வாறு வருவது தொடர்புள்ளிகள் எனப்படும். பொதுவாக மூன்று புள்ளிகள் இட்டு எஞ்சி நிற்பதைச் சுட்டுவது மரபு.

வாக்கியங்களில் தொடர்ச்சியாக வித்தியாசமான பொருள்களை அமைக்கும் போது விடுகோடு (-) இடம் பெற்று வரும்.

(எ-டு) ''நேரு குழந்தைகளின் நண்பர் - நம் பிரதமர் - இந்த நாட்டின், ஏன்- இந்த உலகத்துக்குக்கூட த்லைவர் என்று சொன்னால், அவரைத் தவிர வேறு யாருளர்?''

இந்த வாக்கியத்தை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

**தன் மதிப்பீடு : 3**

**பயிற்சி**

பின்வரும் பகுதியைப் படித்து, தேவையான நிறுத்தக் குறிகளை அமைத்து வாக்கியத்தைச் சரிப்படுத்திக் கொள்க.

1. ஐயகோ இது என்ன கொடுமையிலும் கொடுமை இதைக்கேட்க யாருக்கும் வாயில்லையா பார்க்கக் கண் இல்லையா நடுவீதியில் இப்படிப்பட்ட கொடுமைகள் நடந்தால் இம் யார் தான் சகிப்பார்களோ.

2. மணம் என்றால் என்ன மணம் என்ற சொல்லுக்கு வாசனை என்று பொருளானால் திருமணம் என்ற சொல்லுக்குப் பொருள் என்ன மணம் என்ற சொல் திரு என்ற அடை எடுத்து வருவதுதானே திருமணம்

## 5.7 தொடர்சொற்களை எழுதும் முறை

சொற்களைப் பிரித்து எழுதுதலும் சேர்த்து எழுதுதலும் பின்வரும் தொடர்களைக் கவனியுங்கள்.

பெருங்குடி வணிகன்
பெருங் குடிவணிகன்

பிராமணர்கள் சாப்பிடும் இடம்
பிராமணர் கள்சாப்பிடும் இடம்

குடிமக்கள் காப்பியம்
குடி மக்கள்காப்பியம்

உத்தர சாமிமலை
உத்தரசாமி மலை

இத்தொடர்களில் பொருள் மாறுபாடு தோன்றுகிறதல்லவா? அதற்குரிய காரணம் என்ன? சொற்களைச் சரியாகப் பிரித்து எழுதாமையாலும் தேவையற்ற இடங்களில் பிரித்து எழுதினமையாலும் ஏற்பட்ட விளைவாகும்.

பொதுவாக அனைவராலும் விரும்பப்படுவது தெளிவான மொழி நடையாகும். எனவே, சொற்களைப் பிரிக்க வேண்டிய இடத்தில் பிரித்தும் சேர்க்க வேண்டிய இடத்தில் சேர்த்தும் எழுத வேண்டும்.

'உத்தர சாமிமலை' என்பது ஓர் இடத்தின் பெயர். இதை 'உத்தரசாமி மலை' என்று எழுதினால் 'உத்தரசாமி' என்பது ஒரு நபரைக் குறிப்பதாகின்றது.

'அறிவில் லாதவன்' என்று இத்தொடரைப் பிரித்து எழுதினால் 'அறிவில் ஆதவன்' என அமைந்து அறிவு மிக்கவன்என்ற பொருளைத் தருகின்றது. அறி வில்லாதவன் என்று பிரித்தால் பொருள் தெரியும் உங்களுக்கு.

கவனிக்க வேண்டியன

தொகைச் சொற்கள் ஒரு சொல்லாகும் தன்மை உடையன. எனவே பிரித்து எழுதக்கூடாது.

(எ-டு) ஊறுகாய், பவளக்கொடி

வேற்றுமை உருபுகளை பிரித்து இடம் விட்டு எழுதக்கூடாது.

(எ-டு) வேலனுடன், வேலனது.

இடைச்சொற்கள், துணைவினை, உடம்படுமெய் ஆகியவை சேர்த்து எழுதப்பட வேண்டும்.

(எ-டு) விழாவையொட்டி, பார்த்துக்கொள், வரவில்லை.

*பயிற்சி*

***வேறுபாடுகளைக் குறிப்பிடுங்கள்***

*பழங்கள் விற்கப்படும்*
*பழம் கள் விற்கப்படும்*
*எழுந்திருந்தான்*
*எழுந்து இருந்தான்*
*அப்பாவி*
*அப் பாவி*

*டாக்டர் வீ. இராசமாணிக்கம், எப்படி எழுதுவது? (தேன் தமிழ்ப்பதிப்பகம், சுப்ரமணியம் பிள்ளைத்தெரு, சேலம்-1) என்ற நூலைப் படியுங்கள்.*

## 5.8 தொகுப்புரை

இந்தப் பாடப்பகுதியில் தமிழ்மொழியைத் திருத்தமாகவும் செப்பமாகவும் அழகுடனும் கையாள்வதற்குத் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகளைப் பார்த்தோம். தவறுகளைத் தவிர்க்க உதவுவனவற்றையும் அறிந்தோம். அவற்றை மீண்டும் நினைவுப்படுத்திக் கொள்வோம்:

முதற்பகுதியில் நாம் மொழியில் பயன்படுத்தும் மரபுத்தொடர்கள், இணைமொழிகள், பழமொழிகள் முதலியவற்றைப் பற்றிச் சில செய்திகளைக் குறிப்பிட்டோம்.

இரண்டாம் பகுதியில் உரைநடையில் காணப்படும் அடிப்படையான நடை வகைகள் சிலவற்றை எடுத்துக்காட்டுகளுடன் பார்த்தோம்.

மூன்றாம் பகுதியில் அடிப்படையான சில பிழைகளை மட்டுமெ எடுத்துக் காட்டினோம். ஆனால் பிழைகளோ எண்ணற்றவை. அவற்றை எடுத்து விளக்கினால் முடிவே இல்லை. பிழைகளைத் தவிர்ப்பதற்குத் திருத்தமானது - பிழையற்றது எது என்ற வரையறையுடன் தெரிந்து கொண்டு அதைப் பின்பற்றினால் போதும்.

நான்காம் பகுதியில் கலைச்சொல் துறைச்சொல் வழக்கு பற்றிக் குறிப்பிட்டோம். இன்று எல்லாத் துறைகளிலும் இதன் ஆட்சியை நீங்கள் அறிவீர்கள். இதையும் கற்றறிந்து பயன்படுத்தும் அறிவைப் பெருக்கிக் கொள்ள வேண்டும்.

ஐந்தாம் பகுதி சொற்களின் பொருளை நன்கு தெரிந்து கொள்ளச் சொற்பொருள் வகையை விளக்கி அகராதிகளைப் பயன்படுத்துவதின் தேவையை வலியுறுத்துகிறது.

ஆறாம் பகுதியும் ஏழாம் பகுதியும் எழுதும்போது பின்பற்ற வேண்டிய நிறுத்தக்குறிகள், எழுதும் முறைகள் முதலியவற்றை விளக்குகின்றன.

செய்திகளை முழுமையாகத் தருவது நம் நோக்கமன்று. அவற்றையும் அவற்றின் வகையையும் சுட்டிக்காட்டி வகைப்படுத்துவதே இங்கு நம் நோக்கம். இவற்றைக் கற்று இவைபோல் வருவனவற்றை நன்கு அறிந்து விலக்க வேண்டியவற்றை விலக்கிப் போற்ற வேண்டியதைப் போற்றத் தெரிந்து கொள்ள வேண்டும். மேலும் இவற்றைக் கவனத்தோடு நூல்களில் கண்டு அவற்றைக் கையாளவும் பயிற்சிகள் செய்து பாருங்கள். பாடப்பகுதியிலுள்ள பயிற்சிகள் மட்டும் போதா. அவற்றை ஒத்த பயிற்சிகளை நீங்களே உருவாக்கிச் செய்து பார்க்கலாம் அல்லவா?

---

## *செய்முறைப் பயிற்சி*

ஏதேனும் ஒரு பொருள் பற்றி மூன்றுபக்க அளவில் ஒரு சிறு கட்டுரை எழுதிப்பாருங்கள். இயற்கையழகு, கடற்கரை, குண்டூசியின் பயன், கோபுரத்தின் சிற்பத்திறன், நட்பு, சுற்றுப்புறத் தூய்மை, மரம் நடுவிழா என ஏதேனும் ஒரு தலைப்பை எடுத்துக் கொண்டு எழுதுங்கள்.

ஒரு பக்கம், அரைப்பக்கத்தில் நிகழ்ச்சிக் குறிப்பு, நகைச்சுவைத் துணுக்கு, சிறப்புச்செய்தி போன்றவற்றை எழுதிப்பாருங்கள்.

அவற்றில் முன்னே விளக்கிக் காட்டிய மரபுத்தொடர்கள், இணைமொழிகள், பழமொழிகள், பலவகை நடைகளை எழுதிப் பழகுங்கள். நிறுத்தக் குறிகளை முறைப்படி இட்டு எழுதுங்கள். பிரித்தும் சேர்த்தும் எழுதும் முறைகள் உட்பட அனைத்தையும் கடைப்பிடித்து எழுதிப்பாருங்கள். ஒருமுறை, இருமுறை எழுதிப்பழகினால் இவை உங்களை விட்டுப் போகமாட்டா. 'வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்' என்பது ஔவையின் வாக்கு. மறவாதீர்கள்!

**தன் மதிப்பீடு: விடைகள்**

1. 'நாயைக் கண்டால் கல்லைக் காணும், கல்லைக் கண்டால் நாயைக் காணும்' என்ற நிலையில் நான் இருந்தேன். இவ்வாற வருவன பலவும் உவமைகளாம். அவள் மெல்லப் பேசினாள். என் செவிகளில் தேன் பொழிந்தது. இங்கு 'தேன்' உருவகமாகிறது. இவ்வாறு தேடி உவமை, உருவகங்களைக் காணப் பழகுங்கள்.

2. 1) சொல்லின் பொருள், வடிவம், தொடர்புடைய செய்தி - இவற்றை அகராதி மூலம் தெரிந்து கொள்ளலாம். 2) ஒரு பொருளைத் தரும் பல சொற்கள் உள. இவற்றில் பொருள் ஒன்று - சொற்கள் பல. மிகவும் என்ற ஒரே பொருளை சால, கூறு, தவ, நனி, கழி என்ற ஐந்து உரிச்சொற்களும் தரும். ஒரு சொல் பல பொருளைத் தருவது 'பல பொருள் ஒரு சொல்'லாகும். இவற்றில் சொல் ஒன்று - பொருள் பல. 'கடி' என்ற உரிச்சொல் மணம், கூர்மை, ஒளி, சிறப்பு முதலிய பல பொருள்களைத் தரும்.

கட்டு - 'இதைக்கட்டு' எனலாம். 'எத்தனைக் கட்டு உள' எனக்கேட்கலாம். 'வீட்டில் இது முதல் கட்டு' என்பதுண்டு. பல பொருள் ஒரு சொல்.

சேய், குழவி, மகவு, பிள்ளை என்பன ஒரு பொருட்பின் மொழிகளாகும்.

**பயிற்சி**

மாசு - குற்றம், குறுகு — அணுகுண இங்ஙனம்
இவற்றிற்கு அகராதியில் குறிப்பிட்டுள்ள
பொருள்களைத் தேடிக் குறியுங்கள்.

**3. பயிற்சி**

1. *''ஐயகோ! இது என்ன? கொடுமையிலும் கொடுமை! இதைக் கேட்க யாருக்கும் வாயில்லையா? பார்க்கக் கண்கள் இல்லையா? நடுவீதியில் இப்படிப்பட்ட கொடுமைகள் நடந்தால்... இம், யார் தான்சகிப்பார்களோ?*

2. *''மணம் என்றால் என்ன? 'மணம்' என்ற சொல்லுக்கு 'வாசனை என்று பொருளானால், 'திருமணம்' என்ற சொல்லுக்குப் பொருள் என்ன? 'மணம்' என்ற சொல், 'திரு' என்ற அடை அடுத்து வருவதுதானே திருமணம்!''*

## பாடப்பகுதி (Unit) 6 — பேச்சுத் தமிழும் எழுத்துத் தமிழும்

### படிப்பு நோக்கம்

★ தமிழில் பேச்சுத் தமிழும் எழுத்துத் தமிழும் வேறுபட்டிருக்கின்றன. எனவே, இவை இரண்டின் தன்மைகளையும் மாணவர்கள் அறிந்துகொள்ள இங்கு வகைசெய்யப்படுகிறது.

★ அவ்வழக்குகளைச் சரிவரக் கையாளவும் அவற்றில் ஏற்படும் பிழைகளைத் தவிர்க்கவும் சில நெறிமுறைகள் இதில் தரப்பட்டுள்ளன.

★ இப்பாடப் பகுதியில் தமிழை நன்கு பேசவும், எழுதவும், படிக்கவும் துணையாகும் செய்திகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

### பாடக் கருத்தலகுகள்

## 6.0. பாடமுன்னுரை

தமிழ் மொழியில் ஒரு தனிப்பண்பு தொன்று தொட்டுக் காணப்படுகிறது. பேச்சத் தமிழுக்கும் எழுத்துத் தமிழுக்கும் உள்ள வேறுபாடுதான் அது. இவ்வேறுபாடு தொல்காப்பியர் காலம் முதல் இன்று வரை காணப்படுகிறது. இவற்றிடையேயுள்ள வேறுபாடுகள் நீங்கள் நன்கு பகுத்தறிந்து கொள்ள வேண்டும். இது உங்கள் மொழியாற்றலை மேலும் வளர்த்துக் கொள்ளப் பயன்படும்.

## 6.1 பேச்சத் தமிழும் எழுத்துத் தமிழும்

தமிழில் நாம் எழுதுவது போல் பேசுவதில்லை. அது போன்றே பேசுவது போல் எழுதுவதையும் நாம் விரும்புவதில்லை. கீழே உள்ள எடுத்துக்காட்டுகளைப் பாருங்கள்.

| பேச்சுத்தமிழ் | எழுத்துத்தமிழ் |
|---|---|
| நீ என்ன பண்ணீட்டிருக்கிறே | நீ என்ன பண்ணிக்கொண்டிருக்கிறாய் |
| அவன் கோவமா பேசறான் | அவன் கோபமாகப் பேசுகிறான் |
| பொம்மனாட்டிங்க ஆத்தில இருக்காங்க | பெண்கள் வீட்டில் இருக்கிறார்கள் |

இவ்வாறு பேசுவது ஒன்று, எழுதுவது ஒன்று என்று இரண்டு நிலை தமிழுக்குரிய இயல்பாக உளது. ஒவ்வொரு மொழிக்கும் இது போல் சில இயல்புகள் இருக்கத்தான் செய்யும். ஆங்கிலத்தில் எழுதுவது போல் உச்சரிப்பதில்லை. ஒரே எழுத்து பலவகை உச்சரிப்புகளைப் பெறும். இதை ஆங்கிலத்திற்குரிய இயல்பாகக் கருத வேண்டுமே தவிரக் குறையாகக் கருதமாட்டார்கள். இதனால் தமிழில் பேசுவது போல் எழுதிவிடுவது தவறு என்று இல்லை. ஆனால் எல்லோருக்கும் புரிய வேண்டும் என்பதற்காக எழுத்துத் தமிழை நாம் பொதுவாகப் போற்றுகிறோம்: பேச்சுத்தமிழ் இடத்திற்கு இடம், குழுவுக்குக் குழு மாறுபடுகிறது அல்லவா? உங்களுக்குத் தமிழ் நாட்டில் பேசப்படும் தமிழின் வேறுபாடுகள் தெரியுமா?

**நடைமுறைப்பயிற்சி:**

பின்வரும் பேச்சு வழக்குச் சொற்களுக்கு நேராக எழுத்துத் தமிழ்ச் சொற்களைப் பொருத்திக்காட்டி உங்கள் திறமையைச் சோதித்துக் கொள்ளுங்கள்.

| பேச்சுத்தமிழ் | எழுத்துத்தமிழ் |
|---|---|
| 1. அவன் வருதான் | 1. நான் திட்டினேன் |
| 2. நான் வஸ்ஸென் | 2. அவன் வருகிறான் |
| 3. அவன் திருப்பூட்டினான் | 3. உனக்குப் புரிகிறதா |
| 4. வேலயெ பாரு | 4. அவன் தாலி கட்டினான் |
| 5. நோக்கு புரியுதோ | 5. உன் வேலையைப் பார். |

## 6.2 பேச்சுத்தமிழில் வேறுபாடு: வட்டார வழக்குகள்

இதனால் பேச்சுத்தமிழை அதன் கொச்சைத்தன்மை, திரிபுகளை நீக்கியே எழுதுவது வழக்கம். ஒரு கட்டளைத் தமிழ், செவ்விய வடிவில் எழுதப்படுவதால், பேச்சுத் திரிபுகள் காற்றொடு கலந்து போய் தமிழ்மொழியானது 'என்றுமுள தென்தமிழாய்' - எல்லாப் பகுதியினருக்கும் எல்லாச் சமூகத்தவருக்கும் விளங்குவதாய் விளங்குகிறது என்பதையும் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்.

பேசுவதில்கூட தமிழ்நாட்டில் உள்ள மக்கள் எல்லோரும் தமிழை ஒரே மாதிரி பேசுவதில்லை. சாதிக்கு சாதி, இடத்திற்கு இடம் தமிழ் மாறுபடுகிறது. இதனைப் பின்வரும் பட்டியலைப் பாருங்கள்.

| 1. பிராமணர் பேச்சுத்தமிழ் | பொதுத்தமிழ் |
|---|---|
| ஆத்துக்காரர் | கணவர் |
| அத்திம்பேர் | மைத்துனர் (மச்சான்) |
| அவாள் | அவர்கள் |
| ஆத்தில் | அகத்தில், வீட்டில் |
| மாட்டுப்பெண் | மருமகள் |

| 2. திருநெல்வேலிப் பேச்சுத்தமிழ் | பொதுத்தமிழ் |
|---|---|
| இங்கிட்டு | இங்கே |
| அவுக | அவர்கள் |
| சொல்லுதான் | சொல்லுகிறான் |

| 3. சென்னைப் பேச்சுத்தமிழ் | பொதுத் தமிழ் |
|---|---|
| பயம் | பழம் |
| இசுத்துக்கொண்டு | இழுத்துக்கொண்டு |
| பேசாராப் போச்சு | தொந்தரவாகப் போயிற்று |

இன்னும் ஈழம், மலேயா போன்ற பகுதிகளில் பேச்சுவழக்கில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஈழத்தில் 'அவன் கனக்கக் கதைத்தான்' என்றால், அவன் நிறையப் பேசினான் என்பது பொருள்.

சொற்கள் மட்டுமல்லாமல் ஒலிக்கும் முறையிலும் சொற்களில் ஏற்படும் இந்த வேறுபாடுகளைக் கவனித்திருப்பீர்கள்.

| 4. நாஞ்சில் நாடு | பிற பகுதி |
|---|---|
| சோறு | ஸோறு |
| ஞாயர் | நாயர் |

| 5. தஞ்சை | கொங்கு |
|---|---|
| பழம் | பளம் |
| கிழமை | கிளமை |

## 6.3 பொதுப் பேச்சுத்தமிழ்

இத்தகைய வேறுபாடுகள் இருந்தாலும் கல்வி, போக்குவரத்து வசதி, வேலைவாய்ப்பு முதலியவற்றால் பல இடங்களில் கலந்து வாழும் மக்கள் உறவாடி வாழும்பொழுது எல்லோருக்கும் புரியக்கூடிய தமிழில் பேசுகிறார்கள். இதைப் **பொதுப் பேச்சுத்தமிழ்** என்று சொல்லலாம். இத்தகைய தமிழை வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் முதலியவற்றில் கேட்கிறோம். இது ஓரளவிற்கு எழுத்துத் தமிழை ஒட்டியதாக அமையும். இதைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

***பேச்சுத் தமிழ்: 1. சமூக வழக்கு 2. வாட்டார வழக்கு பொது பேச்சுத் தமிழ்: எழுத்துத் தமிழ்***

### 6.3.1. பொதுப் பேச்சுத் தமிழ் எல்லோருக்கும் புரியக்கூடிய வகையில் அமைதல்

எல்லோருக்கும் புரியக்கூடிய பொதுப் பேச்சுத்தமிழ் ஒன்று உருவாகிவருகிறது. இதில்,

1. பலர்க்கும் புரியாத வட்டார வழக்குச் சொற்களைத் தவிர்த்துப் **பொதுச் சொற்களில்** கூறுவார்கள்.

(எ-டு) கன்னியாகுமரி மாவட்டத்தில், வண்ணமாக இருக்கிறான் என்றால் பருமனாக, குண்டாக இருக்கிறான் என்று பொருள். ஆனால், பொதுத்தமிழில் 'வண்ணம்' என்பது நிறம் எனப் பொருள்படும். அவன் பருமனாக, குண்டாக என மாற்றிப் பொதுத்தமிழில் கூறுவதுண்டு.

2. மிகவும் **கொச்சையான வடிவங்களைத் தவிர்த்து விடுவதுண்டு.**

அவன் 'டபாச்சிட்டான்' என்று சொல்லுகிற வழக்கை, அவன் தப்பிவிட்டான், ஏமாற்றிவிட்டான் என மாற்றிவிடுவது உண்டு.

3. இயன்றவரை **திருந்திய எழுத்துத் தமிழிலுள்ள சொற்களையும்** வடிவங்களையும் பயன்படுத்துவது உண்டு.

உன் வீட்டுக்காரர் எங்கே போறார்?

உன் கணவர் எங்கே போகிறார்?

எனவே பொதுப் பேச்சுத்தமிழில் எல்லா வட்டாரங்களிலும் உள்ளவர்களுக்குப் புரியக்கூடிய பொதுத்தமிழின் பொதுக்கூறுகளும், எழுத்துத் தமிழின் கூறுகளும் பெரும்பாலும் ஒத்த அளவில் இருக்கும்.

இதற்கு ஓர் எடுத்துக்காட்டு

ராசா வீட்டுக் கல்யாணம் எப்படி இருக்கும்? ஊர்கோலம் போற அளகு, சிம்மாசனத்துலே உக்காந்த ராசாங்கம் பண்ணுற தோரணை, அந்தப்புரம் சேடிமார்கள், அரமணை சொகுசுகள் எல்லாத்தையும் பற்றி வர்ணி வர்ணி என்று வர்ணித்துக்கொண்டே வந்தது நரி.

*(தாத்தா சொன்ன கதைகள், கி. ராஜநாராயணன், ப 192)*

### 6.3.2. பொதுப் பேச்சுத்தமிழைக் கற்றுக்கொள்வதற்குரிய வழிகள்

நல்ல எளிய பொதுத்தமிழில் நடக்கும் மேடைப்பேச்சு, வகுப்பறையில் ஆசிரியர் சொற்பொழிவுகள், வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் போன்றவற்றிலுள்ள உரையாடல்கள் முதலியவற்றைக் கவனமாகக் கேட்டுப் பின்பற்றலாம். அதுபோன்றே சிறுகதைகள், நாடகங்கள், நாவல்கள் முதலியவற்றில் இத்தமிழை இன்று கையாள்கின்றனர். அவற்றையும் பார்த்துப் பயிலலாம்.

பொதுத்தமிழைக் கற்றுக்கொள்வதற்கான வழிகளாக,

1. சரியான உச்சரிப்பு
2. சரியான சொல்வடிவங்கள், பழகுதமிழ்ச் சொற்கள்
3. சரியான சொல்லழுத்தம், வாக்கிய ஏற்ற இறக்கம்

முதலியனவும் அமையும்.

**சரியான உச்சரிப்பு**

மொழியை நன்கு கையாளும்பொழுது ஒலிகளைத் தெளிவாக உச்சரிக்கப் பழகவேண்டும். இதைத்தான் நாம் சொல் சுத்தம் என்கிறோம். வீட்டுக்குள்ளும், வெளியிலும் நாம் சொல் சுத்தத்துடன் பேசவில்லை என்றாலும் யாரும் பெரிதாகக் கவனிக்கமாட்டார்கள். ஆனால் மேடையிலோ, வானொலி, தொலைக்காட்சி போன்றவற்றிலோ நீங்கள் பேசும்பொழுது சரியாக ஒலிகளை உச்சரிக்கவில்லை என்றால் எல்லோரும் சிரிப்பார்கள்; உங்களைப் பழிக்கவும் செய்வார்கள். அதனால் உங்களுக்கு கிடைக்க இருக்கும் வேலையோ வாய்ப்போ தவறிவிடலாம். எனவே, தமிழ் ஒலிகளின் சரியான உச்சரிப்பைத் தெரிந்துகொண்டு அம்முறையில் உச்சரிக்கப் பழகுங்கள்

சரியான சொல் வடிவங்கள்

பேசும்பொழுது சரியாக உச்சரிப்பதைப் போன்றே சொற்களுடைய திருந்திய வடிவத்தையும் பேசப் பழகவேண்டும். இதில் நீங்கள் கவனிக்க வேண்டிய சிலவற்றைக் கீழே தருகிறோம்.

**உயிர்எழுத்து மாற்றம்**

| பேச்சு வழக்கு | எழுத்து வழக்கு |
|---|---|
| எல | இலை |
| ஒலகம் | உலகம் |
| ஒரலு | உரல் |
| கொல | குலை |
| தல | தலை |
| மல | மலை |
| யம்மா, யப்பா | அம்மா, அப்பா |

**தன் மதிப்பீடு : 1**
**பயிற்சி**

**பின்வரும் பேச்சு வழக்குச் சொற்களுக்கு எழுத்து வழக்குச் சொற்களைத் தருக:**

| பேச்சு வழக்கு | எழுத்து வழக்கு |
|---|---|
| குறவு | — |
| வச்சான் | — |
| பொண்ணு | — |
| பில்லு | — |
| புள்ள | — |
| எண்ணு | — |
| ரெண்டு | — |

**மெய் எழுத்து மாற்றம்**

| | பேச்சு வழக்கு | எழுத்து வழக்கு |
|---|---|---|
| அ. | குத்தம் | குற்றம் |
| | மத்தது | மற்றது |
| | வித்தான் | விற்றான் |
| | நாத்து | நாற்று |
| | புத்து | புற்று |

| ஆ. | பேச்சுவழக்கு | எழுத்துவழக்கு |
|---|---|---|
| | தேச்சான் | தேய்த்தான் |
| | காச்சிது | காய்த்தது |
| | தீஞ்சது | தீய்ந்தது |
| | சாஞ்சுது | சாய்ந்தது |

| இ. | பேச்சுவழக்கு | எழுத்துவழக்கு |
|---|---|---|
| | உலந்து | உலர்ந்து |
| | சேந்து | சேர்ந்து |
| | இல்லாம | இல்லாமல் |
| | வரல | வரவில்லை |
| | உமிநீர் | உமிழ்நீர் |
| | கொரவள | குரல்வளை |
| | மேச்சல் | மேய்ச்சல் |

**மிகைத் திருத்தம்**

மேலே இதுவரை பார்த்த எடுத்துக்காட்டுகளில் பேச்சுவடிவம், திருந்திய எழுத்து வடிவம் என இரண்டையும் பார்த்தோம். இவற்றிலிருந்து இலக்கிய வடிவங்கள் எவ்வாறெல்லாம் திரிந்துள்ளன என்பது விளங்குகிறது. இதை வைத்துக்கொண்டு தேவையில்லாத இடங்களில் நாம் மிகையாகத் திருத்தம் செய்துவிடுவதும் உண்டு. 'காத்து' 'காற்று' என்று ஆவதால் 'வாத்து' என்பதை 'வாற்று' என்று திருத்திவிடக் கூடாது. சிலருடைய பேச்சில் இத்தகைய தவற்றைப் பார்க்கலாம்.

| (எ-டு) | எழுத்துவழக்கு | பேச்சுவழக்கு மிகைத்திருத்தம் |
|---|---|---|
| | கோவை | கோர்வை |
| | கோத்து | கோர்த்து |
| | காக்க | கார்க்க |
| | சுவர் | சுவறு |
| | ஆராய்ச்சி | ஆராட்ச்சி |

தேவையில்லாத இடங்களில் மிகுதியாகத் திருத்திவிடுவதையே **மிகைத்திருத்தம்** என்பார்கள்.

கீழே கண்ட சிரிப்பைக் கேட்டிருப்பீர்கள்,

''ஆட்டுக்குட்டி வேட்டியைக் கடிக்குது, ஓட்டு,ஓட்டு''.

''ஆஷ்டுக் குஷ்டி வேஷ்டியைக் கடிக்குது ஓஷ்டு, ஓஷ்டு''

— இங்கு ஆட்டுக்குட்டியை ஆஷ்டுக்குட்டி என்றும் ஓட்டு என்பதை ஓஷ்டு என்றும் திருத்திக் கொள்வதும் மிகைத்திருத்தம் அகும்; இது தவறு; இவற்றைத் தவிர்க்க வேண்டும்.

**பழகுதமிழ்ச் சொற்கள்**

தமிழில். கொச்சையான வழக்குகள் — சிறுபான்மையான வழக்குகளைத் தவிர்த்துப் பொதுச் சொற்களைக் கையாளலாம். முகத்தைக் குறிக்க மூஞ்சி, முகரக்கட்டை என்ற சொற்கள் உள்ளன. அவற்றை எல்லா இடத்திலும் பயன்படுத்த முடியாது. 'முகம்' என்ற சொல்லை எல்லா இடத்திலும் பயன்படுத்தலாம். இது போல வேறுபாடறிந்து சொற்களை ஆளப் பழக வேண்டும்.

| கொச்சை, சிறுபான்மை வழக்கு | | திருந்திய வழக்கு |
|---|---|---|
| தண்ணி அடி | — | குடி |
| சோமாறி | — | சோம்பேறி |
| தம் அடித்தல் | — | புகை பிடித்தல் |
| சிகரெட்டுக் குடிப்பது | — | சிகரெட்டுப் புகைப்பது |

**சரியான சொல்லழுத்தமும், வாக்கிய ஏற்ற இறக்கமும்**

எழுத்துக்களையும், சொற்களையும் உச்சரிப்பதைப் போலவே சொற்களையும் தொடர்களையும் அழுத்தியும், நீட்டியும், இழுத்தும் பேசுவது இடத்துக்கு இடம் மாறுபடும். சில வேளை ஒரு வட்டாரத்தினர் பேசும் முறையை வைத்துக் கொண்டே அவர் எந்தப் பகுதியைச் சேர்ந்தவர் என்பதைச் சொல்லி விடலாம். இருந்தாலும் பொதுப் பேச்சுத்தமிழில் இவ்வட்டாரக் கூறுகள் தூக்கலாகத் தெரியாமல், ஒரு பொதுஅமைப்பைப் பெற்றிருக்கும். இதை இங்கு விளக்கிக் காட்ட இயலாது. நீங்கள் வட்டார மொழியிலும் பொது மொழியிலும் அமைந்த வசனங்களை திரைப்படம், நாடகம் முதலியவற்றில் கேட்டு கவனித்துப் பாருங்கள்; பயிற்சி செய்து கொள்ளுங்கள்.

பொதுப் பேச்சுத் தமிழின் இயல்பைக் காட்ட

1. ஒரு மேடைப் பேச்சு — சிறு பகுதி
2. வானொலி நாடகம் — சிறு பகுதி
3. திரைப்படம் — ஒலிச்சித்திரம் — சிறுபகுதி

முதலியன அடங்கிய ஒலிப்பதிவுகளைக் கேட்டுப் பாருங்கள்.

**படிக்கும் முறை**

எழுதியவற்றை வாசிக்கும் போதும், நாம் கவனிக்க வேண்டியவற்றைக் குறிப்பிடலாம்.

1. ஒலிகளை நன்கு உச்சரித்துச் சொற்களை முழுமையாகவும், தெளிவாகவும் வாசிக்க வேண்டும்; சொற்களை விழுங்கக் கூடாது; பாதியோடு நிறுத்தக் கூடாது.
2. தொடர்களை வாசிக்கும் பொழுது ஏற்ற இறக்கமின்றி ஒரே இசையில் மந்திரம் போல் முணுமுணுக்கக்கூடாது.

செய்தி, வினா, மகிழ்ச்சி, வியப்பு, நையாண்டி, ஐயம் முதலிய உணர்ச்சிகளை வெளிக்காட்டும் விதத்தில் குரல் — ஏற்ற இறக்கம் கொடுத்து வாசித்துப் பழக வேண்டும்.

பாடல்களாயின் இசையுடன் பாடப் பழக வேண்டும் இசை தெரியாவிட்டால் ஒழுங்குபட்ட ஓர் ஓசை நயத்துடனாவது பாடப் பழக வெண்டும்.

1. மேலே காட்டிய பல்வேறு வாக்கிய ஏற்ற இறக்கம், சொல்லழுத்தம் முதலியவற்றை விளக்கிக் காட்டும் ஒலிப்பதிவுகளை கேட்கலாம்.
2. பாடல்களைப் பாடும் முறையைக் காட்டவும் நல்ல ஆசிரியர்கள் பாடுவதை ஒலிப்பதிவுகளில் மாதிரிகளாகப் பதிவு செய்து கொள்ளலாம்.

---

## 6.4 எழுத்துத் தமிழ்

நாம் தமிழைப் பேசுவதிலிருந்து வேறுபட்ட முறையில் எழுதி வரும் எழுத்துத் தமிழைப் பற்றி முன்பு குறிப்பிட்டோம். இதைச் **செந்தமிழ்** என்று குறிப்பிட்டார்கள். செந்தமிழ் என்பது கொடுந்தமிழிலிருந்து திருந்திய தமிழ்; இது இடத்துக்கு இடம் மாறுபடுகின்ற பேச்சுத்தமிழ் — கொடுந்தமிழ் போலன்றி எல்லோருக்கும் பொதுவான மொழியாகும். ஒருவகையில் சொன்னால், எல்லோருக்கும் புரியக்கூடிய, எல்லோரையும் இணைக்கக்கூடிய ஒரு பொதுமொழி என்று இதைச் சொல்லலாம்.

எழுத்துத்தமிழில் பழைய வடிவங்களும், இலக்கியக் கூறுகளும், இலக்கியச் சொற்களும் மிகுதியாக இருக்கும். ஆனால், இன்றைய பேச்சுமொழியின் இயல்புகளும் இதில் இல்லாமல் இல்லை. இன்று நாம் வளர்த்து வருகின்ற பொதுப்பேச்சுத்தமிழ் — எழுத்துத் தமிழுக்கும் வட்டாரப் பேச்சுத்தமிழுக்கும் இணைப்பாக விளங்குகிறது.

### 6.4.1 பொதுப் பேச்சுத் தமிழும் எழுத்துத்தமிழும்

இன்றைய பொதுப் பேச்சுத் தமிழுக்கு ஒரு சிறு எடுத்துக்காட்டு:

''என்னோட நாவல்களிலே வருகிற பாத்திரங்க எல்லா 'ஏ' மூலமா பெறக்குறாங்க என்பதனாலெ 'அவங்களெ நா' சாமானியவங்களா கருத முடிவதில்லெ.

இதையே எழுத்த நடையில் எழுதினால்

*''எனது நாவல்களில் வருகிற பாத்திரங்கள் எல்லாம், என்மூலமாய்ப் பிறக்கிறார்கள் என்பதால் அவர்களை நான் சாமானியர்களாகக் கருத முடிவதில்லை.*

(ஜெயகாந்தன் முன்னுரை, தெய்வசுந்தரம் மேற்கோள்)

என்று அமையும். எனவே பொதுப் பேச்சுத் தமிழ் ஒரு நல்ல இடைத்தொடர்பாக, பாலமாக விளங்குவதை அறியலாம்.

### 6.4.2 எழுத்துத் தமிழை நாம் பயன்படுத்தும் இடங்கள்

நாம் கடிதம் எழுதுவது, அரசாங்கக் கடிதப் போக்குவரத்து, ஆவணங்கள் முதலிய மக்கள் பயன்படுத்தும் துறைகள், பத்திரிகைகள் முதலியவற்றிலும் நாம் எழுத்துத் தமிழைப் பயன்படுத்துகிறோம். இன்று உரைநடையில் எழுதும் சிறுகதை, நாவல், நாடகம் போன்றவற்றில் நாம் பெரும்பாலும் எழுதுவது இத்தமிழைத்தான். நாம் பாடநூல்களிலும் இத்தமிழையே பார்க்கிறோம். மேடைப் பேச்சுக்கள், விவாதங்கள் போன்று பேசுமிடங்களில்கூட எழுத்துத் தமிழையே நாம் பயன்படுத்துகிறோம். மேலும், அறிவியல் துறைகளிலும் இத்தமிழையே பின்பற்றுகிறோம். எனவே, எழுத்துத்தமிழை செம்மையாகத் தெரிந்து கொள்ள வேண்டியது பல நிலைகளில் அடிப்படையாக அமைகிறது.

### 6.4.3 எழுத்துத் தமிழைக் கற்பதற்கான வழிகள்

பேசும்போது சரியாகப் பேசினால் எழுதும் போது எழுத்துப் பிழைகளும் ஏற்படா. சொற்களின் ஒலிப்பு, சொற்களின் சரியான வடிவம் முதலியவை எவ்வாறு அமைய வேண்டும் என்ற இப்பாடத்தின் முற்பகுதியில் பொதுப் பேச்சுத் தமிழ் என்ற பகுதியில் எடுத்துக் காட்டினோம். எழுத்துத் தமிழைச் சரியாக எழுத அதில் கூறப்பட்ட பயிற்சிகள் துணையாக அமையும்.

எழுத்துத் தமிழை நல்ல முறையில் கையாள்வதற்கு கீழே கண்ட படிநிலைகளில் கவனமாக இருக்க வேண்டும்.

**1. சொல்லின் சரியான எழுத்து, சொல் வடிவங்களை எழுதப் பழகுதல்**

இது பற்றி பொதுப் பேச்சுத் தமிழைக் கற்றுக் கொள்வதற்குரிய வழிகள் என்ற பகுதியில் குறிப்பிட்டோம். அத்துடன் தமிழ் எழுத்துக்களும் எழுத்துப் பழக்கங்களும் என்ற முதல் பாடப்பகுதியைப் பார்த்து அதிலுள்ள செய்திகளையும் பயிற்சிகளையும் செய்து பாருங்கள்.

**அகராதித் துணைவன்**

தமிழ்ச் சொற்களின் வடிவம், எழுத்து முதலியவற்றில் எப்பொழுதும், தமிழ் அகராதி ஒன்றைப் புரட்டி ஐயத்தைப் போக்கிக் கொள்ளுங்கள். மொழியைச் சரிவரக் கையாள்வதற்கு அகராதியைத் தவிரச் சிறந்த துணைவன் வேறு இல்லை.

**2. சொற்களைச் சேர்த்து எழுதும்போது ஒற்று, சந்திப் பிழைகள் ஏற்படாத வண்ணம்** எழுதப் பழக வேண்டும். இதில் தெளிவடைவதற்கு, சொற் சேர்க்கையும் சந்திவிதிகளும் என்ற மூன்றாம் பாடத்தை நன்கு பயிலுங்கள்.

**3. இலக்கணப் பிழை, வாக்கியப் பிழை முதலியன இன்றி எழுதப் பழகிக் கொள்ள வேண்டும்.**

பல சமயங்களிலும் பேசும்போது இவற்றில் பிழைகள் ஏற்படா. ஆனால், எழுதும் போது இவற்றில் பிழைகள் ஏற்பட்டு விடும். எனவே கவனமாகப் பயிற்சி செய்ய வேண்டும். இதற்குத் தமிழ் வாக்கிய அமைப்பும் வகைகளும் என்ற இரண்டு பாடங்களையும் மறுபடியும் படித்துப் பயிற்சி செய்யுங்கள்.

**5. கலப்பு நடையைத் தவிர்த்தல்**

தமிழில் பேசும்பொழுதும் ஆங்கிலம், வடமொழி போன்ற சொற்களைப் பலர் அளவுக்கு மீறிக் கலந்து பேசுகிறார்கள். இது நடையின் அழகையும், சீர்மையையும் கெடுக்கும். இயன்றவரை மொழிக்கலப்பைத் தவிர்த்து நல்ல எளிய தமிழில் பேசவும் எழுதவும் பயில வேண்டும்.

**6. தவிர்க்க வேண்டிய பிழையான வடிவங்கள்**

| **பிழையான வடிவம்** | | **சரியான வடிவம்** |
|---|---|---|
| பொருத்து | — | பொறுத்து |
| முயர்ச்சி | — | முயற்சி |
| விக்கும் | — | விற்கும் |
| காட்ச்சி | — | காட்சி |
| எண்ணை | — | எண்ணெய் |
| இகட்ச்சி | — | இகழ்ச்சி |
| ஆயிதம் | — | ஆயுதம் |

இது தொடர்பாகப் பார்க்க வேண்டிய நூல்கள்:

1. **தமிழ்ப்பாதுகாப்பு நூற்றிரட்டு**, கழக வெளியீடு.
2. **லிப்கோ, தமிழ்-ஆங்கிலம் அகராதி —** பிற்சேர்க்கை.

**6.4.4. இலக்கிய, அறிவியல் தமிழை விளங்கிக் கொள்ளுதல்**
**இலக்கியத் தமிழை விளங்கிக் கொள்ளுதலும் அதற்குரிய வழிகளும்**

தமிழில் இன்று வருகிற சிறுகதை, நாவல், கவிதை முதலியவற்றை நாம் படித்துப் புரிந்து கொள்வதற்கு அதிகம் முயற்சி தேவையில்லை. அது போலவே நாடோடிப்பாடல்களைப் படித்துப் புரிந்து கொள்வதும் எளிதுதான்.

(எ-டு) ''வாட வெத்தலெ
வதங்க வெத்தலெ
வாய்க்கு நல்லால்லெ
நேத்து வச்ச
சந்தனப் பொட்டு
நெத்திக்கு நல்லால்லே''

இவ்வாறு பேச்சு மொழியை அப்படியே எழுதிவிடும் போது அவ்வாறே புரிந்து கொள்ள முடிகிறது.

கீழே கண்ட எடுத்துக்காட்டைப் பாருங்கள்.

**ஈயை வெட்டின கதை**

''ஒரு ராஜா பாட்டாளக்காறனுக்கிட்ட ஒரு வாள குடுத்துக் கிட்டு, 'இந்த கொட்டாரத்துல என்ன வந்தாலும் வெட்டிப் போடு'ன்னு சொல்லிக்கிட்டு ஒறங்கிஞரு.

கொஞ்ச நேரம் கழிஞ்சதும் ஒரு ஈச்சி வந்து ராஜாக்க மேல இருந்தது. ஒடன பட்டாளக்காறன் ஓங்கி வெட்டினான். ஈச்சி பறந்து போச்சி. ராஜா ரெண்டு துண்டா கெடந்தாரு''.

(தே. தேவதாஸ், திருவட்டார் வட்டார நாட்டுப்புறக் கதைகள்)

இது உங்களுக்குப் முழுமையாகப் புரிகிறதா? புரியவில்லை என்றால் இதனுடைய திருந்திய வடிவத்தைக் கீழே தருகிறோம்.

''ஓர் அரசர் தன் காவலாளியிடம் ஒரு வாளைக் கொடுத்துவிட்டு, அரண்மனையில் ஏதாவது நுழைந்தால் வெட்டிக் கொன்று விடுமாறு கூறிவிட்டுத் தூங்கினார். சிறிது நேரத்தில் ஓர் ஈ வந்து அரசனின் மீது அமர்ந்தது. உடனே காவலாளி அதனை வாளால் வெட்ட, ஈ பறந்து சென்றது. ஆனால் அரசர் வெட்டுண்டு இரண்டு துண்டாகக் கிடந்தார்."

இக்கதையில், முதலில் தரப்பட்டது நாட்டுப்புற வடிவம். அது வட்டாரச் சார்பு கொண்டது. ஆனால், இரண்டாவது தரப்பட்டது திருந்திய வடிவம்; அது தற்போதைய எழுத்துத் தமிழின் நடையில் அமைந்தது. பேச்சுத் தமிழில் உள்ளதைப் புரிந்து கொள்வதில் இடர்ப்பாடுகள் உள்ளன என்பது தெரிகிறதல்லவா? அதனால்தான், தமிழில் பேசுவது போல் நாம் எப்பொழுதும் எழுதுவது இல்லை; தமிழில் பேசுவதும் எழுதுவதும் வேறுபட்டிருக்கிறது என்பது இதன் மூலம் விளங்குகிறது அல்லவா?

அது போலவே பழங்காலத்தமிழ் இன்றைய தமிழிலிருந்து வேறுபட்டிருக்கிறது. இதனால் புறநானூற்றுப் பாடல் ஒன்றையோ, திருக்குறளையோ, சிலப்பதிகாரம், கம்பராமாயணத்தையோ, தேவாரத்தையோ படிக்கும் போது சில வேளை சில சொற்களுக்குப் பொருள் நமக்குப் புரிவதில்லை. இவற்றை நன்கு தெரிந்து கொள்ள நாம் என்ன செய்யலாம்? அதற்குச் சில வழிகளை இங்குக் கூறுகிறோம்.

1. பழைய பாடல்களுக்கு இன்று புரியக் கூடிய தமிழில் எழுதியுள்ள உரைகளையும், விளக்கங்களையும் பார்க்கலாம்; வல்லவர்களிடம் கேட்டு விளக்கம் பெறலாம்.
2. அடுத்து, அகராதியை எடுத்துப் புரட்டிப் பார்த்துப் பொருளும் விளக்கமும் பெறலாம்.
3. அகராதியில் விளங்காமல் இருக்கும் வாக்கிய அமைப்பு, இலக்கண அமைப்பு முதலியவற்றைத் தெரிந்து கொள்ள நன்னூல், தொல்காப்பியம் போன்ற பழைய இலக்கண நூல்களைப் பார்க்க வேண்டும்.

இத்தகைய பாடல்களைத் திரும்பத் திரும்பப் படித்துப் பார்ப்பதன் மூலம் பொருள் உணர்ச்சி ஏற்படும். பாடப்பகுதிகள் வருவதை ஊன்றிக் கற்றுப் பழைய மொழியின் இயல்பு பற்றிய அறிவை நாம் வளர்த்துக் கொள்ளலாம். இங்கே மாதிரிக்காகச் சிலவற்றைத் தருகிறோம்.

இலக்கிய எடுத்துக் காட்டுகளும் அருஞ்சொல் விளக்கமும்

1. ''யாதும் ஊரே யாவரும் கேளிர்''
   கேளிர் — உறவினர்
2. ''புலவர் பரிசில் கொண்மார் வந்தார்''
   பரிசில் — பரிசு; கொண்மார் — கொள்வதற்கு
3. ''பொன்னார் மேனியன் புலித்தோலை அரைக் கசைத்தான்''
   அரை — இடை; அசைத்தான் — உடுத்தான்
4. ''ஈயென்ன இரத்தல் இழிந்தன்று''
   இழிந்தன்று — இழிந்தது
5. ''ஈதல், இசைபட வாழ்தல்''
   ஈதல் — பிறர்க்கு ஈயவேண்டும் (ஈக!)
6. ''யாம் வருதும்''
   யாம் — நாம்; வருதும் — வருவோம்

**அறிவியல் தமிழைப் புரிந்து கொள்ளுதல்**

இன்று, இலக்கியம் படைக்கும் மொழியாக மட்டுமல்லாமல், அறிவியல் கருத்துக்களைப் படைக்கும் மொழியாகவும் தமிழ் மாறி

வருகிறது. தமிழிலேயே அறிவியல் கருத்துககளைப படிதது அறிந்து கொள்ளுகிற வாய்ப்பு இன்று ஏற்பட்டிருக்கிறது. ஆனால் நாம் தமிழில் வரும் அறிவியல் கருத்துக்களைப் படித்துப் புரிந்து கொள்வதில் சில சமயம் தொல்லைகள் உண்டு. எனவே, இதை எளிதாக்கிக் கற்க முயல வேண்டும்.

---

## 6.5 பத்திரிகைத் தமிழ்

இன்று நாம் ஏதாவது நாளேட்டையோ வார, மாத இதழையோ வாசிக்காத நாளே இல்லை எனலாம். பெரும்பாலும் நாம் வாசிக்கும் பத்திரிகைகளில் எளிய எழுத்துத் தமிழைப் பார்க்கிறோம்.

எனினும் பத்திரிகைகளில் சந்தி முதலியன போற்றப் பெறுவதில்லை. பத்திரிகைத் தமிழிலுள்ள நல்லவற்றை நாம் ஏற்றுப் போற்றலாம். ஏனையவற்றை விட்டு விடலாம்.

பத்திரிகை படிக்கும் வழக்கம் நல்ல பழக்கம். பத்திரிகைகளைப் படிக்கும் போது இனிமேல் அதிலுள்ள மொழி நடையையும், பயன்பாட்டையும் கூர்ந்து கவனியுங்கள்.

1. ஒரு நாளேட்டை எடுத்து வாசித்து அதிலுள்ள மொழி வழக்கைக் கூர்ந்து கவனிக்கவும். உங்களுக்கு தெரியாத சொற்கள் எத்தனை உள்ளன என்று பாருங்கள்.
2. மொழி வழக்கில் பிழைகள் இருந்தால் அவற்றைத் தொகுத்து வகைப்படுத்தவும்.

---

## 6.6 தொகுப்புரை

இப்பாடப் பகுதியில் பேச்சுத் தமிழில் காணப்படும் வேறுபாடுகள், பொதுப் பேச்சுத் தமிழின் இயல்புகள், அதைக் கற்கும் முறைகள், எழுத்துத் தமிழின் இயல்புகள், அதைச் செவ்வையாகப் பயன்படுத்துவதற்கான வழிமுறைகள், தவிர்க்க வேண்டிய வழக்குகள், இலக்கியத் தமிழ், அறிவியல் தமிழ், பத்திரிகைத் தமிழின் இயல்புகள் முதலியன விளக்கப்பட்டுள்ளன.

**தன் மதிப்பீடு:2 பயிற்சி**

நாட்டுப்புறப் பாடல் தொகுப்புகளை எடுத்து வைத்துக் கொண்டு, அவற்றிலுள்ள பேச்சு வழக்குகளை மாற்றித் தமிழாக்க முயலுங்கள்.

ஒரு பத்திரிகை நாளேடு அல்லது வார இதழை எடுத்து வைத்துக் கொண்டு, அவற்றிலுள்ள கதைகளில் காணப்படும் பேச்சுத் தமிழ், எழுத்துத் தமிழ்க் கூறுகளைக் கவனியுங்கள்.

உங்கள் வட்டாரத்தில்/உங்கள் சமூகத்தில் — சாதியில் வழங்கும் பத்து வட்டார வழக்குச் சொற்களை எழுதி அவற்றிற்குரிய பொதுத்தமிழ் வழக்காறுகளைத் தருக.

---

**தன் மதிப்பீடு: விடைகள்**

1. குறைவு, வைத்தான், பெண், புல், பிள்ளை. எண், இரண்டு.
2. ஆரடிச்சா ஏனழுதே அடிச்சாரை சொல்லியழு — நாட்டுப் புறப் பேச்சு நடை
   'ஆரடித்தார் ஏனழுதாய் அடித்தாரைச் சொல்லிஅழு' — திருத்திய நடை. இவ்வாறு வேறு பாடறிய வேண்டும்.
   சளி பிடிப்பதைச் சிலர் 'தடுமன்' என்பர். சில பகுதிகளில் பாட்டியை 'ஆச்சி' ன்பர். இது போன்ற வட்டார வழக்குகளைத் தேடித் தொகுக்க வேண்டும்.

3. ஒரு சமூகத்தில் 'ஆத்துக்குப் போகிறேன்' என்பார்கள். 'அகம்'—வீடு. இது குறிப்பிட்ட சமூகம் அல்லது சாதியில் காணப்படும் வட்டார வழக்கு. தஞ்சை வட்டாரத்தார் உட்காருங்கள் என்பதைக் 'குந்துங்கள்' என்பார்கள். இவை வட்டார வழக்கு. இத்தகையவற்றை வேறுபாடறிந்து தேடித் தொகுக்க வேண்டும்.